உ

# திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு

( ஸ்ரீ அபிராமிப் பட்டர் அருளிச் செயல்கள் உட்பட )



திருக்கடவூர் ஸ்ரீ அபிராமி அம்மை



புகைப்படம் : N. ராமக்ருஷ்ண

கால ஸம்ஹார மூர்த்தி - உத்ஸவர்

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

# திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு

[மூவர் தேவாரம், திருப்புகழ், அபிராமிப் பட்டர் ப்ரபந்தங்கள், அருட்புகழ் முதலியன அடங்கியது]

*

தொகுத்தளித்தோர் :
சென்னை-600 061, நங்கை நல்லூர்ப் பொங்கி மடாலயத்து
அருட்கவி – தவத்திரு
**ஸாதுராம் ஸ்வாமிகள்**

&

அவரது பூர்வாஸ்ரமத் தம்முனர்
''திருப்புகழ் நல்லிசைச் செல்வர்'', ''அருள்இசைமணி''
**ஸு. வே. ஸுப்ரம்மண்யன்,**
சென்னை-600 061.

*

வெளியிடுவோர் :
''பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்''
''ஸ்ரீ வைஷ்ணவி இல்லம்'',
எண்-4, 39 ஆம் தெரு, நங்கை நல்லூர்,
சென்னை-600 061.



நவம்பர்—1980

விலை ரூ. 10-00

முதற் பதிப்பு – 5000 ப்ரதிகள்

---

இந் நூலும் அருட்கவி ஸ்வாமிகளின் மற்ற
வெளியீடுகளும் கிடைக்கும் இடங்கள் :

1. ஸா. வே. ஸுப்ரம்மண்யன்,
   "ஸ்ரீ வைஷ்ணவி இல்லம்",
   எண்-4, 39 ஆம் தெரு,
   நங்கை நல்லூர், சென்னை-600 061.
2. "ஸ்ரீ வைஷ்ணவி மாதர் திருப்புகழ் ஸபை"
   D-2, டில்லிச் சாலை, வட்டம்-27,
   நெய்வேலி-3. (607 803) (தெ. ஆ. மா.)
3. "ஸ்ரீ பொங்கி மாதா திருப்புகழ் ஸங்கம்"
   E-10, ராஜேந்த்ர ப்ரஸாத் சாலை,
   வட்டம்-17, நெய்வேலி-607 801. (தெ ஆ. மா)
4. "வேல்மாறல் மன்றம்",
   157, நான்காவது குறுக்குச் சாலை,
   ஸோமேஸ்வர புரம், பெங்களூர்-560 008.
5. "ஸ்ரீ வைஷ்ணவி ஸத் ஸங்கம்"
   29, கவர்ன்மெண்ட் பெண்ட்லண்ட் ஆஸ்பத்ரி ரோடு,
   வேலூர்-632 001. (வ. ஆ. மா )
6. "பொங்கி மடாலயம்",
   பொங்கி மடாலயம் தெரு, (ஏ. ஜீ'ஸ் காலனி பின்புறம்)
   நங்கை நல்லூர், சென்னை-600 061.

---

THIRUKGHATAVOOR PRABHANDAT THIRATTU

---

அச்சிட்டோர் :

1. மநோரமா அச்சகம், சென்னை-600 014.
2. மெர்க்குரி ப்ரிண்டர்ஸ், சென்னை 600 004.

ஸ்ரீ பொங்கி க்ருபா

# பொருளடக்கம்

| வரிசை எண் | பொருள் | பாடல் தொகை | பக்க எண் |
|---|---|---|---|
| 9. | திருக்கடவூர்த் திருப்புகழ் (ஸ்ரீ அருணகிரிநாதர்) | 2 | 16 |
| 10. | க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழ் ... (காஞ்சிச் சிதம்பர முநிவர்) | 1 | 18 |
| 11. | திருக்கடவூர் உலாப் பகுதி ... (ஸ்ரீ ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள்) | 1 | 19 |
| | **III. ஸ்ரீ அபிராமிப் பட்டர் அருளிய நூல்கள்** | | |
| 12. | திருக்கடவூர்க் கள்ள விநாயகர் பதிகம் .. | 10 | 20 |
| 13. | திருக்கடவூர்க் காலஸம்ஹார மூர்த்தி பதிகம் - I | 10 | 22 |
| 14. | திருக்கடவூர்க் காலஸம்ஹார மூர்த்தி பதிகம் - II | 10 | 29 |
| 15. | திருக்கடவூர்க் கால ஸம்ஹார மூர்த்தி பதிகம் - III (பின் முடுகு) | 10 | 36 |
| 16. | அபிராமி அம்மை பதிகம் - I (காப்பும் நூலும்) | 12 | 38 |
| 17. | அபிராமி அம்மை பதிகம் - II (நூல்) | 11 | 46 |
| 18 | அபிராமி அம்மை பதிகம் - III | 10 | 53 |
| 19. | அபிராமி அந்தாதி - (அ) காப்பு | 1 | 58 |
| | அபிராமி அந்தாதி - (ஆ) நூல் | 100 | 58 |
| | அபிராமி அந்தாதி - (இ) நூற்பயன் | 1 | 75 |
| 20. | அபிராமி அம்மை மீது பிற துதிப் பாடல்கள் | 3 | 75 |
| | **IV. திருக்கடவூரைப் பற்றிய 20ஆம் நூற்றாண்டு நூல்கள்** | | |
| 21. | திருக்கடவூர்த் தலபுராண வசநத் துதிப்பாக்கள் (ஸ்ரீ ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள்) | 23 | 76 |
| 22. | திருக்கடவூர்க் கள்ளவாரணப் பிள்ளையார் திரு இரட்டை மணி மாலை (ஸ்ரீ ந. க. முத்துச் சிதம்பரச் செட்டியார் - கி. பி. 1937) | 20 | 85 |

உ

ஸ்ரீ பொங்கி மாதா துணை

# முகவுரை

## வீரட்டாநம்

''பூமன் ஶிரம்கண்டி அந்தகன் கோவல் புரம்அதிகை
மாமன் பறியல் ஜலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன்கட வூர்இந்தக் காஶிநியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் ஸேவகமே''

என்பது ஶிவபெருமான் வீற்றிருக்கும் அஷ்ட வீரட்ட ஸ்தலங்களைக் குறிக்கும் தனிப்பாடல். திருக்கண்டியூர், திருக்கோவலூர், திருஅதிகை, திருப்பறியலூர், திருவிற்குடி, திருவழுவூர், திருக்குறுக்கை, திருக்கடவூர் ஆகிய எட்டுத் தலங்களிலும் எம்பெருமான் ஶிவன் தன் வீரத்தைச் சிறக்கக் காட்டியுள்ளான்.

வீரத்தைக் காட்டிய ஸ்தாநம் (இடம்) 'வீர ஸ்தாநம்' ஆயிற்று. அச் சொல் தமிழ் மரபுப்படி (மூலஸ்தாநம் என்பது மூலட்டாநம் என்று ஆவது போல) 'வீரட்டாநம்' என்றாயிற்று. 'வீரட்டாநம்' என்பது குறுகிப் பின் 'வீரட்டம்' என்றாகியது. ஆக எட்டு வீர ஸ்தாநங்களும் ''அஷ்ட வீரட்டம்'' எனப்பட்டன.

## திருக்கடவூர் வீரட்டம்

இவ் வரிசையுள் கடைசியில் எட்டாவதாக உள்ளது திருக்கடவூர். மார்க்கண்டேயனுக்காகச் ஶிவபெருமான் யமனை உதைத்தருளிய தலம் இது.

மாயூரத்திலிருந்து தரங்கம் பாடிக்குச் செல்லும் வழியில் 21 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள இக் கோயில், தமிழக அரசு அறநிலையத் துறையின் ஆளுகையின் கீழ்த் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதிநத்தாரால் நன்கு பரிபாலிக்கப் பெற்று வருகிறது.

கள்ள விநாயகர், அம்ருத கடேஶ்வரர், அபிராமி அம்மை, கால ஸம்ஹார மூர்த்தி (உத்ஸவ விக்ரஹ ரூபத்தில்), திருப்புகழ்ப் பாடல் பெற்ற முருகவேள் ஆகிய முக்ய மூர்த்திகள் பக்தர்களுக்கு இத் தலத்தில் அருள் பாலித்துக் கொண்டிருக்கின்றனர்.

## அபிராமி அம்மை ஸந்நிதி

காஞ்சிபுரம், மதுரை, திருஆனைக்கா, ஶங்கர நாராயணர் கோயில், கந்யாகுமரி ஆகிய தலங்களைப் போலத் திருக்கடவூரிலும் உலகுக்கு அருமருந்தாக உள்ள அம்பிகை அபிராமியின் ஸந்நிதி மிகவும் விஶேஷமானது; பக்தர்களைக் கவரும் ஒன்று.

முந்நூறாண்டுகட்கு முன்னர் வாழ்ந்த ஶ்ரீ அபிராமிப் பட்டர் என்ற பெரியவர் இத் தலத்து விநாயகர், ஶிவபெருமான், அம்பிகை, கால ஸம்ஹார மூர்த்தி ஆகிய மூர்த்திகளின் மீது அருமையான தோத்திரப் பாக்களைப் பாடியுள்ளார்.

அவற்றுள் அபிராமியம்மை மீது பாடப்பெற்ற அபிராமி அந்தாதி என்னும் நூல் கடந்த 20 ஆண்டுகளாக மிக மிக ப்ரபல மாகி வந்துள்ளது. மற்றைய பதிகப் பாக்களும் கடந்த 10 ஆண்டு களாகப் பலராலும் பாடப் பெற்று வருகின்றன. அந்தப் பக்தர் யார் எனக் காண்போம்.

### அபிராமி அந்தாதி & அபிராமிப் பட்ட பாரதிகளின் வரலாற்றுச் சுருக்கம்

சோழவள நாட்டில், தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்துக் கருகில் உள்ள திருத்தலம் திருக்கடவூர். இது அஷ்ட வீரட்ட ஸ்தலங்களுள் எட்டாவது; ஶிவபிரான் காலனை ஸம்ஹரித்த திருப்பதி; இவ்வூர்ப் பெருமான் திருநாமம் 'அம்ருத கடேஶ்வரர்'; அம்மை திருநாமம் 'அபிராமி அம்பிகை'. அம்ருத கலஶமே ஶிவலிங்கமாய் இருத்தலால், 'அம்ருத கடேஶ்வரர்' என இறை வனுக்கும், 'கட ஊர்' (கடம் - குடம்) என ஊருக்கும் பெயர்கள் ஏற்பட்டன. 'ராமம்' என்றால் அழகு எனப் பொருள். 'அபிராமம்' எனில் மிக்க அழகு. அபிராமி என்பது பெண்பாற் பெயர் ஆதலின் 'பேரழகி' எனப் பொருள் தரும். குங்கிலியக் கலய நாயனார், காரி நாயனார், உய்ய வந்த தேவ நாயனார் ஆகியோர் அவதரித்து முக்தி பெற்றதும், மூவர் முதலிகளால் தேவாரமும், அருணகிரிநாத ஸ்வாமிகளால் திருப்புகழும் பாடப் பெற்றதும், சிலப்பதிகாரத் தில் வரும் மாதவி வாழ்ந்ததும் ஆன அந்தத் திருக்கடவூரில் அம்ருத லிங்கையர் தம்பதிகளுக்கு 'ஸுப்ரம்மண்யன்' என்னும் சிறுவன் தோன்றினன்; கல்வி, கேள்விகளிற் சிறந்து, திருக்கடவூர் ஆலய மூர்த்திகளின்பால், இடையறா அன்பும், பக்தியும் கொண்டு

வழிபாடு செய்து வந்தனன்; பக்தி வழிபாட்டில் மிகுதியாக ஈடு பட்டுத் தன்காலத்தை எல்லாம் அபிராமி அம்மை ஸந்நிதியிலேயே பெரிதும் கழித்து வந்தனன்; திருக்கடவூர் ஆலயத்தில் 'பட்ட ரா'கத் திநமும் பஞ்சாங்க படநம் செய்யும் தொண்டையும் ஏற்றுச் செய்து வந்தனன். அதுமுதல் சிறுவன் ''அபிராமிப் பட்ட''ரென அழைக்கப் பெற்றான். தெய்விகச் செழுமையும் அருட்புலமையும் பட்டரிடம் கூடின.

'அகலிடத்தார் ஆசாரத்தினின்று அகன்று' வாழ்ந்து வந்த பட்டர், ஏனையோரைப் போல மக்களிடம் நெருங்கிப் பழகா திருந்தார். அம்பிகை வழிபாட்டைப் பட்டர் முக்யமாகக் கொண்டமையே இதற்குக் காரணம் என்பதை அறியாத மக்கள் பலர், இவரைச் 'செருக்குற்றவர்', என்றும் 'பைத்தியம்' என்றும் 'தவறான வழிபாட்டு முறைகளைக் கைக் கொண்டவர்' என்றும் பொறாமையால் தூற்றத் தலைப்பட்டனர். பட்டரோ எதற்கும் அஞ்சாதவராய் ''நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை பூணது வாகக்'' கொண்டு, தம் 'தேவி உபாஸனையை'த் தொடர்ந்து செய்து வந்தார்.

இங்ஙனம் இருக்கையில், தஞ்சையை ஆண்டு வந்த ஸரபோஜி மன்னன் ஒரு தை அமாவாஸை அன்று பூம்புகார்க் கடலில் நீராடிவிட்டுத் திரும்புகையில், திருக்கடவூர் சேர்ந்து, அபிராமி தேவியைத் தர்ஸிக்க வந்தான். அன்னை ஸந்நிதியில் தன்னை மறந்த நிலையில் பட்டர் இருந்தது கண்ட ஊரார், அதுதான் தருணம் என்று கருதி உலகியலிற் புகாத பட்டர் மீது புகார்கள் பலவற்றை மன்னனிடம் கூறினர். உண்மையை அறிய எண்ணிய மன்னன் பட்டரை அணுகி, அன்று அமாவாஸை எவ்வளவு நாழிகை மிகுதி இருக்கிறது'' எனக் கேட்டனன். தேவியின் திருமுக மண்டலமான சந்த்ரனைக் கண்ட வண்ணமே இருந்த பட்டர் ஒளியில் மூழ்கியவராய், இருளை அறியாதவராய், 'இன்று பௌர்ணமி, அன்றோ!' எனப் பதில் அளித்தார். அது கேட்டு மன்னனும் முன்பு ஊரார் சொன்னவை உண்மை என்றே எண்ணி, 'அமாவாஸையன்று பௌர்ணமி என மாற்றிக் கூறிய மைக்கு ராஜ தண்டனை உண்டு' எனப் பட்டரிடம் கோபமாகக் கூறி வெருட்டிச் சென்று விட்டான்.

தன்னுணர்வு எய்திய பிறகு, பட்டர் நிகழ்ந்தவற்றை அறிந் தார். ''உள் நின்ற நாவுக்கு உரையாடி'' யாக உள்ள ''அவளும்

பொய் சொல்லாள்'' என்ற உண்மையை நிலை நாட்ட விரும்பினர்.

அபிராமி அம்மை ஸந்நிதிக்கு எதிரில் குழி ஒன்றில் தீ வளர்த்து, நூறு கயிறுகளில் தொங்குமாறு அமைக்கப் பெற்ற ஓர் உறியைத் தீயின் மேல் தொங்க விட்டு, அந்த உறியில் தான் அமர்ந்து கொண்டு, அபிராமி அம்மை மீது 'உதிக்கின்ற' எனத் தொடங்கி அந்தாதி முறையில் பாட்டமைத்துப் பாட்டுக்கொரு கயிருக அறுத்து வந்தார். ''விழிக்கே அருளுண்டு'' என்று தொடங்கும் 79-ஆம் பாட்டைப் பாடி முடித்தவுடன், தேவி தன் இடது காதின் தாடங்கத்தை வானில் வீசி எறியப் பௌர்ணமி நிலவாக அஃது ஒளியுடன் திகழ்ந்தது.

அமாவாஸை அன்று பௌர்ணமி நிலவு நிலவுவது கண்டு மன்னன் அதிசயித்துப், பட்டரிடம் ஓடோடி வந்து அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் பிழை பொறுக்குமாறு வேண்டினன். 'அரசனுலன்ரு தமக்கு அபிராமி அன்னையின் அருள் கிடைத்தது' என்று அடக்கத்துடன் கூறினர் பட்டர். பிறகு மிகுதியுள்ள 21 பாடல்களையும் இனிது பாடி 'உதிக்கின்றவே' என 100ஆம் பாடலை முடித்து, முதலையும் முடிவையும் மண்டலிக்கச் செய்து வேந்தன் விருப்பப்படி அந்தாதியைப் பூர்த்தி செய்து, அம்மை பாதத்தில் ஸமர்ப்பித்தார் பட்டர்.

மன்னனும் மகிழ்ந்து வரிவிலக்குப் பெற்ற நிலங்களையும் கள* மான்யங்களையும் பட்டர்க்கு அளித்தான்; மேலும் 'பாரதி' என்ற பட்டத்தையும் வழங்கிக் கௌரவித்தான். 'வேண்டாமை

---

*ஸரபோஜி ராஜன் அபிராமிப் பட்டருக்குக் களமான்யமாக அளித்த நெல் விபரம் தெரிவிக்கும் செப்புப் பட்டயத்தின் பாடற் ப்ரதி

[பதினன்கு சீர்க் கழி நெடிலடி ஆசிரிய வ்ருத்தம்]

சீர்பெறு சகாப்தம்ஓர் ஆயிரத் தறுநூறு
சேரு(ம்)முப் பான்ஒன்றின் மேல்
திகழ்தரு வ்ரோதிவரு ஷத்தினிற் சித்திரைத்
திங்கள்பதி னேழ்திகதி யில்

ஒன்றை' அடைந்த பட்டர் அவற்றை மறுக்க, ஸந்ததியார்க்காகவாவது ஏற்குமாறு வேந்தன் வேண்டப், பட்டரும் ஒருவாறு ஸம்மதித்தார். அன்று முதல் அபிராமிப் பட்டர் 'அபிராமிப் பட்ட பாரதி' ஆனார். [அவருடைய ஸந்ததியார் (திருச்சி ஸ்ரீ அம்ருத பாரதியார், ஸ்ரீ ராமைய பாரதிகள்) அப் பட்டத்தோடு இன்றும் வாழ்ந்து வருகின்றனர்; கிடைக்கும் களமான்ய நெல்லைக் கொண்டு நவராத்ரி தோறும் அபிராமி யம்மைக்கு விழாச் செய்தும் தொழுகின்றனர்.]

அபிராமிப் பட்டர் பிறகு கள்ள விநாயகர் மீதும், அபிராமி அம்மை மீதும், காலஸம்ஹார மூர்த்தி மீதும் சில பல பதிகங்கள் பாடிச், சிறப்பாக வாழ்ந்து, இறுதியில் தேவியின் திருவடி நிழலை அடைந்தார்.

## பழைய வெளியீடுகள்

மேற்கண்ட அபிராமிப் பட்டருக்கு முன்னதாகத் திருக்கடவூர்ப் பெருமானை ஸம்பந்தர், திருநாவுக்கரசர், ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் ஆகிய மூவர் முதலிகள், அருணகிரிநாத ஸ்வாமிகள் ஆதியோர் பாடியுள்ளனர். ஆகவே மூவர் தேவாரம், அபிராமிப்

---

பார்புகழ் வியாழன்நாள் துதியைஅநு ஷம்பூர்வ
பக்ஷநல் ஸுபதிநத் தில்
பஞ்சலட் சணவர்அபி ராமிபட் டர்க்கரசர்
பட்டோலை இட்ட விபரம்

கார்பரவு கடவைநாற் பதுகலம் பதினாறு
கணித(ம்)மூ வைந்தொர் ஆக்கூர்
கவின்நாற் பதின்கலம்ஓர் நல்லாடை திருவிடைக்
கழிகலம் பதினைந்து மாம்

ஏர்பெருகு செம்பொன்செய் பள்ளிஇரு பான்கலம்
எளப்போஜ மஹராஜர் போன்ம்
எங்கள்ஸர போஜிமனன் மகமையுடன் விபரமாய்
எந்நாளும் அருளும் வகையே.

பட்டர் பாடிய பாடல்கள் இரண்டையும் சேர்த்துப் பண்டைக் காலத்தில் ஆன்ருேர் ஒரே புத்தகமாக வெளியிட்டிருக்கின்றனர்.

'திருக்கடவூர்த் தல வரலாறு' என்னும் புத்தகம் தருமபுர ஆதீன வெளியீடாக வெளிவந்துளது. 'திருக்கடவூர்த் திருமுறையும் ப்ரபந்தங்களும்' என்ற நூல் திருக்கடவூர் ஸ்ரீ அம்ருத கடேஶ்வரர் மஹா கும்பாபிஷேக நினைவு மலராக 21-4-1957இல் திருப்பனந்தாள் காஶிமடத்து வெளியீடாக வந்தது இந்நூலில் மூவர் தேவாரமும், அபிராமிப் பட்டர் நூல்களுமே இடம் பெற்றன.

இப் பதிப்பில் இருந்த சில குறைகள் நீக்கப் பெற்றுக் கோடம்பாக்கம் 'ஶேகர் எம்போரியத்தாரா'ல் 21-8-1974இல் ''அபிராமி பட்டர் ப்ரபந்தங்கள்'' வெளியிடப் பெற்றது. இதன் பின்னர் அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்களைக் கொண்டு ''திருக்கடவூர் ஸ்ரீ அபிராமிப் பட்டர் அருளிய நூல்கள்'' என்னும் புத்தகத்தை (ஒரு பதிப்பை) 1974 நவம்பரில் வெளியிட்டார், சென்னை - வடதிருமுல்லைவாயில் - அம்பாபுரி, ஸ்ரீ வைஷ்ணவி ஆலய ஸ்தாபகர் ஸ்ரீ ஸ்வாமி அண்வாநந்தாஜி அவர்கள். இந்த ஸமயத்திலும் ஓலை ஏடுகளைப் பார்த்து ஒப்பிட்டுத் திருத்தவோ, செப்பம் செய்யவோ போதிய அவகாஶம் இல்லாததால் திருத்தமான ஒரு பதிப்பு, ஓலை ஏடுகளையும், ஏனைய ப்ரதிகளையும் ஒப்பு நோக்கி அச்சிட வேண்டும் என்ற அவா நீண்ட நாளாக இருந்து வந்தது. இதற்குள் பலர் அபிராமி அந்தாதியையும், (தவறான பாடங்களோடு) அபிராமியம்மை பதிகங்களைச் சிலரும் அச்சிட்டிருந்தனர்.

## புதிய பதிப்புக்கு முயற்சி

எங்கள் ஆசையை நிறைவேற்றப் பழைய அச்சுப் பதிப்புகளை ஆய்ந்தோம். தெளிவு ஏற்படவில்லை. ஶிவபிரான், அம்மை பதிகங்களில் தான் பல இடங்கள் ஸரியாக இல்லை. திருவான்மியூரில் ப்ரம்மஸ்ரீ உ. வே. ஸ்வாமி நாதையர் நூல் நிலையத்தில் ஓலை ஏடுகளை ஆய்ந்தோம். பெரிய பயன் ஏதும் கிட்டவில்லை. பின்னர் அபிராமிப் பட்டர் பரம்பரையைச் சேர்ந்தவர்களான திருச்சி ஸ்ரீ நா. ராமைய பாரதி அவர்கள் மூலம் அன்னார் வீட்டுக் கையெழுத்துப் ப்ரதிகள் மூன்றும் கிடைத்தன. அபிராமியம்மை பதிகம் எழுதப் பெற்ற ஓர் ஓலை ஏட்டையும் 28-1-1975இல் ஸ்ரீ நா. அம்ருத பாரதியார் அவர்கள் திருச்சியில் கொணர, அதையும் நேரே காண முடிந்தது.

இவற்றைப் பார்த்ததன் மூலம் அபிராமி அந்தாதியிலும் பதிகங்களிலும் பல அரிய பாட பேதங்கள் கிடைத்தன.

சிறப்பான பாட பேதங்கள் சில

அபிராமி அந்தாதியில், பாடல் 21இல் 'ஶங்கரர் அண் முலையாள்', பாடல்-22இல் 'படியின் பரிமளமே' [பூமியின் வாஸனையே!] பாடல் 26இல் 'ஏழ்உலகத்தினை' இவை கருதத் தக்கன.

கள்ள வாரணப் பிள்ளையார் பதிகம் - கடைசிப் பாடல், வரி-3 : 'அப்பொருளாம் அமுதீஶர் மகிழ்அபிராமிஅம்மை'

கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்-1இல் கடைசி வரிகள் : ''கநவளம் சிறந்த கடவை அம் பதியாய்''. பாடல் 8இல் 'கார்மயில் ஒகரமாய் நடிக்கும்;.

அபிராமி அந்தாதி நூற்பயன் பாடலில் மூன்றும் வரியானது தற்காலத்தில் மாற்றப்பட்டுள்ளது போல் இராமல் 'காத்தானை அங்குச பாஶாங்குஶமும் கரும்பும் அங்கை' என்று இருத்தலே ஶாக்த ஸம்ப்ரதாய முறைப்படி ஸரியானது என்று தேவி உபாஸகர்கள் கருதுகின்றனர். குசங்கள் இரண்டும் அம்புகளைக் குறிக்குமாம்.

இத் திரட்டில் சேர்க்கப் பெற்ற பாடல்கள்

இந்தப் பதிப்பில் மூவர் தேவாரப் பாக்களை அடுத்துத் திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திரு அந்தாதி, பெரிய புராணத்தில் கண்ணப்ப நாயனார், குங்கிலியக் கலயார், கணம்புல்லர், காரி நாயனார் புராணங்கள், திருத்தொண்டர் புராண ஸாரம், திருவிளையாடற் புராணம் ஆகிய நூல்களில் திருக்கடவூர் பற்றிய குறிப்பு வரும் பாக்கள் இடம் பெற்றுள்ளன. திருக்கடவூர்த் திருப்புகழ்கள் இரண்டு பாடல்களும், க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழில் திருக்கடவூர்ப் பாடலும் சேர்க்கப் பெற்றுள்ளன.

## திருக்கடவூர் உலா*

ஸ்ரீ உ. வே. ஸ்வாமிநாதையர் நூல் நிலையத்தில் 'திருக்கடவூர் உலாப்' ப்ரதி ஒன்று, அபிராமி அந்தாதி, பதிகங்கள் ஓலை ஏடுகளைத் தேடிப் பார்க்கச் சென்ற போது கிடைத்தது. உலாவின் மூலப் பதிப்பு 1917இல் வந்திருக்கின்றது. 1941இல் சுருமபுர ஆதீநம் இந்த உலாவைக் குறிப்புரையுடன் வெளியிட்டுள்ளது. காப்புச் செய்யுள் ஒன்றுடன் கண்ணிகள் 458 கொண்டுள்ள இந் நூலை இயற்றியுள்ளவர், திருக்கடவூர்க் கோயில் ஓதுவார் பரம்பரையைச் சேர்ந்த ஸ்ரீ ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள்† ஆவார். இவர் 19ஆம் நூற்றாண்டினர். இவ் வுலா நூலில், மார்க்கண்டேயன் அருள் பெற்ற செய்தி கூறும் பகுதி மட்டும் [கண்ணி 25 முதல் 34 வரை] இங்குச் சேர்க்கப் பெற்றுள்ளது

## கள்ள விநாயகர் பதிகம்

இப் பதிகத்தை ஸமீப காலத்தில் மக்கள் பாடத் தொடங்கியுள்ளனர். இரண்டாம் பாடல், அபிராமி அந்தாதி 10ஆம் பாடலின் கருத்தது.

## கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்

அபிராமிப் பட்டர் பாடிய 'சுடர்மணிக் குழையும்' எனத் தொடங்கும் பதிகத்துக்கு 'அம்ருத கடேஸ்வரர் பதிகம்' எனப் பழைய பதிப்புகளில் தலைப்பு இடப் பெற்றுள்ளது. ஆனால் இதில் ஒவ்வொரு பாடலும் 'காலனைக் காய்ந்த தற்பரனே' என்றே முடிவதால் கால ஸம்ஹார மூர்த்தி பதிகம் - 1 என இங்குத் தலைப்பிடப் பெற்றது. 'அந்தரத் தம்ரர்' எனத்தொடங்கும் இரண்டாம்

---

*இந் நூலில் அச்சுப் ப்ரதியில் பல இடங்களில் இலக்கண அமைதி குறைந்து காணப்படுகிறது. மூலத்திலிருந்து ப்ரதி செய்த போதோ, அச்சிட்ட போதோ தவறுகள் நேர்ந்திருக்க வேண்டும். இஃது ஆய்வுக் குரியது.

†இவர், திருக்கடவூர், திருநள்ளாற்றுப் புராணங்கள், மயிலைக் கோவை, மயிலை அந்தாதி இவற்றையும் பாடியுள்ளதாகத் தெரிகின்றது.

பதிகம் முன்னமேயே 'கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்' என்ற தலைப்பில் உள்ளது. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் 'கால கால கடவூரர்' என வருவதும் தலைப்புக்குப் பொருத்தமாக உள்ளது ஆக, எந்தப் பதிகத்திலும், அந்தப் பதிகப் பாக்கள் அனைத்திலுமே அமுத கடேஶர் என்ற பெயர் வரவில்லை. ஆதலால் இப் பதிப்பில் 'அமிர்த கடேஶர் பதிகம்' என்ற தலைப்பே இடம் பெறவில்லை.

கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்-Iஇல் ''செயல் பணிவிடையாய்'' எனத் தொடங்கும் கடைசிப் பாடல், ''ஜபோ ஜல்ப : ஶில்பம்'' என்னும் 'ஸௌந்தர்ய லஹரீ'ப் பாடலையும் ''ஆத்மா த்வம்'' என்னும் 'ஶிவமாநஸ பூஜா' ஶ்லோகத்தையும் நினைவூட்டும்.

கால ஸம்ஹார மூர்த்தி பதிகங்களும், அபிராமியம்மை பதிகங்கள் இரண்டும் திருத்தமுற நல்ல பாடங்களுடன் இப்பதிப்பில் அச்சிடபட்டுள்ளன என்பது பழைய பதிப்புகளைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, ஒவ்வொரு பாடலாக ஒப்பு நோக்குவார்க்கு மட்டுமே புலப்படும்.

## அபிராமி அம்மை மீது புதிய பாடல்கள்

அபிராமி அம்மை மீது கட்டளைக் கலிப்பாவில் அமைந்த புதிய பதிகம் ஒன்றும் இப்பதிப்பில் (பக்கம் - 53இல்) சேர்க்கப் பெற்றுள்ளது. இப் பதிகம் ஸ்ரீ நா. ராமையபாரதியார் அவர்கள் அளித்த மூன்று கைஎழுத்துப் ப்ரதிகளிலும் அபிராமியம்மை பதிகங்கட்கு அடுத்தாற் போல் எழுதப்பட்டிருந்ததால், மற்ற இரு பதிகங்களைப் போல இதனையும் அபிராமிப் பட்டரே பாடியிருக்க வேண்டும் எனத் தோன்றுவதால், மூன்றுவது பதிகமாகப் பட்டரின் வாக்காகவே சேர்த்து அச்சிடப் பெற்றுள்ளது.

இவை தவிர 'அபிராம வல்லித் தாயே' என முடியும் ஒரு பாடலையும் (பாடல் 248), ஒரு தனிப் பதிகத்தின் இரு பாடல்களோ எனத் தோன்றும் வகையில் 'அபிராம ஸவுந்தரியே' என முடியும் இரண்டு உதிரிப் பாடல்களையும் (பாடல்கள் 249, 250) இதிற் காணலாம் இம் மூன்று பாடல்களும் கூடக் கையெழுத்துப் ப்ரதியிலேயே காணப்படுகின்றன ஆசிரியர் இன்னார் எனத் தெரியவில்லை.

## திருக்கடவூர்த் தலபுராண வசநத் துதிப் பாக்கள்

திருவான்மியூர்க் ''கலாக்ஷேத்ரா'' - உ. வே. ஸ்வாமிநாதையர் நூல் நிலையத்தில் அபிராமியம்மை பதிக ஓலை ஏடுகளைப் பார்க்கச் சென்ற போது, ஸ்ரீ பாலக்ருஷ்ண தீக்ஷிதர் என்பவர் வடமொழியினின்று தமிழில் மொழி பெயர்த்த 'திருக்கடவூர்த் தலபுராண வசநம்' என்னும் நூல் கிடைத்தது. ஆகவே வடமொழியில் திருக்கடவூர்த் தல புராணம் இருக்கின்றது என்பது நிச்சயமாகின்றது. இப் புராணம் ப்ரம்ம தேவ, அமுதலிங்க, அபிராமி, அமுதுண்ட, தேவஶர்மா, சந்த்ர பூஷண, தர்பஶீல, கால நிர்ணய, ம்ருகண்டு தவம்புரி, மார்க்கண்டேயர் உற்பத்தி, மார்க்கண்டேய ஸ்தல வாஸ, மார்க்கண்டேயர் பூஜித்த, கால ஸம்வாத, கால ஸம்ஹார, கங்கை, பிஞ்ஜில, சித்ரவ்ரத, தர்மராஜ, ப்ரமதி ராஜ, ரத்நாகர, ஶிபிச் சக்ரவர்த்தி, பஞ்சரவி, ப்ரம்மபுரீஶ, ஸோம ஶர்ம, ஶிவஶர்ம, ஹேம கிரீட, நவதுர்க்கா, ரத்ந கைடப, மூர்த்தி - ஸ்தல - தீர்த்த - ஸர்க்கங்கள் என்று 29 அத்யாயங்களைக் கொண்டது.

'கும்பகோணம் ஸர்ஜ் வேங்கடராம தீக்ஷிதர் குமாரர், (திருக்கடவூரில் வாழ்ந்தவர்) பாலக்ருஷ்ண தீக்ஷிதர் அவர்கள் மொழி பெயர்த்தருளியதை ஷை ஊர் முத்து ஐயர் தெரிந்து ஷை ஊர் ம்ருத்யுஞ்ஜய தேஶிகர் சென்னை மஹாலக்ஷ்மி விலாஸ அச்சியந்திர ஶாலையில் பதித்தது (1905 பதிப்பு), என்னும் குறிப்பு அதில் காணப்படுகிறது.

தமிழில் செய்யுள் வடிவில் திருக்கடவூர் ஸ்தலபுராணத்தை **ஸ்ரீ** ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள் பாடியுள்ளதாகத் தெரிகிறது. புராண வசநத் துதிப்பாக்கள் மட்டும் இத் திரட்டில் இடம் பெறுகின்றன. ஸ்தல புராண வசநத்தை யாரேனும் மறுபதிப்பாக அச்சிட்டு உதவினால் பெரிய ஶிவ புண்யக் கைங்கர்யமாக இருக்கும்.

## கள்ள வாரணப் பிள்ளையார் திருஇரட்டை மணிமாலை

உ. வே. ஸா. நூல் நிலயத்தில் புத்தக வடிவில் கிடைத்த, ஸ்ரீ ந க. முத்துச் சிதம்பரச் செட்டியார் என்னும் அன்பர் இயற்றிய (வெண்பா, கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆன) ஸ்ரீ கள்ள வாரணப் பிள்ளையார் திரு இரட்டை மணி மாலை என்னும் ப்ரபந்தமும் இத் திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளது.

## கீழைக் கோபுர வாயில் முநீச்வர ஸ்வாமி பதிகம்

ஷை செட்டியார் அவர்களே இயற்றிய திருக்கடவூர்க் கோயில் கீழைக் கோபுர வாயில் முநீஸ்வர ஸ்வாமி பதிகப் புத்தகம், ஸ்ரீ நா. அம்ருத பாரதியார் அவர்கள் மூலம் கிடைத்தது. அதுவும் சேர்க்கப்பட்டுள்ளது.

## திருக்கடவூர் அருட்புகழ்

அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்கள் பூர்வாச்ர மத்தில் "அருட்கவி ஸேதுராமன்" என வழங்கப் பெற்று வந்த போது (28–2–1963இல்) திருக்கடவூர் சென்றிருந்த ஸமயம் விநாயகர், சிவபெருமான், அம்பிகை ஸந்நிதிகளில் நின்று அருட் கவியாக, ஆசுகவியாகப் பாடியுள்ள அருட்புகழ்ப் பாடல்கள் 49உம், 25–5–1976இல் முருகவேள் மீது பாடிய 16 சந்தப் பாக்களும் இந்தத் திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளன. தல புராணத்தில் கூறப் பெற்ற பல குறிப்புகள் சந்தப் பாடல்களுள் காணக் கிடக்கின்றமை அறியற் பாலது.

## அபிராமியம்மை (ராக மாலிகைக்) கீர்த்தனை

திரு. நா. அம்ருத பாரதியார், திரு. ராமைய பாரதியார் இவர்கள் வீட்டுக் கை ஏட்டுப் புத்தகத்தில், அபிராமியம்மை மீது 'நித்ய கல்யாணியே' எனத் தொடங்கும் ராக மாலிகைக் கீர்த்தனை ஒன்று காணப்பட்டது. இதன் ஆசிரியர் யாரெனத் தெரியவில்லை. இதையும் சேர்த்திருக்கிறோம்.

## அபிராமிப் பட்டரைப் பற்றிய பாக்கள்

அபிராமிப் பட்டர் மீது அருட்கவி - தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்கள் பாடியுள்ள ஒரு தனிப்பாடல், வெண்பா வால் அமைந்த ஒரு துதிப் பதிகம் இவற்றுடன் பாலகவி ப்ரம்மஸ்ரீ முத்து. கோ. ராமன் (திராவிடக் கவிமணி வே. முத்துஸ்வாமி ஐயர் அவர்கள் புதல்வர்) அவர்கள் பாடிய இரு துதிப் பாக்களும் ஈண்டுச் சேர்க்கப்பட்டுள்ளன.

## திருக்கடவூர் — முக்யக் குறிப்புகள்

திருக்கடவூர் பற்றிய பல விஷயங்கள் திருக்கடவூர் — முக்யக் குறிப்புகள் என்னும் தலைப்பில் முகவுரைக்கு அடுத்தாற்போல் இடம் பெற்றுள்ளன.

## வடமொழி (க்ரந்த) எழுத்துகள்

ஈச்வரி, சங்கு, சங்கரன், சிவபிரான், சிலம் என்பது போன்ற சொற்களில் வரும் 'ச' காரத்தைப் பிழையின்றி உச்சரிக்க உதவும் வகையில் ஶ், ஶ, ஶி, ஶீ என்ற வடமொழிக் க்ரந்த எழுத்துகள் இப் பதிப்பில் கையாளப்பட்டுள்ளன. வடமொழிச் சொற்களை யாவரும் பிழையின்றி உச்சரிக்க வகை செய்யும் நிலையில் ஆங்காங்கு ஸ, ஜ, ஷ, ஹ, க்ஷ என்ற எழுத்துகள் இடப் பட்டுள்ளன. எழுத்துகளைப் பிழையின்றி உச்சரிக்க வழிவகை செய்ய வேண்டும் என்கின்ற எண்ணம் தான் இதற்குக் காரணம்.

## நன்றி

அபிராமி அந்தாதி ஓலை ஏடுகள், திருக்கடவூர் உலா, திருக் கடவூர்த் தலபுராண வசநம் ஆகியவற்றை எங்கள் பார்வைக்குத் தந்துதவிய உ. வே. ஸா நூல் நிலையத்தார்க்கு எங்கள் நன்றி.

அபிராமி அந்தாதி, பட்டர் பாடிய பதிகங்கள், புதிய பதிகம், கீர்த்தனை இவை அடங்கிய தம் வீட்டுக் கையெழுத்துப் ப்ரதிகளையும், அபிராமியம்மை பதிக ஓலைச் சுவடிகளையும் நாங்கள் பார்க்கக் கொடுத்துதவிய, அபிராமிப் பட்டர் பரம்பரையினரான திரு. நா. அம்ருத பாரதியார், திரு. நா. ராமைய பாரதியார் இரு வர்க்கும் எங்கள் பெரு நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுக் கொடுத்த "மநோரமா அச்சகத் தார்," "மெர்க்குரி ப்ரிண்டர்ஸ்" ஆகியோர்க்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

திருக்கடவூர் பற்றிய பழைய நூல்கள் ஏதேனும் இத் திரட்டில் அச்சிடப் பெருமல் விடுபட்டுப் போயிருப்பின், அதுபற்றி வாசகர்கள் தெரிவிப்பின் அடுத்த பதிப்பிலேனும் சேர்க்க ஹேதுவாகும் ஆதலின் அவஶ்யம் தெரிவிக்கப் ப்ரார்த்திக்கிறேன். இந்நூலில் குற்றங் குறைகள் ஏதேனும் இருப்பின் பெரியோர்கள் பொறுத்தருளி உணர்த்துவார்களாக !

இந் நூலை அச்சிடத் தொடங்கி நீண்ட இடைவெளிக்குப் பிறகும் பல தடைகளுக்குப் பின்னும் இப் புத்தகம் அச்சாகி முழு வடிவம் பெறச் செய்த ஸ்ரீ அபிராமியம்மை ஸமேத ஸ்ரீ அம்ருத கடேஶ்வரரின் திருவடிகளைப் போற்றுகின்றேன்.

பூர்வாஶ்ரமத்தில் 'ஸ்ரீமதி தர்மாம்பா' என்ற பெயரைத் தாங்கியிருந்து பின் துறவறம் மேற்கொண்டு மஹா ஸமாதி அடைந்து விட்ட எம் தாயார் ஸந்யாஸினி மோநாம்பா அம்மையார் அவர்களுக்கு ஸமர்ப்பணம் செய்யப் பெற்ற இந் நூல் அன்னாரின் முதலாவது ஆராதனை விழாவின் போது (17–11–1980 இல்) வெளியிடப் பெறுகின்றது.

இந் நூலை எல்லோரும் வாங்கித் தாமும் படித்தும், பிறரையும் வாங்கிப் படிக்க வைத்தும், வெளியீட்டாளர்களை ஊக்குவித்து அபிராமியம்மை உடனுறை அம்ருதகடேஶ்வரரின் திருவருளுக்குப் பாத்திரர்களாக வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

ஸா. வே. ஸுப்ரம்மண்யன்,
மேனேஜிங் ட்ரஸ்டி,
பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்,

'ஸ்ரீ வைஷ்ணவி இல்லம்',
எண், 4, 39ஆம் தெரு,
நங்கை நல்லூர்,
சென்னை - 600 061.
20 - 10 - 1980

# திருக்கடவூர்

## (முக்யக் குறிப்புகள்)

1. கணபதி :— கள்ளவாரணப் பிள்ளையார் (சோர கணபதி).

2. ஸ்வாமி :— அம்ருத கடேஶ்வரர், வீரட்டாநேஶ்வரர்.

3. அம்பிகை :— அபிராமி (அபிராமவல்லி, அபிராமஸுந்தரி),

4. மூர்த்திகள் :— கால ஸம்ஹார மூர்த்தி, வில்வாரண்யேஶ்வரர், பாபஹரேஶ்வரர், புண்யவர்த்தநேஶ்வரர்.

5. ஸ்தலம் :— வீரட்டாநம் (எட்டாவது), எமனை உதைத்த தலம்.

6. ஸ்தலத்தின் பிற பெயர்கள் :— வில்வாரண்யம், பிஞ்ஜிலவநம், கடபுரி, கடவை, கடவூர் வீரட்டம், ம்ருத்யுஞ்ஜய க்ஷேத்ரம். தவஸித்திபுரம், ப்ரஹ்ம ரந்த்ர ஸ்தலம்.

7. ஸ்தலத்துக்குத் தற்போது வழங்கும் பெயர் :— திருக்கடையூர். (திருக்கடவூர் என்பது திருக்கடையூர் எனத் தவறாக வழங்கப் படுகிறது).

[குறிப்பு :— திருக்கடவூர் எனவே புகைவண்டி நிலையப் பேரையும் மாற்றி. ஊரையும் வழங்க ஏற்பாடு செய்தல் ஆஸ்த்திகர்களின் கடமை].

8. அருகில் உள்ள ஸ்தலங்கள் :— கிழக்கே 1½ கி.மீ. இல் *திருக்கடவூர் மயாநம். மேற்கே 4½ கி.மீ. இல் திரு ஆக்கூர்த் தான்தோன்றி மாடம். வடமேற்கில் 4½ கி.மீ. இல் திருததலைச்சங்காடு. தென்மேற்கில் 6 கி.மீ. இல் திருவிடைக்கழி (குராவடிக் குமரன் கோயில்).

---

*திருக்கடவூர் மயாநம் :— மூவர் பாடல் பெற்ற ஒரு ஶிவ ஸ்தலம். இது "திருமெய்ஞ்ஞானம்" என வழங்கப்படுகிறது. ஸ்வாமி—ப்ரஹ்மபுரீஶ்வரர் தேவாரத்திலும் கல்வெட்டிலும் உள்ளபடி பெரிய பெருமான் அடிகள். அம்பிகை-மலர்க்குழல் மின் அம்மை, அமலக்குயமின் அம்மை, வாடா முலையாள் (தேவாரப் பெயர்). தீர்த்தம் - காஶி தீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம்

9. ஸ்தல வ்ருக்ஷங்கள் :— வில்வம், பிஞ்ஜிலம்.

10. விஸேஷ புஷ்பம் :— பிஞ்ஜிலம். இது மார்க்கண்டேயர் வரவழைத்த கங்கையொடு வந்த ஒருவகை ஜாதி மல்லிகைக்கொடி.

11. தீர்த்தங்கள் :— ஶிவகங்கை (மார்க்கண்டேய தீர்த்தம்), கால தீர்த்தம், அம்ருத புஷ்கரணி.

12. ப்ரபந்தங்கள் :— திருக்கடைக் காப்பு, தேவாரம், திருப் பாட்டு எனும் மூவர் தேவாரம், திருப்புகழ், க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழ், திருக்கடவூர் உலா, அபிராமிப் பட்டர் ப்ரபந்தங் கள், திருக்கடவூர்த் தல புராணம் (வடமொழி) & வசநம் (தமிழ்), திருக்கடவூர்க் கள்ள வாரணப் பிள்ளையார் திரு இரட்டை மணி மாலை, திருக்கடவூர் அருட்புகழ், கிழைக் கோபுர வாயில் முநீஶ்வர ஸ்வாமி பதிகம் ஆகியவை.

13. பாடியவர்கள் :— ஸம்பந்தர், அப்பர், ஸுந்தரர், நம்பி யாண்டார் நம்பிகள், சேக்கிழார், உமாபதி ஶிவாசார்யர், பரஞ் ஜோதி முநிவர், அருணகிரிநாதர், காஞ்சிச் சிதம்பர முநிவர், அபி ராமிப் பட்டர், ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள், அம்ருத லிங்க ஓதுவார், பாலக்ருஷ்ண தீக்ஷிதர், ந. க. முத்துச் சிதம்பரச் செட்டியார், அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்.

14. கல்வெட்டுகள் :— எட்டுக் கல்வெட்டுகளால் ஊர்ப்பெயர், உடையார் காலகால தேவர் படையேவிய திருக்கடவூர், திரு வீரட்ட நாட்டுப் பெருமானடிகள் உட்படையேவிய திருக்கடவூர்,

---

என்னும் ஶிவ கங்கை). ஶிவபெருமான் ப்ரஹ்மனை நீறுக்கி மீண் டும் உயிர்ப்பித்து, அவனுக்குப் படைப்புத் தொழிலை அநுக்ரஹித்த ஸ்தலம். இதனால் இத் தலம் ''ப்ரஹ்ம ஸ்மஶாநம்'' என்றும் பெயர் பெறும். ஸ்வாமியைத் திருஞாந ஸம்பந்தர் 11 பாக்களா லும், திருநாவுக்கரஶர் 8 பாக்களாலும், ஸுந்தரர் 10 பாக்களா லும் பாடியுள்ளனர். முருகவேள் - ஶத்ரு ஸம்ஹார ஶிங்கார வடி வேலர்; ஸ்கந்த ஷஷ்டியில் ஹேம கிரீட மன்னனால் விழா எடுத்துத் தொழப் பெற்றவர். (திருக்கடவூர்த் தல புராண வசநத்தில் 26ஆவது ஸர்க்கம் பார்க்க). திருக்கடவூர் உலாவின் ஆசிரியரான ஶ்ரீ ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகளின் இரண்டாம் குமார ராம் அம்ருத லிங்க ஓதுவார் அவர்கள் ஶத்ரு ஸம்ஹார ஶிங்கார வடிவேலன் மீது பாடியுள்ள ஒரு துதியை இந் நூலில் பாடல் 364இன் குறிப்புரையில் காணலாம். இவ்வூர் ந. க. முத்துச்சிதம் பரச் செட்டியார் அவர்களும் இம் முருகவேளைப் பாடியுள்ளனர்.

இராசராசேச்சுவரர் உட்பாதமேவிய திருக்கடவூர் என்றும் ஸ்வாமி பெயர் காலகால தேவர், குலோத்துங்க சோழீச்சரமுடையார், விக்ரம சோழீச்சரமுடையார் என்றும் இன்னும் பல செய்திகளும் தெரிய வருகின்றன.

15. நாடு :— சோழ நாடு.

16. மாவட்டம், தாலுக்கா :— தஞ்சை மாவட்டம், மாயூரம் தாலுக்கா.

17. இருப்பிடம் :— காவிரி ஆற்றின் தென்கரை; மாயூரத்துக்குக் கிழக்கு-தரங்கம் பாடிக்குப் போகும் வழியில் 21 கிலோ மீட்டர் (13 கல்) தொலைவு.

18. கோயில் :— பெரியது. பேருந்தில் செல்லலாம்.

19 ஸந்நிதி :— ஸ்வாமி ஸந்நிதி மேற்குப் பார்த்தது. அம்பிகை ஸந்நிதி கிழக்குப் பார்த்தது.

20. விஶேஷ ஸந்நிதிகள் :— அம்ருத கடேஶ்வரர், அபிராமி அம்மை, காலஸம்ஹார மூர்த்தி, இவர்தம் இடது பக்கத்தில் வாலாம்பிகை அம்மை, யமன் வடக்குப் பார்த்துத் தொழுகை.

21. ஸ்தல நாயன்மார்கள், பெரியோர்கள் :— காரி நாயனார், குங்கிலியக் கலய நாயனார், திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார், மார்க்கண்டேய மஹரிஷி, அபிராமிப் பட்டர், (சிலப்பதிகாரத்தில் பேசப் பெறும்) மாதவி

22. புகை வண்டி நிலையம் :— திருக்கடையூர் (TIRUKKADAI-YUR).

23. ஆளுகை :— திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீநம். (அபிராமி ஸந்நிதி—பிச்சைக் கட்டளை ட்ரஸ்ட்)

24. மேற்பார்வை :— இந்து ஸமய அறநிலையத் துறை, தமிழ் நாடு.

25. விஶேஷ உத்ஸவங்கள் :— கார்த்திகை ஸோமவாரங்களில் 1008 ஶங்காபிஷேகம், பங்குனி ஶுக்ல பக்ஷ அஶ்விநியில் மார்க்கண்டேய தீர்த்த (திருக்கடவூர் மயாநக் கிணறு) ஸ்நாநம்.

26. பிற விஶேஷங்கள் :— நவக்ரஹ ஸந்நிதி இல்லாமை. மார்க்கண்டேய தீர்த்த ஜலத்தை அம்ருத கடேஶ்வரருக்கு மட்டுமே அபிஷேகிப்பது.

## 27. வழிபட்டோர் :

1 அகஸ்த்யர்
2 அபிராமிப் பட்டர்
3 அம்ருதலிங்க ஓதுவார்
4 அருணகிரிநாத ஸ்வாமிகள்
5 அஷ்டதிக் பாலகர்கள்
6 இந்த்ரன்
7 இந்த்ராணி
8 உய்ய வந்த தேவ நாயனர்
9 கபிலர்
10 காக்கை
11 காரி நாயனர்
12 காலன் (யம தூதன்)
13 குங்கிலியக் கலய நாயனர்
14 குணவதி
15 சந்த்ரபூஷண ராஜன்
16 சந்த்ரன்
17 சித்ரவ்ரதன்
18 சிதம்பர முநிவர் — காஞ்சி
19 சோழமன்னன் ஒருவன்
20 ஜாம்பவான்
21 தர்ம ஶீலன்
22 திருஞாந ஸம்பந்த மூர்த்தி நாயனர்
23 திருநாவுக்கரசு நாயனர்
24 தேவஶர்மன்
25 தேவர்கள்
26 நவதுர்க்கை
27 ப்ரமதி ராஜன்
28 ப்ரஹ்மா
29 ப்ராஹ்மி
30 பஞ்சஸஹர்யர்
31 பாலக்ருஷ்ண தீக்ஷிதர்
32 பாலக்ருஷ்ண தீக்ஷிதரின் குரு
33 புலஸ்த்யர்
34 புலி
35 பூமிதேவி
36 ம்ருகண்டு மஹரிஷி
37 மருத்வதி
38 மார்க்கண்டேயர்
39 முத்துச்சிதம்பரச் செட்டியார்
40 முநிவர்கள்
41 யமதர்ம ராஜன்
42 யம படர்கள்
43 ரத்ந கைடன்
44 ரத்நாகரன்
45 ராமபிரான்
46 ராக்ஷஸர்கள்
47 ருதுக்கள் ஆறு
48 லக்ஷ்மி
49 வ்யாஸர்
50 வாலகில்யர்
51 வாஸுகி
52 விஷ்ணு
53 ஶக்தி
54 ஶிபிச் சக்ரவர்த்தி
55 ஶிவஶர்மா
56 ஸப்த கந்நிகள்
57 ஸப்த ரிஷிகள்
58 ஸரபோஜி மன்னர்
59 ஸரஸ்வதி
60 ஸாதுராம் ஸ்வாமிகள்
61 ஸித்தர்கள்
62 ஸுந்தரமூர்த்தி நாயனர்
63 ஸுப்ரம்மண்யக் கவிராஜர்
64 ஸோமஶர்மா
65 ஹநுமான்
66 ஹேம கிரீடன்

ஸ்ரீ பொங்கி க்ருபா

# திருஇடைக்கழி

முருகப் பெருமானுக்கு உகந்த பல தலங்களுள் திருவிடைக் கழியும் ஒன்று. திருப்புகழ்ப் பாடல்கள், திருவேளைக்காரன் வகுப்பு, பூத வேதாள வகுப்பு, பொருகளத் தலகை வகுப்பு, வேடிச்சி காவலன் வகுப்பு, மயில் வ்ருத்தம், வேல் வ்ருத்தம், கந்தர் அநுபூதி ஆகியவற்றுள் அருணகிரிநாத ஸ்வாமிகள் திருவிடைக் கழியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள்.

குராமரத்தின் அடியில் கோயில் கொண்டுள்ள குமரன் மீது சேந்தனார் பாடியுள்ள திருவிசைப்பாப் பதிகம் சைவப் பன்னிரு திருமுறை (ஒன்பதாம் திருமுறை)யில் அணி செய்கின்றது.

காஞ்சிச் சிதம்பர முநிவர் பாடிய க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழில் ஒரு பாடல் திருவிடைக்கழிக்கு உளது.

த்ரிஶிரபுரம் மஹா வித்வான் ஸ்ரீ மீநாக்ஷி ஸுந்தரம் பிள்ளையவர்கள் திருவிடைக்கழி முருகன் மீது பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார்.

அருட்கவி - தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அருளியுள்ள அருட்புகழ்ச் சந்தப் பாக்களும் இவ்வூர்க்கு உள்ளன.

பதினைந்து கல்வெட்டுகள் இக்கோயிலில் காணப்படுகின்றன. ஸங்க காலத்தில் ''குராப்பள்ளி'' என வழங்கிய ஊர் இதுவே என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

நிரம்ப அழகிய தேஶிகர், குரவை லிங்கன் ஆகிய இருவர் தனித் தனித் தல புராணம் பாடியுள்ளனர். தலத் தரு (ஸ்தல வ்ருக்ஷம்) திருக் குரா.

லிங்கத் திருமேனியுடன் முருகப் பெருமானின் கருவறையின் உட்புறத்தில் காட்சி அளிக்கும் ஶிவபெருமானின் திருநாமம் ''பாப நாஶர்'' என்பதாம். அம்பிகைக்குத் தனி ஸந்நிதி இல்லை.

(அபயம்) வலது கை, இடையில் (வரதம்) இடது கை இவற்று டன் ஒரு திருமுகம் கொண்டு கிழக்கு நோக்கி, நின்ற திருக்கோலத் தில் உள்ள முருக மூர்த்தியின் வடிவம் மிக மிக அழகுடையது. தெய்வயானைக்கு மட்டும் ஸந்நிதி உளது. வள்ளியம்மைக்கு ஸந்நிதி இல்லை.

ஐநூற்று விநாயகர் கோயிலில் 16 விநாயகர் திருவுருவங்கள் உள்ளன.

ஹிரண்யாஸுர ஸம்ஹார மூர்த்தியான உத்ஸவர் வலது, இடது கரங்களில் முறையே வேலும் வில்லும் ஏந்தி நிற்கிறார்.

நாக ஸ்தலம், முக்தி ஸ்தலம் என்றெல்லாம் புகழப் பெறும் இந்த க்ஷேத்ரம், தஞ்சை மாவட்டம் மாயூரத்துக்கருகில் திருக்கடவூரிலிருந்து தென் மேற்கே 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

ராஜ கோபுரத் திருப்பணி தற்பொழுது மும்முரமாக நடைபெற்று வருகின்றது.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில், வேதியியல் துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றும் ''திருவிடைக்கழித் தொண்டர்'' திரு. ஆ. மங்கலமுடையார் அவர்கள் இக்கோயிலின் வளர்ச்சிக்கும் திருப்பணிக்கும் பெரிதும் பாடுபட்டு வருகின்றார்கள்.

இடைக்கழி காணீர்! இடைக்கழி காணீர்!
இடர் களை முருகன்வாழ் இடைக்கழி காணீர்!
(பதிப்பாளர்)

---

## பிழை திருத்தம்

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 13 | 57 | 1 | வாய்ந்த சீர் | வாய்ந்த நீர் |
| 20 | 74 | 3 | என்றைக்கு | என்றைக்கு(ம்) |
| 20 | 74 | 3 | நல்குவையோ? | நல் குவையே! |
| 48 | 128 | 12 | குலவகிரி | குலவுகிரி |
| 74 | கீழ்க்குறிப்பு | | ஸ்ரஞைகதி | ஸ்ரஞைகதி |
| 98 | 316 | 15 | கட்(டு) விழ்த்(து) | கட்(டு) அவிழ்த்(து) |
| 99 | 317 | 7 | வன்ப(ல்)லைக் | வன்க(ண்)ணைக் |
| 103 | 338 | 24 | அண்ணு திரை | அண்ணர் திரை |
| 103 | — | 26 | ஆதிரையான் | ஆர்திரையான் |
| 107 | 348 | 15 | விழி காணும் | விழி காணில் |
| 121 | 360 | 12 | ஆள்பவள | ஆள்பவள் |
| 219 | — | கடைசி | கும ரர் | குமாரர் |

ஸ்ரீ வைஷ்ணவி துணை

# திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு

## I. சைவப் பன்னிரு திருமுறை

## 1. திருஞாந ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் தேவாரம்

மூன்றும் திருமுறை பண்—காந்தார பஞ்சமம்

திருக்கடவூர் வீரட்டம்

(கலி நிலைத்துறை)

ராகம்—கேதார கௌளம்] [தாளம்—த்ரிபுடை

**1**

திருச்சிற்றம்பலம்

ஜடைஉடை யானும்நெய் ஆடலா னும்சரி கோவண
உடைஉடை யானும்மை ஆர்ந்தஒண் கண்உமை கேள்வனும்
கடைஉடை நன்னெடு மாடம்ஓங் கும்கட வூர்தனுள்
விடைஉடை அண்ணலும் வீரட்டா நத்தரன் *அல்லனே? (1)

**2**

எரிதரு வார்ஜடை யானும்வெள் ளைஎரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னும்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா நத்தரன் அல்லனே? (2)

**3**

நாதனும் நள்ளிருள் ஆடினா னும்நளிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு ஏறியும்
காதலர் தண்கட வூரினா னும்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா நத்தரன் அல்லனே? (3)

---

*இப் பதிகம் முழுவதிலும் "வீரட்டா நத்தரன் நல்லனே" எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

**4**

மழுஅமர் செல்வனும் மாசிலா தபல பூத(ம்)முன்
முழவொலி யாழ்குழல் மொந்தைகொட் டமுது காட்டிடைக்
கழல்வளர் கால்குஞ்சித் தாடினு னும்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா நத்தரன் அல்லனே? (4)

**5**

சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினு னும்சுழல் வாயதோர்
படமணி நாகம்அ ரைக்கசைத் தபர மேஷ்டியும்
கடமணி மாஉரித் தோலினு னும்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா நத்தரன் அல்லனே? (5)

**6**

பண்பொலி நான்மறை பாடிஆ டிப்பல ஊர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வான் இன்ஒளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் திங்களா னும்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா நத்தரன் அல்லனே? (6)

**7**

செவ்வழ லாய்நிலன் ஆகிநின் றசிவ மூர்த்தியும்
முவ்வழல் நான்மறை ஐந்தும்ஆ யமுநி கேள்வனும்
கவ்வழல் வாய்க்கத நாகம்ஆர்த் தான்கட வூர்தனுள்
வெவ்வழல் ஏந்துகை வீரட்டா நத்தரன் அல்லனே? (7)

**8**

அடிஇரண் டோர்உடம் பைஞ்ஞான்கி ருபது தோள்தச
முடிஉடை வேந்தனை மூர்க்கழித் தமுதல் மூர்த்தியும்
கடிகம ழும்பொழில் சூழும்அந் தண்கட வூர்தனுள்
வெடிதலை ஏந்தியும் வீரட்டா நத்தரன் அல்லனே? (8)

**9**

வரைகுடை யாமழை தாங்கினு னும்வளர் போதின்கண்
புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே
கரைகடல் சூழ்வையம் காக்கின்று னும்கட வூர்தனுள்
விரைகமழ் பூம்பொழில் வீரட்டா நத்தரன் அல்லனே? (9)

10

தேரரும் மாசுகொள் மேனியா ரும்தெளி யாததோர்
ஆரரும் சொற்பொருள் ஆகிநின் றஎம தாதியான்
கார்இளங் கொன்றைவெண் திங்களா னும்கட வூர்தனுள்
வீரமும் சேர்கழல் வீரட்டா நத்தரன் அல்லனே? (10)

11

வெந்தவெண் ணீறணி வீரட்டா நத்துறை வேந்தனை
அந்தணர் தம்கட வூர்உளா னைஅணி காழியான்
சந்தம்எல் லாம்அடிச் சாத்தவல் லமறை ஞாநஸம்
பந்தன செந்தமிழ் பாடிஆ டக்கெடும் பாவமே. (11)

திருச்சிற்றம்பலம்

(திருஞாந ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் தேவாரப் பதிகம் முற்றும்.)

# 2. திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தேவாரம்

## (அ) நான்காம் திருமுறை—திருநேரிசை—பண்-கொல்லி

(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

நவரோஸ்] [ஆதி

12

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின்! விளக்குத்
[ தூபம்
உள்ளத்த திரிஒன் றேற்றி உணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலும் கடவூர்வீ ரட்ட னரே. (1)

13

மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மையல் எய்தில்
விண்ணிடைத் தரும ராஜன் வேண்டினல் விலக்கு வார்ஆர்?
பண்ணிடைச் சுவைகள் பாடி ஆடிடும் பக்தர்க் கென்றும்
கண்ணிடை மணியர் போலும் கடவூர்வீ ரட்ட னரே. (2)

**14**

பொருத்திய குரம்பை தன்னுள் பொய்ந்நடை செலுத்து
[கின்றீர்!
ஒருத்தனை உணர மாட்டீர்! உள்ளத்திற் கொடுமை நீக்கீர்!
வருத்தின களிறு தன்னை *வருந்துமா வருத்த வல்லார்
கருத்தினில் இருப்பர் போலும் கடவூர்வீ ரட்ட னாரே. (3)

**15**

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பக்தர் ஆகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை உள்ளே
[வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல் லார்க்குக்
கரும்பினில் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட னாரே. (4)

**16**

தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவா றொன்றும் இன்றி
விலக்குவார் இலாமை யாலே விளக்கத்தில் கோழி
[போன்றேன்
மலக்குவார் மநத்தின் உள்ளே காலனார் தமர்கள் வந்து
கலக்கநான் கலங்கு கின்றேன் கடவூர்வீ ரட்ட னீரே! (5)

**17**

பழிஉடை யாக்கை தன்னில் பாழுக்கே நீர்இ றைத்து
வழிஇடை வாழ மாட்டேன் மாயமும் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப் பட்டுக்
கழிஇடைத் தோணி போன்றேன் கடவூர்வீ ரட்ட னீரே! (6)

**18**

மாயத்தை அறிய மாட்டேன் மையல்கொள் மநத்தன் ஆகிப்
பேயொத்துக் கூகை ஆனேன் பிஞ்ஞகா! பிறப்பொன் றில்லீ!
நேயத்தால் நினைய மாட்டேன் நீதனே! நீச னேன்நான்
காயத்தைக் கழிக்க மாட்டேன் கடவூர்வீ ரட்ட னீரே! (7)

---

*'வருத்துமா வருத்த' என்ற பாடம் பழைய ப்ரதிகளில் அச்சுப் பிழையோ எனத் தோன்றுகிறது.

19

பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீர்இ றைத்தேன்
உற்றலால் கயவர் தேருர் என்னும்கட் டுரையோ டொத்தேன்
எற்றுளேன் என்செய் கேன்நான் இடும்பையால் ஞானம் ஏதும்
கற்றிலேன் களைகண் காணேன் கடவூர்வீ ரட்ட னீரே! (8)

20

சேலின்நேர் அனைய கண்ணார் திறம்விட்டு சிவனுக் கன்பாய்ப்
பாலும்நல் தயிர்நெய் யோடு பலபல ஆட்டி என்றும்
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டற் காக அன்று
காலனை உதைப்பர் போலும்! கடவூர்வீ ரட்ட னாரே. (9)

21

முந்துரு இருவ ரோடு மூவரும் ஆயி னாரும்
இந்திர னோடு தேவர் இருடிகள் இன்பம் செய்ய
வந்திரு பதுகள் தோளால் எடுத்தவன் வலியை வாட்டிக்
கந்திரு வங்கள் கேட்டார் கடவூர்வீ ரட்ட னாரே. (10)

திருச்சிற்றம்பலம்

(ஆ) நான்காம் திருமுறை—திருவிருத்தம்—பண்-கொல்லி
(கட்டளைக் கலித்துறை)

பைரவி] [சுத்தாங்கம்

22

திருச்சிற்றம்பலம்

மருட்டுயர் தீரஅன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவாள் எயிற்றெரி போலும்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெம் கூற்றம் பதைப்ப உதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (1)

23

பதத்தெழு மந்திரம் அஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணிதன் இன்உயிர் உண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புனல் ஆறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (2)

**24**

கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்
நெருப்புமிழ் கண்ணினன் நீள்புனற் கங்கையும் பொங்கரவும்
பரப்பிய செஞ்ஜடைப் பால்வண்ணன் காலனைப் [பண்டொருகால்
உரப்பிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (3)

**25**

மறித்திகழ் கையினன் வானவர் கோனை மந(ம்)மகிழ்ந்து
குறித்தெழு மாணிதன் ஆருயிர் கொள்வான் கொதித்த [சிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேல்உடைக் காலனைத் தான்அலற
உறுக்கிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (4)

**26**

குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமொ டர்ச்சித்த மாணிதன் ஆருயிர் கொள்ளவந்த
தழற்பொதி மூவிலை வேல்உடைக் காலனைத் தான்அலற
உழக்கிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (5)

**27**

பாலனுக் காய்அன்று பாற்கடல் ஈந்து பணைத்தெழுந்த
ஆலினிற் கீழ்இருந் தாரணம் ஓதி அருமுநிக்காய்ச்
சூலமும் பாசமும் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த
காலனைக் காய்ந்த பிரான்கட வூர்உறை உத்தமனே. (6)

**28**

படர்ஜடைக் கொன்றையும் பந்நக மாலை பணிகயிரு
உடைதலை கோத்துழல் மேனியன் உண்பலிக் [கென்றுழல்வோன்
சுடர்பொதி மூவிலை வேல்உடைக் காலனைத் துண்டமதா
உடறிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (7)

29

வெண்டலை மாலையும் கங்கை கரோடி விரிஜடைமேல்
* பெண்டனி நாயகன் பேய்உகந் தாடும் பெருந்தகையான்
கண்டனி நெற்றியன் காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்த பிரான்கட வூர்உறை உத்தமனே. (8)

30

கேழல் அதாகிக் கிளறிய கேசவன் காண்பரிதாய்
வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டஅம் மாலவற்கன்(று)
ஆழியும் ஈந்து அடுதிறல் காலனை அன்றடர்த்து
ஊழியும் ஆய பிரான்கட வூர்உறை உத்தமனே. (9)

31

தேன்திகழ் கொன்றையும் கூவிள மாலை திருமுடிமேல்
ஆன்திகழ் ஐந்துகந் தாடும் பிரான்மலை ஆர்த்தெடுத்த
கூன்திகழ் வாள்அரக் கன்முடி பத்தும் குலைந்துவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே. (10)

திருச்சிற்றம்பலம்

(இ) ஐந்தாம் திருமுறை—திருக்குறுந்தொகை
பண்-இந்தளம்

(கலி வ்ருத்தம்)

நாத நாம க்ரியை] [ஆதி

32

திருச்சிற்றம்பலம்

மலைக்கொள் ஆனை மயக்கிய வல்வினை
நிலைக்கொள் ளானை நினைப்புறு நெஞ்சமே!
கொலைக்கை யானையும் கொன்றிடும் ஆதலால்
கலைக்கை யானைகண் டீர்!கட வூரரே. (1)

33

வெள்ளி மால்வரை போல்வதொர் ஆனையார்
உள்ள வாறெனை உள்புகும் ஆனையார்
கொள்ளம் ஆகிய கோயிலுள் ஆனையார்
கள்ள ஆனைகண் டீர்!கட வூரரே. (2)

---

*'பெண்(டு) அணி நாயகன்' என்றும் பாடம்.

**34**

ஞானம் ஆகிய நன்குணர் ஆனையார்
ஊனை வேவ உருக்கிய ஆனையார்
வேனல் ஆனை உரித்துமை அஞ்சவே
கானல் ஆனைகண் டீர்!கட வூரரே. (3)

**35**

ஆலம் உண்டழ காயதொர் ஆனையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்
கோலம் ஆய கொழுஞ்சுடர் ஆனையார்
கால ஆனைகண் டீர்!கட வூரரே. (4)

**36**

அளித்த ஆன்அஞ்சும் ஆடிய ஆனையார்
வெளுத்த நீள்கொடி ஏறுடை ஆனையார்
எளித்த வேழத்தை எள்குவித் தானையார்
களித்த ஆனைகண் டீர்!கட வூரரே. (5)

**37**

விடுத்த மால்வரை விண்ணுற ஆனையார்
தொடுத்த மால்வரை தூயதொர் ஆனையார்
கடுத்த காலனைக் காய்ந்ததொர் ஆனையார்
கடுத்த ஆனைகண் டீர்!கட வூரரே. (6)

**38**

மண்ணு ளாரை மயக்குறும் ஆனையார்
எண்ணு ளார்பலர் ஏத்திடும் ஆனையார்
விண்ணு ளார்பல ரும்அறி ஆனையார்
கண்ணுள் ஆனைகண் டீர்!கட வூரரே. (7)

**39**

சினக்கும் செம்பவ ளத்திரள் ஆனையார்
மனக்கும் வல்வினை தீர்த்திடும் ஆனையார்
அனைக்கும் அன்புடை யார்மநத் தானையார்
கனைக்கும் ஆனைகண் டீர்!கட வூரரே. (8)

**40**

வேதம் ஆகிய வெம்சுடர் ஆனையார்
நீதி யால்நிலன் ஆகிய ஆனையார்
ஓதி ஊழி தெரிந்துணர் ஆனையார்
காதல் ஆனைகண் டீர்!கட வூரரே. (9)

**41**

நீண்ட மாலொடு நான்முகன் தானுமாய்க்
காண்டும் என்றுபுக் கார்கள் இருவரும்
மாண்ட ஆர்அழல் ஆகிய ஆனையார்
காண்டல் ஆனைகண் டீர்!கட வூரரே. (10)

**42**

அடுத்து வந்த இலங்கையர் மன்னனை
எடுத்த தோள்கள் இறநெரித் தானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததொர் ஆனையார்
கடுக்கை யானைகண் டீர்!கட வூரரே. (11)

திருச்சிற்றம்பலம்

(திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தேவாரப் பதிகம் முற்றும்)

## 3. ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகள் தேவாரம்

ஏழாம் திருமுறை பண்—நட்ட ராகம்

(கலி நிலைத்துறை)

பந்து வராளி] [ரூபகம்

**43**

திருச்சிற்றம்பலம்

பொடிஆர் மேனியனே! புரி நூல்ஒரு பாற்பொருந்த
வடிஆர் மூவிலைவேல் வளர் *கங்கையின் மங்கையொடும்
கடிஆர் கொன்றையனே! கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகேள்! என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (1)

---

*'அங்கையின் மங்கை' என்றும் பாடம்.

**44**

பிறைஆ ரும்ஜடையாய்! பிர மன்தலை யில்பலிகொள்
மறைஆர் வானவனே! மறை யின்பொருள் ஆனவனே!
கறைஆ ரும்மிடற்றுய்! கட வூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா! என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (2)

**45**

அன்று லின்நிழற்கீழ் அறம் நால்வர்க் கருள்புரிந்து
கொன்றுய்! காலன்உயிர் கொடுத் தாய்!மறை யோனுக்குமான்
கன்று ரும்கரவா! கட வூர்த்திரு வீரட்டத்துள்
என்று தைபெருமான்! எனக் கார்துணை? நீஅலதே! (3)

**46**

போரா ரும்கரியின் உரி போர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையாள் ஒரு பாகம் மகிழ்ந்தவனே!
காரா ரும்மிடற்றுய்! கட வூர்தனுள் வீரட்டாநத்(து)
ஆரா என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (4)

**47**

மையார் கண்டத்தினுய்! மத மாஉரி போர்த்தவனே!
பொய்யா தென்னுயிருள் புகுந் தாய்! இன்னம் போந்தறியாய்!
கையார் ஆடரவா! கட வூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா! என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (5)

**48**

மண்ணீர் தீவெளிகால் வரு பூதங்கள் ஆகிமற்றும்
பெண்ணோ டாண்அலியாய்ப் பிற வாஉரு ஆனவனே!
*கண்ணார் உண்மணியே! கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா! என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (6)

**49**

எரிஆர் புன்ஜடைமேல் இள நாகம் அணிந்தவனே!
நரிஆ ரும்சுடலை நகு வெண்டலை கொண்டவனே!
கரிஆர் ஈர்உரியாய்! கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அரியாய்! என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (7)

---

* 'கண்ணா ரும்மணியே!' என்றும் பாடம்.

50

வேரு உன்அடியேன் விளங் கும்குழைக் காதுடையாய்!
தேறேன் உன்னைஅல்லால் ஶிவ னே!என் செழுஞ்சுடரே!
காருர் வெண்மருப்பா! கட வூர்த்திரு வீரட்டத்துள்
ஆரூர் செஞ்ஜடையாய்! எனக் கார்துணை? நீஅலதே! (8)

51

அயனோ டன்றறியும் அடி யும்முடி காண்பரிய
பயனே! எம்பரனே! பரம் ஆய பரஞ்சுடரே!
கயம்ஆ ரும்ஜடையாய்! கட வூர்த்திரு வீரட்டத்துள்
அயனே! என்அமுதே! எனக் கார்துணை? நீஅலதே! (9)

52

காரா ரும்பொழில்சூழ் கட வூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்இறையைத் துணை யாஎழில் நாவலர்கோன்
ஆரூ ரன்அடியான் அடித் தொண்டன் உரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பர லோகத் திருப்பாரே. (10)

திருச்சிற்றம்பலம்

(ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகள் தேவாரப் பதிகம் முற்றும்)

## 4. திருத்தொண்டத் தொகை

(ஸுந்தர மூர்த்தி ஸ்வாமிகள்)

(எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

53

திருச்சிற்றம்பலம்

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க்(கு) அடியேன்
    ஏனாதி நாதன்தன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்(கு) அடியேன்
    கடவூரில் கலயன்தன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
    எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்

அலைமலிந்த புனல்மங்கை ஆனையர்க்(கு) அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்(கு) ஆளே. (2)

திருச்சிற்றம்பலம்

## 5. திருத்தொண்டர் திரு அந்தாதி

(திரு நாரையூர் நம்பியாண்டார் நம்பிகள்)

(கட்டளைக் கலித்துறை)

**54**

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி எழிற்பனந்தாள்
சாய்ந்த ஶிவன்நிலைத் தான்என்பர் காதலி தாலிகொடுத்(து)
ஆய்ந்தநற் குங்கிலி யம்கொண் டனற்புகை காலனைமுன்
காய்ந்த அரற்கிட்ட தென்கட வூரில் கலயனையே. (12)

**55**

புல்லன ஆகா வகைஉல கத்துப் புணர்ந்தனவும்
சொல்லின வும்நயம் ஆக்கிச் சுடர்ப்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்கும் கயிலைபுக் கான்என்பரால்
கல்லின மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே. (59)

## 6. திருத்தொண்டர் புராணம்

### (அ) கண்ணப்ப நாயனர் புராணம்

(பாடல் 181)

(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

**56**

மங்குல்வாழ் திருக்கா ளத்தி மன்னனர் கண்ணிற் புண்ணீர்
தங்கனல் மாற்றப் பெற்ற தலைவர்தாள் தலைமேற் கொண்டே
கங்கைவாழ் ஜடையார் வாழும் கடவூரில் கலய னாரம்
பொங்கிய புகழின் மிக்கார் திருத்தொண்டு புகலல் உற்றேன்.

## (ஆ) குங்கிலியக் கலய நாயனர் புராணம்

**57**

வாய்ந்தசீர் வளத்தால் ஓங்கி மன்னிய பொன்னி நாட்டில்
ஏய்ந்தசீர் மறையோர் வாழும் எயிற்பதி எறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் ஜடையார் பண்டு தொண்டர்மேல் வந்த
[கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி இருப்பது கடவூர் ஆகும். (1)

**58**

வயல்எலாம் விளைசெஞ் சாலி; வரம்பெலாம் வளையின் முத்தம்
அயல்எலாம் வேள்விச் சாலை; அணைஎலாம் கழுநீர்க் கற்றை
புயல்எலாம் கமுகின் கா(டு);அப் புறம்எலாம் அதன்சீர்
[போற்றல்
செயல்எலாம் தொழில்கள் ஆறே செழுந்திருக் கடவூர்
[என்றும். (2)

**59**

பாலனும் மறையோன் பற்றப் பயம்கெடுத் தருளும் ஆற்றன்
மாலும்நான் முகனும் காண வடிவுகொண் டெதிரே வந்து
காலனர் உயிர்செற் றார்க்குக் கமழ்ந்தகுங் குலியத் தூபம்
சாலவே நிறைந்து விம்ம இடும்பணி தலைநின் றுள்ளார். (6)

**60**

விடையவர் வீரட் டானம் விரைந்துசென் றெய்தி என்னை
உடையவர் எம்மை ஆளும் ஒருவர்தம் பண்டா ரத்தில்
அடைவுற ஒடுக்கி எல்லாம் அயர்த்தெழும் அன்பு பொங்க
ஜடையவர் மலர்த்தாள் போற்றி இருந்தனர் தமக்கொப்
[பில்லார். (13)

**61**

சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரில் நண்ணி
நிலவுதம் பணியில் தங்கி நிகழும்நாள் நிகர்இல் காழித்
தலைவராம் பிள்ளை யாரும் தாண்டவச் சதுரர் ஆகும்
அலர்புகழ் அரசும் கூட அங்கெழுந் தருளக் கண்டு. (32)

**62**

மாறிலா மகிழ்ச்சி பொங்க எதிர்கொண்டு மனையில் எய்தி
ஈறிலா அன்பின் மிக்கார்க் கின்னமு தேற்கும் ஆற்றால்
ஆறுநற் சுவைகள் ஓங்க அமைத்தவர் அருளே அன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பர்தம் அருளும் பெற்றார்.(33)

**63**

கருப்புவில் லோனைக் கூற்றைக் காய்ந்தவர் **கடவூர்** மன்னி
விருப்புறும் அன்பு மேன்மேல் மிக்கெழும் வேட்கை கூர
ஒருப்படும் உள்ளத் தன்மை உண்மையால் தமக்கு நேர்ந்த
திருப்பணி பலவும் செய்து சிவபத நிழலில் புக்கார். (34)

## (இ) கணம்புல்ல நாயனார் புராணம்

(கொச்சகக் கலிப்பா)

**64**

மூரியார் கலிஉலகின் முடிஇட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தம் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் **கடவூரில்**
காரியார் தாம்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம். (8)

## (ஈ) காரி நாயனார் புராணம்

(ஷை)

**65**

மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்தமிழின்
துறையான பயன்தெரிந்து சொல்விளங்கிப் பொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயரால் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பாற்பயில்வார். (1)

## II. திருக்கடவூரைப் பற்றிய பிறர் நூல்கள்

# 7. திருத்தொண்டர் புராண ஸாரம்

(ஆசிரியர் : ஸ்ரீ உமாபதி ஶிவாசார்ய ஸ்வாமிகள்)

(எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

**66**

ஶீல(ம்)மலி திருக்கடவூர்க் கலய னாரம்
திகழ்மறையோர் பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளஎன்று வாங்கிக் கொண்டு
சங்கையில்குங் குலியத்தால் சார்ந்த செல்வர்
ஞாலம்நிகழ் திருப்பனந்தாள் நாதர் நேரே
நரபதியும் தொழக்கச்சால் நயந்து போதப்
பாலமுதம் உண்டாரும் அரசும் எய்திப்
பரிந்தமுது செயஅருள்சேர் பான்மை யாரே. (11)

**67**

திருக்கடவூர் வரும்உரவோர் காரி யாராம்
திகழ்தொண்டர் வண்தமிழ்நூல் திருந்த ஓதி
விருப்பொடுதம் பெயரால்பா விளம்பி மும்மை
வேந்தரையும் முறைமுறையே மேவி அங்கண்
உரைத்தஉரை நயம்ஆக்கி அவர்பால் ஏய்ந்த
ஒண்பொருளால் ஆலயங்கள் ஓங்கச் செய்து
தரைக்குள்அரும் தவர்க்கேவல் தகமுன் போற்றும்
தன்மையால் அருள்சேர்ந்த நன்மை யாரே. (51)

# 8. திருவிளையாடற் புராணம்

(பரஞ்ஜோதி முனிவர் இயற்றியது)

திருவாலவாய்க் காண்டம் – அர்ச்சனைப் படலம்

(பாடல்-22)

(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

**68**

கறுவிவீழ் காலன் மார்பில் சேவடிக் கமலம் சாத்திச்
சிறுவனுக் காயுள் ஈந்த சேவகப் பெருமான் மேய
அறைபுனற் பழன மூதூர் அது;இது ஆனை தந்த
குறைஉடற் போர்வை போர்த்த கொற்றவன் கோயில்
[காண்மின் !

# 9. திருக்கடவூர்த் திருப்புகழ்

(ஸ்ரீ அருண கிரி நாத ஸ்வாமிகள் அருளியது)

ஹம்ஸ நாதம்] **69.** அருள் பெற [ஆதி

தாத்த தனத்தன தானன தானன
தாத்த தனத்தன தானன தானன
தாத்த தனத்தன தானன தானன தனதான

ஏட்டின் விதிப்படி யேகொடு மாபுர
வீட்டில் அடைத்திசை வேகசை மூண்அதில்
ஏற்றி அடித்திட வேகடல் ஓடம தெனஏகி-

ஏற்கும் எனப்பொருள் ஆசை பெணுசைகொ
ளாத்து எனத்திரி யாபரி யாதவம்
ஏற்றி இருப்பிட மேஅறி யாமலும் உடல்பேணிப்;

பூட்டு சரப்பளி யேமத ஞம்என
ஆட்டி அசைத்திய லேதிரி நாளையில்
பூத்த மலக்குஹை யோபொதி சோறென கழுகாகம்—

போற்றி நமக்கிரை யாம்என வேகொள
நாட்டில் ஒடுக்கென வேவிழு போதினில்
பூட்டு பணிப்பத மாமயி லா!அருள் புரிவாயே;

வீட்டில் அடைத்தெரி யேஇடு பாதகன்
நாட்டை விடுத்திட வேபல ஜாதினில்
வீழ்த்த விதிப்படி யேகுரு காவலர் வநமேபோய்-

வேற்றுமை உற்றுரு வோடியல் நாள்அது
பார்த்து முடித்திட வேஒரு பாரதம்
மேற்புனை வித்த மஹாவிர மாயவன் மருகோனே;

கோட்டை அழித்தஸு ரார்பதி கோஎன
மூட்டி எரித்த பராபர! சேகர!
கோத்த மணிக்கதி ரேநிகர் ஆகிய வடிவேலா-

கூற்று மரித்திட வேஉதை பார்வதி
யார்க்கும் இனித்தபெண் ஆகிய மான்மகள்
கோட்டு முலைக்கதி பா!கட வூர்உறை பெருமாளே.(1)

அஸாவேரி] 70. சிறப்பருள் பெற [ஜம்பை

தானதன தான தத்த தானதன தான தத்த
தானதன தான தத்த தனதான

மூலம்என ஓடு ஸர்ப்ப வாயுவைவி டாத டக்கி
தூயஒளி காண முக்தி விதமாகச்—

சூழும்இருள் பாவ கத்தை வீழஅழ லூடெ ரித்து
ஜோதிமணி பீடம் இட்ட மட(ம்)மேவி;

மேலைவெளி ஆயி ரத்து நால்இருப ராப ரத்தின்
மேவிஅரு ளாச லத்தின் உடன்மூழ்கி-

வேலு(ம்)மயில் வாஹ நப்ர காஶம்அதி லேத ரித்து
வீடும்அது வேசி றக்க அருள்தாராய்;
ஓலஸாரர் ஆழி எட்டு வாளகிரி மாய வெற்பும்
ஊடுருவ வேல்தொ டுத்த மயில்வீரா—
ஓதுகுற மான்வ நத்தில் மேவிஅவள் கால்பி டித்துள்
'ஓம்'என்உப தேஶ வித்தொ டணேவோனே;
காலனெடு மேதி மட்க ஊழிபுவி மேல்கி டத்து
காலனிட(ம்) மேவு ஶக்தி அருள்பாலா—
காலமுதல் வாழ்பு விக்க தாரநகர் கோபு ரத்துள்
கா நமயில் மேல்த ரித்த பெருமாளே.(2)

(திருப்புகழ் முற்றிற்று)

## 10. க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழ்

(காஞ்சி-சிதம்பர முநிவர்)

(பதினன்கு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)

(அம்புலிப் பருவம்)

**71**

சக்ரவா ளத்தைஅரை நொடியில்வலம் வந்தனன்
ஜலராஶி ஏழும் ஏக
ஸமுத்திரம தாக்கினன் விறலினல் வேள்விவரு
தகரைப் பிடித்தே றினன்
பக்கம்உறு ஶேடனேச் சாட்டைஎன மேருகிரி
பம்பரம தாய்ஆட் டினன்
பாநுவின் தேரில்உனே வைத்துனது தேரின்மேற்
பாநுவை எடுத்து வைத்தான்
திக்கெட்டும் வாழ்கிரி பிடித்தொன்றி னேடொன்று
சினமாக முட்ட விட்டான்
சேய்உன்னே விளேயாட வேஅழைத் தான்இவன்
திருமுன்வா ராதி ருந்தால்

அக்கணம் கோபம்வைப் பான்எங்கள் குமரனோ(டு)
 அம்புலீ! ஆட வாவே!
அருள்கால காலன்உறை கடவூரில் வேலனுடன்
 அம்புலீ! ஆட வாவே!

## 11. திருக்கடவூர் உலாப் பகுதி

(ஸ்ரீ ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள் அருளியது)

[ நேரிசைக் கலி வெண்பா ] (கண்ணி எண்)

72

'' மார்க்கண்டன் வில்வ வநமஹிமை யைக்கேட்டுக்
கார்க்கண்டம் தீரக் கனிவினால் – யார்க்கும் (25)
குறைஅகற்றக் கீழ்த்திசையில் கூபம்உண் டாக்கிச்
செறியும் நிருதி திசையில்—வெறிகமழும் (26)
பிச்சிநறும் போதால் பெரிதுவந்து பூஜிப்ப
மெச்சிய அன்பால் மிருந்தரற்றி—அச்சிகரம் (27)
போன்ற மறலி புரள முனிந்தடியால்
ஊன்றி அரும்தவனை உய்வித்தும்—*ஆன்றிப் (28)
பிறவாத நித்தியமாம் பேறும் உதவி
இறவாத இன்பத்தை ஈந்தோன்—தறுகட் (29)
சமன்மாளப் பூமான் தளர்ந்து பொறையால்
கமலா ஸநத்திறையோன் கண்ணுற்—றிமையோர் (30)
பெருமானே ஆற்றேன் பெரும்பாரம் என்னத்
திருமால்பால் ஆங்கவனும் சென்று—பரிவால் (31)
இதனை உரைப்ப இரங்கி அவனும்
கதம்ஒழியும் காலம் கருதித்—துதிசெய்து (32)
பின்னர் இயம்பப் பெரிய கரும்பகட்டின்
மன்னவன் உய்ய வரம்உதவி—' இன்னும் (33)
ஶிவசின்னம் பெற்றரைத் தீண்டாதே! தீண்டில்
அவசின்னம் முன்போல் அடையும்—தவிர்!' என்று (34)
ஞாலம் முழுதும் நடுங்க உயிர்உண்ணும்
காலனுக்கு மேல்நாள் கழறினேன்.'' (35)

(உலாப் பகுதி முற்றும்)

*ஆன்றல் = நீங்கல்; இறத்தல். ஆன்றி-செத்துப் போய்.

### III. ஸ்ரீ அபிராமிப் பட்டர் அருளிய நூல்கள்

# 12. திருக்கடவூர்க் கள்ள விநாயகர் பதிகம்

(கட்டளைக் கலித்துறை)

### 73. ரூப வர்ணனை

பங்கயத் தாளும் ஒருநான்கு தோளும் ‡படா(ம்)முகமும்
திங்களின் கோடும் வளர்மோ தகத்துடன் செங்கையிலே
அங்குஶ பாஶமும் ஆகிவந்(து) என்றனை ஆண்டருள்வாய்!
வெங்கய மே!கட வூர்வாழும் கள்ள விநாயகனே! (1)

### 74. எப்போதும் நினைக்க

உண்ணும் பொழுதும் உறங்கும் பொழுதும் ஒருதொழிலைப்
பண்ணும் பொழுதும் பகரும் பொழுதும்நின் பாதத்திலே
நண்ணும் கருத்துத் தமியேனுக்(கு) என்றைக்கு [நல்குவையோ?
விண்ணும் புகழ்கட வூர்வாழும் கள்ள விநாயகனே! (2)

### 75. முதலில் வழிபட

ஏதொன்றை ஆகிலும் எண்ணிய போ(து)உன் இணைக்கமலப்
பாதம் பரவிய பேருக்(கு)அல் லாமல் பலித்திடுமோ?
*பேதம் தெரிந்த மறையோர் தமது பெருந்தெருவில்
வேதம் பயில்கட வூர்வாழும் கள்ள விநாயகனே! (3)

### 76. மும்மூர்த்தி தொழல்

அரன்என் பவனையும் அம்புயத் தோனையும் ஆழிஶங்கு
கரன்என் பவனையும் கைதொழ வேண்டிஉன் கால் [தொழுவார்

---

‡ படாம்-முகபடாம்.

* பேதம்-ஶிவாகமங்கள் இருபத்தெட்டினுள் ஒன்று.

இரவும் பகலும் இயல்,இசை, நாடகம் என்னும்நல்நூல்
விரவும் தமிழ்க்கட ஊர்வாழும் கள்ள விநாயகனே! (4)

### 77. கணபதி கருணை

துதியேன் எனினும் தொழுகேன் எனினும்உன் தொண்டர் [தமை
மதியேன் எனினும் வணங்கேன் எனினும் வலியவந்து
கதியே தரும்வழி காட்டிடு வாய்!நின் கருணையினல்;
விதியே புகழ்கட ஊர்வாழும் கள்ள விநாயகனே! (5)

### 78. ஸர்வ போக ஸாதகர்

†நாகம் துரகம் பலபணி ஆடை நவநிதிகள்
பாகஞ்சு மென்மொழி யாள்போ கமும்உன்றன் பாதத்திலே
மோஹம் திகழப் பணிந்தோர்க்(கு)அல் லாமல் முயன்றிடுமோ?
மேகம் பயில்கட ஊர்வாழும் கள்ள விநாயகனே! (6)

### 79. குட்டு வழிபாடு

இளம்குஞ் ஜரச்செழுங் கன்றே! எனச்சொ(ல்)லி ஏத்திநன்ருய்
உளம்கசிந்(து) அம்கையால் குட்டிக்கொண் டோர்க்கோர் குறையும்உண்டோ?
வளம்கொண்ட மூவர் தமைமறித் தேதமிழ் மாலைகொண்டு
விளங்கும் புகழ்க்கட ஊர்வாழும் கள்ள விநாயகனே! (7)

### 80. யம பயம் தீர

தண்டா யுதத்தையும் பாசலா யுதத்தையும் தாங்கிஎன்னைக்
கண்டாவி கொள்ள நமன்வரும் வேளையில் காத்திடுவாய்!
வண்டார வாரம் செயு(ம்)மலர்ச் சோலை வளப்பமுடன்
விண்டா வியகட ஊர்வாழும் கள்ள விநாயகனே! (8)

---

†நாகம்-யானை.

### 81. த்ரிமூர்த்தி பூஜை

மூவரும் தங்கள் தொழிலே புரிந்திட முந்திமுந்தித்
‡தாவரும் நெற்றியில் தாக்கிஉன் நாமத்தைச் சாற்றிடுவார்;
தேவரும் போற்றிய தேவே! உனைஅன்றித் தெய்வம் [உண்டோ?
மேவரும் சீர்க்கட வூர்வாழும் கள்ள விநாயகனே! (9)

### 82. க்ருபை பெற

மைப்பொரு வாரண மாமுக(ம்) மீதினில் வாய்ந்ததுதிக்
கைப்பொரு ளே!என்று கைதொழு வோர்க்(கு)உன் [கருணைவைப்பாய்!
அப்பொரு ளாம்அமு தீஶர் மகிழ்அபி ராமிஅம்மை
மெய்ப்பொரு ளே!கட வூர்வாழும் கள்ள விநாயகனே! (10)

(கள்ள விநாயகர் பதிகம் முற்றும்)

## 13. திருக்கடவூர்க் கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்-I

(14 சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)

### 83. ஶிவபிரான் உருவ வர்ணனை

சுடர்மணிக் குழையும் மலர்க்கரத்(து) உழையும்
துதும்பிகள் இடைஇடை நுழையும்
தும்பைமா லிகையும் வம்புவார் ஜடையும்
துண்டவெண் பிறையு(ம்)முந் நூலும்
நடநபங் கயமும் கிரணகங் கணமும்
நங்கைபங்(கு) அமர்ந்தஸுந் தரமும்
நயந(ம்)மூன்(று)உடைய கோலமும் கண்டோர்
நமனையும் காணவல் லவரோ?

‡ தா வரும்=வரும் தா=வளர்ந்த பரப்புடைய.

கொடிபல தொடுத்த நெடியமா மணிப்பொற்
கோபுரம் *பாரிடம் தொடுத்துக்
கொழுந்துவிட்(டு) எழுந்து வான்நில(வு) எறிப்பக்
கொண்டல்வந்(து) உலவியே நிலவும்
கடிமலர்த் தடமும் மாருதிலை திடமும்
கன்னிமா மாடமும் சூழ்ந்து
கநவளம் சிறந்த †கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (1)

## 84. யம பயம் அற

தண்டமும் கயிறும் மாலமும் புகைந்த
தழல்உமிழ் கண்களும் வளைந்த
தந்தமும் சிவந்த குஞ்சியும் கரிய
மாயிலமே அனையமே னியுமாய்
அண்டிய சமனைக் கண்டுள(ம்) மயங்கி
அறி(வு)அழிந்(து) இருவிழி களும்பஞ்(சு)
அடைந்துவாய் புலர்ந்து மெய்மறந் திடும்போ(து)
அம்பிகை தன்னுடன் வருவாய்!
வண்டுகள் முரன்று முகைமுறுக்(கு) உடைந்து
மதுமழை பொழிந்துதா(து) அளைந்து
மடல்விரிந்(து) அலர்ந்து பொன்நிறம் பொதிந்த
மன்றல்அம் கொன்றைவார் ஜடையாய்!
கண்டவர் உளமும் கண்ணுமே கவரும்
கநதந வநிதையர் நெருங்கும்
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (2)

---

*பாரிடம்=பூத கணம். †கடவை=திருக்கடவூர்.

## 85. ஶிவன் அருள் மஹிமை

தநபதி நிகராய்ச் செல்வமே பெறினும்
ஶதமகன் போகமே பெறினும்
தாரணி சுமக்கும் ஶேடனே நிகராய்த்
தக்கதோர் அறி(வு)எலாம் பெறினும்
அநங்கனே நிகராய் அழகுதான் பெறினும்
அருமறைக் கிழவன்நேர் உறினும்
ஐய! நின் கடைக்கண் அருள்தவ றியபேர்
அம்மைஓ(டு) ஏந்திநின்(று) உழல்வார்;
பநககங் கணத்தாய்! அளப்பரும் குணத்தாய்!
பார்வதி வாமபா கத்தாய்!
பவளநல் நிறத்தாய்! தவளதூ ளிதத்தாய்!
பரிபுரம் அலம்புபொற் பதத்தாய்!
கநகமும் துகிரும் தரளமும் வயிரக்
கலன்களும் நிலம்தொறு(ம்) மிடைந்த
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (3)

## 86. ஸம்ஸார துக்கம் அற

தந்தையை மனையை ஒக்கலைத் துணையைத்
தாயைமென் குதலைவாய்ச் சேயைத்
தநத்தையெள வநத்தை இன்பமோ ஹநத்தைத்
தையல்நல் லார்பெருந் தநத்தை
அந்தியும் பகலும் விரும்பிமெய் சோம்பி
ஆழ்கடற் படுதுரும்(பு) ஆகி
அலக்கழிந் தேனைப் புலப்படத் திருத்தி
ஆட்கொள நினைத்திலாய்! அன்றோ?
சிந்தைநைந் துருக இன்னிசை படித்துச்
சிலம்(பு)ஒலி ஆரவே நடித்துச்
செழும்புனல் ஜடைமேல் கரந்தையை முடித்துத்
திருவெணீ(று) உடல்எலாம் வடித்துக்

கந்தைக்கோ வணம்தோல் பொக்கணம் தாங்கிக்
கபாலம்ஒன்(று) ஏந்திநின் றவனே!
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (4)

## 87. தன் சிறுமை கூறல்

வஞ்சகக் கிணறுய்த் துன்பவா ரிதியாய்
வறுமைஎன் பதற்(கு)இருப் பிடமாய்
மறம்பொதி குடிலாய் அஸத்திய விதையாய்
மயல்விளை கழனியாய்ப் பாவ
ஸஞ்சித வடிவாய்ச் *சருச்சரைப் புரமாய்
ஸங்கட நோய்க்களஞ் சியமாய்த்
தலைதடு மாறித் திரியும்என் தனக்(கு)உன்
தண்அளி கிடைக்குமோ? அறியேன்;
நஞ்சம்உண் பகுவாய்ச் சுடிகைமுள் எயிற்று
நகைமணிப் பாந்தள்†அம் சூழ்ந்த
நளிர்இளம் பிறையும் மிளிர்செழுஞ் ஜடையாய்!
நங்கையர் முழுமதி முகத்தைக்
கஞ்ஜமென் மலர்கள் கண்டுவாய் ஒடுங்கும்
கந்தம்உந் தியதடம் சூழும்
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (5)

## 88. பிறவி வேண்டாம்

பிரமனும் சலிக்கத் தாயர்ஸஞ் சலிக்கப்
பேதையர் கண்(டு)அஸங் கதிக்கப்
பிணிகளும் பகைக்க மூப்புவந்(து) அலைக்கப்
பின்தொடர்ந்(து) ஆசைசென்(று) இழுக்கத்

---

* சருச்சரை=ஒப்புரவு இன்மை. † அம்=நீர்; கங்கை.

தருமனும் வெறுக்க நரகமும் ஒறுக்கத்
தாரணி சுமந்துநொந்(து) இளைக்கச்
பாக(டு)எனச் சுழலும் கறங்(கு)எனக் கொடிய
ஜடலமே எடுக்கநான் இலக்கோ?
†குருமணி இமைக்கும் புதுமலர்த் தடத்தில்
கோட்டிள(ம்) ‡மோட்டுமா மேதிக்
குலங்கள்போய்ப் படிந்து நலம்கிளர் செழும்தேன்
குவளைமென்(று) உழக்கிய தோற்றம்
கரியமா கடலில் புகுந்துநீர் அருந்தும்
காளமே கங்களோ எனலாய்க்
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (6)

## 89. லோபியைப் புகழாதே!

மறுகுவெம் சினத்தர் *தெறும்அவ குணத்தர்
வஞ்சகம் பொதிந்தநெஞ் சகத்தர்
வழக்கம்ஒன்(று) இல்லாப் பழக்கரும் மூடர்
மதிஇலாப் பதிதர்பால் அணுகிப்
பொறுமையில் தருமன் நெறியினில் பீமன்
புலமையில் குறியமா முநிவன்
புரந்தரன் எனவும் நிரந்தரம் புகழ்ந்து
பொழு(து)அவம் போக்கினன்; அந்தோ!
வெறிமலர்ப் பிரஸம் சொரிந்துவண்(டு) இனங்கள்
மிடைந்துமா முகிலினைக் கிழித்து
மேல்இடத்(து) இரவிப் பசும்புர விகளாய்
விளங்கியே விண்தல முகட்டைக்

† குரு = நிறம். மணி = முத்து. இமைக்கும் = ஒளிவிடும். ‡ மோடு = வயிறு. * தெறும் = தண்டம் செய்யும்; கொல்லும்.

கறுவிநின்(று) ஓங்கிச் செறியும்ஐந் தருவுள்
கற்பகத் தருவினை ஒப்பாய்!
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (7)

## 90. பக்தி பூஜை

நெஞ்சகம் குழைந்து பணிவிடைக்(கு) இசைந்து
நீறொடு கண்டிகை புனைந்து
நிலவுபொற் கோயில் அதைவலம் புரிந்து
நெகிழு(ம்)முன் நாள்மலர் எடுத்து
வஞ்சமா மயக்கில் மயங்கும்ஐம் புலனும்
மாற்றலர் வலிமையைக் கவர்ந்(து)உன்
மலர்ப்பதத்(து) இருத்தி அலக்கணைத் துரத்தி
மதிமிகு வாழ்வளித் திடும்''ஓம்
ஜூம் ஸ:''* எனும்நல் தூயமூன்(று) எழுத்தை
ஸூகிர்தமாய்க் கொண்(டு)அருச் சனைசெய்
தொண்டர்கள் உறவைக் கொண்டுனைப் பணியச்
†சுணக்கனும் எனக்(கு)அருள் புரிவாய்!
கஞ்ஜமென் மலர்மீ(து) அஞ்ஜ(ம்)மெய் பசக்கக்
கார்மயில் ‡ஒகரமாய் நடிக்கும்
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (8)

## 91. பரத்தையர் பாசம் அற

மைக்கயல் விழியால் மயக்கிஉள் உருக்கி
மஞ்சளால் முகத்தினை மினுக்கி

---

*'ஓம் ஜூம் ஸ:' — இது, 'ம்ருத்யுஞ்ஜய' மந்த்ரம்.

†சுணக்கன் — நாய்போல் திரிகின்றவன்; நீசன்.

‡'ஒ' கரம் ஆய் – 'ஒ'என்னும் எழுத்துப் போல் (தோகை விரித்து)

மணிநகை பெருக்கி ஆஸைஉண் டாக்கி
வளர்இள முலேத்துகில் இறுக்கிப்
பக்கல்வந்(து) அமர்ந்து மென்மொழி பகர்ந்து
பரவஸம் போலமேல் விழுந்து
படி(று)உளம் உணர்ந்தே அஸத்தியம் உரைத்துப்
பறித்திடக் குறித்தபா வையர்க்காய்த்
துக்கஸா கரத்தில் அழுந்திநாள் தோறும்
தோதகப் பட்டபா தகனைத்
துய்யசெங் கமலச் செய்யதாள் இணைக்கே
தொண்டுகொண் டால்குறை உறுமோ?
கைக்கழங் காடும் திறத்தினை நிகராய்க்
கமலமென் மலர்மிசை அறுகாற்
களிப்பளி சுழலும் கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (9)

92. ஸ்ரீவ மாநஸ பூஜை

செயல்பணி விடையாய்ச் செப்பல்ஐந் தெழுத்தாய்த்
திரிதலே வலம்புரி தலுமாய்ச்
சிந்தையின் நினைவே தியாநமாய், உண்டு
தெவிட்டல்நி வேதநச் சிறப்பாய்த்
துயிறல்வந் தனையாய்த் திருவுளத்(து) உவந்து
துள்ளுவெள் விடையின்மேல் ஏறித்
தொண்டரும் விசும்பில் அண்டரும் காணத்
தோகையோ(டு) எனக்குவந்(து) அருள்வாய்!
வயல்வரம்(பு) உறைந்த கடைசியர் முகத்தை
மதியம்என்(று) அதிஸய(ம்) மிகுந்து
வரும்பகல் இடத்தும் இரவினும் குவளை
வாய்ஒடுங் காமலே விளங்கும்
கயல்நெடுந் தடமும் கமுகமும் கமுகைக்
காட்டிய கன்னலும் பொதிந்த
கநவளம் சிறந்த கடவைஅம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! (10)

(கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்-I முற்றும்)

# 14. திருக்கடவூர்க் கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்- II

(14 சீர் கொண்ட வண்ண வ்ருத்தம்)

93. ஶிவன் அடியர் துர்க்குணம் பெறுர்

அந்த ரத்(து)அமரர் மந்த ரத்தைஒலி
அலைக டற்றலைநி றுத்திநின்(று)
அழல்உ றக்கடைய அமுத(ம்) முற்றடைய
அதன்இ டத்துவிடம் உண்ணல்ஆர்
கந்த ரத்திடைக றுப்பி ஞர்கவுரி
கண்க ளித்திடும்உ றுப்பிஞர்
கால காலகட வூரர் கோலம்அது
கண்டு தண்டன்இட வல்லபேர்
பந்தம்ஆசைஅவ மாந(ம்) நிந்தனை
பழிப்(பு)அ ஸத்திய(ம்)ம நப்பயம்
படிறு வஞ்சனைஅ நர்த்த(ம்) மால்கொடுமை
பாப(ம்) மீறுகொலை ஸஞ்சலம்
தொந்த(ம்) மோஹம்அவி வேகம் மாசுசதி
துயர(ம்) மூட(ம்)முழு வயிரம்நீள்
தோத கம்*குடிலம் அவகு ணம்தவறு
ரோக மும்தவிரு வார்களே. (1)

94. ஶிவன் அடியர் ஸர்வ போகமும் பெறுவர்

வெங்க யத்(து)உரியர் பங்க யர்க்(கு)அரியர்
வேத வாம்பரியர் தீதிலர்
**வீதர் †வெம்ஸுகர்வி நோதர் °கஞ்சுகியர்
வெற்றி மால்மகிழும் xஅத்தஞர்

---

*குடிலம்=வஞ்சகம். **வீதர்=ஶாந்தர். (வீதம்=ஶாந்தம்).
†வெம்=விரும்பத் தக்க. ஸுகர்=இன்ப மயமானவர்.
°கஞ்சுகியர்=பாம்பு அணிந்தவர். xஅத்தன்-அர்த்தன்; பாதியன்.

கங்க ணத்தர்ஶிவ வெங்க ணத்தவர்
*களத்தி சைந்தபெரு நிர்த்தநர்
கால காலகட வூரர் கோலம்அது
கண்டு தண்டன்இட வல்லபேர்
திங்கள் வெண்குடைக விப்ப மும்முரசு
சென்று சென்(று)எதிர்ஒ லிப்பஎண்
திசைபு ரக்கு(ம்)ம(ன்)னர் கர(ம்)மு கிழ்ப்பஇகல்
தெவ்வ ரும்திறைஅ ளப்பமேல்
மங்கை மார்கவரி கால்அ சைப்பநெடு
மகர தோரணவ ளப்பமாய்
மத்த யானைமிசை வெற்றி யாளர்என
வைய கம்தனில்இ ருப்பரே. (2)

## 95. அடியார்கள் ருத்ர ஸாரூபம் பெறுவார்கள்

திருகு வெள்எயிறு வரிநெ டுங்கயிறு
செய்ய குஞ்சியொடு நஞ்(சு)எனச்
சீறு கோபமுடன் ஏறு தீபவிழி
தெறும்இ டிக்குரல்மு ழக்கியே
கரு(ம்)ம லைக்குநிகர் எருமை யிற்பெரிய
கால்ம லைக்குவடு போல்வரும்
கால காலகட வூரர் கோலம்அது
கண்டு தண்டன்இட வல்லபேர்
பொரு(ம்)ம ழுப்படைஇ லங்கு செஞ்ஜடை
பொருந்து வெள்விடைதி ருந்துவெண்
பூதி ஆகம்ஒரு தோகை பாகம்அழல்
பொங்கு நாகமணி கங்கணம்
பெருகு கங்கைநதி முடிவி ளங்கிவதி
பிஞ்சு மாமதிகொ ழுந்தழல்
பெய்த பெற்றிபெறும் ஒற்றை நெற்றிவிழி
பெற்(று)இ ருப்பர்அடை யாளமே. (3)

* களம்—ஸபை.

### 96. அடியார்கள் பெறும் மேலான பதவிகள்

*பெண்இ டும்(பு)அரிபு ரத்தி னார்ஒலி
பிறந்தி டும்பரிபு ரத்தினார்
பிறைமு டிக்குள்அணி கங்கை யார்மறைசொல்
பிரமன் ஒற்றைஅணி °கங்கையார்
கண்இ சைந்த(து)ஒரு மூன்றி னார்உரிய
கயிலை தாழXநக மூன்றினார்
கால காலகட வூரர் கோலம்அது
கண்டு தண்டன்இட வல்லபேர்
மண்அ ளந்தசர ணார்க்கு(ம்) மென்முளரி
மாலை ஆபரணருக்கும்ஓர்
வச்சி ரத்(து)இறைவ ருக்கும் எண்திகிரி
‡மாதி ரத்துறைவ ருக்கு(ம்)மேல்
விண்ண வர்க்கு(ம்)மிகு பண்ண வர்க்கும்உயர்
வித்த கர்க்கு ம்)மதி ஒத்துவாழ்
மெய்த்த வத்துநிலை பெற்ற வர்க்கும்அவர்
மேல்இ ருப்பர்அடை யாளமே. (4)

### 97. அடியவர்கள் மிக நல்லவர்கள்

உரக குண்டலர்நெ ருங்கி விண்(டு)அலர்
உறைந்த வண்டுமுரல் கொங்கையார்
உத்த ரீகமலர் ஒப்(பு)இ லாத[a]ஶிலை
ஒத்த நெற்றிமலை மங்கையார்
கரக பாலர்திரி ஶூலர் நீலமணி
கண்டர் †புண்டரிக ஆடையார்

---

*பெண்-பார்வதியின். இடும்பு அரி-துன்பம் துடைத்த. புரத்தினார்-(இடப்பாக) ஶரீரம் உடையவர். °கம்-தலை; கபாலம். கையார்-கரத்தினார். Xநகம் ஊன்றினார் எனப் பிரிக்க. ‡மாதிரம்-திஶை. [a]ஶிலை-மலை; வில். (இடை நிலைத் தீவகம்).

† புண்டரிக ஆடை=புலித்தோல் உடை. "அரையினில் புலி ஆடை உடையானை"-அபிராமி அம்மை பதிகம்-I-4. "புண்டரீ கத்தொடு பாம்பு போற்றிய புண்டரீ கப்புரம்"-செந்தூர்த் தல புராணம்-498.

கால காலகட வூரர் கோலம்அது
கண்டு தண்டன்இட வல்லபேர்
விரகம் ஆனதில்உ ணங்கி டார்;உலகை
வேண்டி ஈனரைவ ணங்கிடார்;
வெகுளி ஆனதுசெ றிந்தி டார்;உடலம்
வேத னைப்படஅ றிந்திடார்;
நரகம் என்ப(து)இனி எய்தி டார்;கருமம்
நல்ல(து) அல்ல(து)அவர் செய்திடார்;
நமன்இ ருந்ததிசை கண்டி டார்;இறுதி
நாளு மே*பருதி ஆவரே. (5)

## ‡98. திருக்கடவூர் ஸ்தல புராணம்

துலைநி றுக்கும்ஒரு [1]வணிக னுக்கு(ம்)[2]மது
ஸூத னுக்கு(ம்)மநு நீதிசேர்
தொல்பு விக்[3]கரஶா னுக்கு(ம்) மிக்கதமிழ்
சொல்லு(ம்) ஓர்[4]புலவ னுக்கு(ம்)மெய்க்
[5]கலைய னுக்கு(ம்)[6]மதி [7]நடுவ னுக்கு(ம்)[8]முநி
காத லற்கும்இனி(து) அருள்செயும்
கால காலகட வூரர் மேவிவளர்
கயிலை போலவரு(ம்) மயில்அனார்
முலைஅ ரும்பிவரு [9]வநஜ மேஇனிய
மொழியும் இன்பமுறு [10]பநஸமே
முத்தை ஒத்தமணி [11]ஶூர லேஅணிகள்
மொய்த்த தோள்கள்இள [12]வேரலே
ஶிலைஇ ரண்(டு)அனைய புருவ மேஇரதி
தேவி ஒத்த(து)அவர் உருவமே
திருமி டற்றழகு ஶங்க மேஅமுது
சிந்து(ம்) [13]மான்அடிபு ஜங்கமே. (6)

---

*பருதி-ஒளி. ‡பாடல்98-குறிப்புரைக்குப் பக்கம் 33 பார்க்க.

1. வணிகன்—ரத்நாகரன்; இவன் விஸாலாந்த்ரம் என்னும் நகரத்து வைஸ்யன். விரக்தனாய்த் தல யாத்ரை செய்துவருகையில் திருக்கடவூரைத் தர்ஸித்து, மூன்று நாட்கள் தங்கிப், பின் நான்காம் நாள் இறந்த போது, தேவ விமாநத்தில் ஏறித் துறக்கம் புகுந்தவன்; இது திருக்கடவூர் (வடமொழி)த் தல புராண வரலாறு. மேலும், புருவின் எடைக்கு ஸமமாகத் தன் உடலின் தசையை எடுத்துத் தராசில் நிறுத்துப் பருந்துக்குக் கொடுத்த ஸிபிச் சக்ரவர்த்தியையும் "துலை...வணிகன்" என்னும் தொடர் குறிக்கலாம்; அம்ருத லிங்கத்தைச் ஸிபிச் சக்ரவர்த்தி வழிபட்டதாகத் தல புராணம் கூறுகிறது; தவிரக் குங்கிலியக் கலயரிடத்தில் தாலியைப் பெற்று அதன் விலைக்கு உரிய குங்கிலியத்தை விற்ற வ்யாபாரியையும், ஸிவனடியார் தந்த கோவணத்தின் எடைக்குத் தன் உடைமைகளை எல்லாம் கொடுத்தும் போதாத நிலையில் தானும் மனைவி, மைந்தனுடன் தராசுத் தட்டில் ஏறித், தன்னையும் தந்த வணிகரான அமர்நீதி நாயனாரையும் பொதுவாகக் குறிக்கலாம். 2. மது ஸூதன்—திருமால். 3. அரசன்—தல புராணத்தில் குறிக்கப் பெற்றுள்ள ஹேம கிரீடன், ரத்ந கைடன், பிரமதி ராஜன், சந்த்ர பூஷணன், ஸிபி என்னும் மன்னர்களுள் எவரேனும் ஒருவரைக் குறிக்கலாம். 4. புலவன்—காரிக் கோவை பாடிய காரி நாயனார்; திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார் எனினுமாம். 5. கலையன்—குங்கிலியக் கலயர். 6. மதி—சந்த்ரன். 7. நடுவன்—யமன். 8. முநி காதலன்—ம்ருகண்டு முநிவரின் மகனும் மார்க்கண்டேயன். 9. வநஜம்—தாமரை. 10. பநஸம்—பலாப் பழம். 11. மூரல்—புன்சிரிப்பு. 12. வேரல்—மூங்கில். 13. மான் அடி—மான் குளப்படி; புஜங்கம்—பாம்புப் படம்); இவை இரண்டும் அல்குலுக்கு உவமை.

### 99. ஶிவனுக்கும் பெண்டிர்க்கும் ஶ்லேஷை

விதிஶி ரத்தைஅரி பழியர் அஞ்சுகணை
வேள்உ ரத்தைஎரி விழியர்மா
மேரு விற்கையினர் நேர்க டுக்கையினர்
வேள்வி யிற்பணியும் வள்ளலார்
கதிர வன்தனது தந்தம் அம்புவியில்
உதிர வன்பொடுபு டைத்திடும்
கால காலகட வூரர் மேவிவளர்
கயிலை போலவரு(ம்) மயில்அனார்
மதியில் நஞ்சமும்இ ருக்கு மோ?கரிய
மஞ்சு மாலிகைக றுக்குமோ?
வாள்அ ராஅமுதம் ஊறு மோ?கநக
வரையி லேபுளக(ம்) மீறுமோ?
*விதிர்க லன்பலதி ருத்து மோ?இடையில்
விலகு(ம்) மேகலைபொ ருத்துமோ?
விளங்கு தோட்†கழைவி யக்கு மோ?இனிமை
விண்ட சொற்‡கழைவி ளக்குமே. (7)

### 100. கயிலையும் பெண்டிரும்

இகல்அ றிந்துவரு பகையி னார்புரம்
எரித்தி டும்கொடிய நகையினர்
எரிம முப்படைவ லத்தி னார்முடியில்
ஏறு(ம்) மீறியஜ லத்தினர்
ககந மண்டலமும் உருவி நின்றுவிதி
காணொ ணாதஒரு தாணுவார்
கால காலகட வூரர் மேவிவளர்
கயிலை போலவரு(ம்) மயில்அனார்
முகம திக்(கு)உவமை புகலு வார்அளிகள்
மொய்கு ழற்(கு)உவமை நுவலுவார்

---

*விதிர் = சிதறிய. †கழை — மூங்கில். ‡கழை — கரும்பு.

முலையி னுக்(கு)உவமை பகரு வார்இனிய
மொழியி னுக்(கு)உவமை மொழிகுவார்
நகையி னுக்(கு)உவமை கூறு வார்சரண
நடையி னுக்(கு)உவமை பேசுவார்
நயம்அ றிந்(து)இளமை சொல்லு வார்எவரும்
x நடு(வு)அ றிந்தவர்கள் இல்லையே. (8)

## 101. முகில் விடு தூது

சிறைஅ(ன்)னத்தர்எழு நறைவ நத்தர்இவர்
திந(ம்)ம நத்திடைதி யாநமே
செய்து தங்கள்வரம் எய்து தற்(கு)உரிய
தேவ தேவர்பரி பூரணர்
கறைமி டற்(று)அரையர் அறைக டற்கரையர்
கதித ரும்குரவர் வெருவிலார்
கால காலகட வூரர் கோலம்அது
கண்டு கைதொழுது கொண்டல்காள்!
எறிதி ரைப்பறைமு ழக்கி அம்கைதனில்
இக்கு வார்சிலைவ ணக்கிநீள்
இருத லைக்கும்அளி நாண்இ றுக்கிமுன்
எழுந்து மீசையை முறுக்கிவேள்
வெறிம லர்க்கணைஎ டுத்த தும்கொடிய
வேக மாய்அதுதொ டுத்ததும்
மெய்யி னிற்படவி டுத்த தும்செவியில்
விண்டு விண்டுசொல வேணுமே. (9)

## 102. வண்டு விடு தூது

குயில்மொ ழிப்புணர்மு லைக்க ரும்கண்ஒரு
கோதை பாதிஉறை ஜோதியார்
கொக்க ரித்துவரு தக்க னுருயிர்
குறைத்(து)எ ழுந்திடு(ம்)ம றத்தினர்

---

x நடு(வு)—இடை; ந்யாயம்.

கயிலை நாதர்கண நாதர் பூதிஅணி
காய நாயகமும் ஆயினர்
கால காலகட வூரர் கோலம்அது
கண்டு கைதொழுது வண்டுகாள்!
அயிலி னும்கொடிய அம்பி னல்மதுர
ஆர வாரம்இசை வேயினல்
அந்த ரம்தனில்அ சைந்து நின்(று)அடரும்
அம்பு லிக்கொடிய தீயினல்
துயில்து றந்துமெய்ம றந்து வாடிமிகு
ரோக மோஹம்பி றந்துளம்
தோத கப்படவும் நான்அ ஹப்படுதல்
சொல்லு வீர்!மதனை வெல்லவே. (10)
(கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்-II முற்றும்)

# 15. திருக்கடவூர்க் கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்* - III (பின்முடுகு)

(வெண்பாச் சந்தக் கதம்பம்)

### 103. வெண்டளை—தனத்தனத்தத் (சந்தம்)

என்று தொழுவேன்? எளியேன்; அளிமுரலும்
கொன்றைஅணி தென்கடவூர்க் கோமானே!—துன்றும்
கனற்பொறிக்கட் பகட்டில்உற்றுக் கறுத்ததெற்குத்
[திசைக்குள்உக்ரத்
தனைச்சினத்திட்(டு) உதைத்தபத்மத் தாள். (1)

### 104. வெண்டளை—தனதனத்தம் (சந்தம்)

தொண்டருடன் கூடித் துதித்(து)இரண்டு கண்ஆரக்
கண்டுதொழு வேனோ? கடவூரா!—பண்(டு)ஓர்
அமு(து)இருக்கும் சிறுகடத்(து)அன்(று) அவதரித்(து)அன்
[பரைமருட்டும்
சமனைஎற்றும் பரிபுரச்செந் தாள். (2)

---

* இப் பதிகத்தில் 3, 6, 8 எண்கள் உள்ள பாக்கள் வெண்டளை பிறழாத பின்முடுகு வெண்பாக்களாகவே உள்ளன.

### 105. வெண்டளை—தந்ததத்தம் (சந்தம்)

பற்றிப் பணிந்து பரவ வரம்தருவாய்!
கற்றை ஜடையா! கடவூரா!—வெற்றிநெடும்
கொண்டல்ஒக்கும் கண்டசத்தம் கொண்(டு)எதிர்த்(து)அங்
[கண்கறுக்கும்
சண்டனைக்கண்(டு) அன்(று)உதைக்கும் தாள். (3)

### 106. வெண்டளை—தான தானு (சந்தம்)

மேகம் எழுந்ததுபோல் மேல்எழுந்த காலனைக்கண்(டு)
ஆகம் தளர்ந்துநெஞ்சம் அஞ்சாமுன்—மாகடவூர்ப்
பூத நாதா! வேத கீதா! பூவி தாதா தேடு பாதா!
மாது பாகா! கால காலா! வா! (4)

### 107. வெண்டளை—தானன தானு (சந்தம்)

அன்(று)அயன்மால் காணு அடிமுடியைக் காண்பதற்குத்
தென்திரைக்கோன் என்னதவம் செய்தானோ?—
[வென்றிதிகழ்
ஆடர வாளா! நீ(று)அணி தோளா! ஆதிரை நாளா!
[மாதும ணாளா!
தோடணி காதா! மாகட வூரா! சொல்! (5)

### 108. வெண்டளை—தந்ததனத் (சந்தம்)

ஆற்றுமோ? நெஞ்சத்(து) அடங்குமோ? கொண்டமையல்
கூற்(று)உதைத்த தென்கடவூர்க் கோமானே!—மாற்(று)
[உயர் பொற்
கும்பமுலைத் திங்கள்நுதற் கொந்(து)அளகப் பெண்கொடி
[மெய்க்(கு)
அம்புதொடுத்(து) அங்கஜன்விட் டால். (6)

### 109. வெண்டளை—தந்தன தந்தம் (சந்தம்)

தென்றல் உலவும் திருக்கடவூர் எம்பெருமான்
மன்றல் செறிந்தே மதுஊ(று)உன்—கொன்றைக்காப்

பொன்பர வும்திண் கொங்கைஇ ரண்டும் புண்பட உந்(து)
இன்(பு) அன்புதி ரண்டும்
துன்ப(ம்)மி குந்(து)என் பெண்கொடி நெஞ்(சு)அஞ் சும். (7)

### 110. வெண்டளை—தான தந்தா (சந்தம்)

சுடுமோ? இளம்தென்றல்; தோகையின்மேல் அம்பு
படுமோ ?மெய் வாதைப் படுமோ?—கடவூரா!
நீர்அ ணங்கார் வேணி நம்பா! நீல கண்டா! மேனி யின்பால்
ஆர்அ ணங்கார் கால ஸங்கா ரா! (8)

### 111. வெண்டளை—தனந்த தந்தம் (சந்தம்)

பாலனுக்கா அன்று பக(டு)ஏறி வந்(து)எதிர்த்த
காலனுக்குக் காலா! கடவூரா!—மேலோர்
கரும்பு கொண்(டு)அங்(கு) எதிர்ந்து நின்(று)அங் கஜன்
[பொரும்செஞ் சரங்கள் கண்(டு)உண்
மருண்டு நெஞ்சம் கலங்கும் என்றன் மான். (9)

### 112. வெண்டளை—தனன தந்தம் (சந்தம்)

நீதிநெறி வேதியர்கள் நீங்கா மறைபயிலும்
ஆதிகட வூரில்உறை அம்மானைப்—பாதம்
பரவி அங்கம் புளகுகொண்(டு)எண் படவணங்கும் பொழுது
[நெஞ்சம்
கரவு துஞ்சும் சமனும் அஞ்சும் காண்! (10)
(ஸ்ரீ கால ஸம்ஹார மூர்த்தி (பின்முடுகுப்) பதிகம் முற்றும்)

## 16. திருக்கடவூர் அபிராமி அம்மை பதிகம்—I

### 113. காப்பு (நேரிசை வெண்பா)

தூயதமிழ்ப் பாமாலை சூட்டுதற்கு மும்மதநால்
வாய்ஐங் கரன்தாள் வழுத்துவாம்—நேயர்நிதம்
எண்ணும் புகழ்க்கடவூர் எங்கள்அபி ராமவல்லி
நண்ணும்பொற் பாதத்தில் நன்கு.

# நூல்

(14 சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)

## 114. அரிய வேண்டுகோள்கள்

கலையாத கல்வியும் குறையாத வயதும்ஓர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணிஇ லாத உடலும்
சலியாத மநமும்அன்(பு) அகலாத மனைவியும்
தவறாத ஸந்தா நமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள்வா ராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலும்ஒரு
துன்பம்இல் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உத விப்பின்பு
தொண்டரொடு கூட்டு கண்டாய்!
அலைஆழி அறிதுயிலி மாயனது தங்கையே!
ஆதி கட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத ஸுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (1)

## 115. தேவியின் கேசாதி பாத வர்ணனை

கார்அளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரியபுரு வச்சிலை களும்
கர்ணகுண் டலமு(ம்)மதி முகமண்ட லமு(ம்)நுதற்
கஸ்த்தூரி இட்ட பொட்டும்
கூர்அணிந் திருவிழியும் அமுதமொழி யும்சிறிய
கொவ்வையின் கனிஅதர மும்
குமிழ்அனைய நாஸியும் குந்த(ம்)நிகர் தந்தமும
கோடுசோ டான களமும்

வார்அணிந்(து) இறுமாந்த வளமுலையு(ம்) மேகலையு(ம்)
மணிநூ புரப்பா தமும்
வந்(து)எனது முன்நின்று மந்தஹா ஸமும்ஆக
வல்வினையை மாற்று வாயே!
ஆர(ம்)மணி வானில்உறை தாரகைகள் போலநிறை
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத ஸுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (2)

## 116. தேவி கடாக்ஷச் சிறப்பு

மகரவார் குழைமேல் அடர்ந்துகுமிழ் மீதினில்
மறைந்து *வாளைத் துரத்தி
மைக்கயலை வென்றநின் செக்கமல விழிஅருள்
வரம்பெற்ற பேர்கள் அன்றோ?
ஜெகமுழுதும் ஒற்றைத் தனிக்குடை கவித்துமேல்
ஸிங்கா ஸநத்தில் உற்றுச்
செங்கோலு(ம்) மநுநீதி முறைமையும் பெற்றுமிகு
திகிரிஉல(கு) ஆண்டு பின்பு
புகர்முகத்(து) ஐராவ தப்பாகன் ஆகிநிறை
புத்தேளிர் வந்து போற்றிப்
போகதே வேந்திரன் எனப்புகழ விண்ணிற்
புலோமஜை யொடும் ஸுகிப்பர்;
அகரமுதல் ஆகிவளர் ஆநந்த ரூபியே!
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத ஸுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (3)

---

* வாள்-ஒரு வகை மீன்; அரிவாள்; வாளையைத் துரத்தி எனினும் ஆம். வாளை-மீன் வகை.

### 117. தேவியை 'வாலை' என்பது ஏன்?

மறிகடல்கள் ஏழையும் திகிரிஇரு நான்கையும்
மாதிரக் கரிஎட் டையும்
மாநாகம் ஆனதையும் மாமேரு ஆனதையும்
மாகூர்மம் ஆனதையும் ஓர்
பொறிஅரவு தாங்கிவரு புவநம்ஈர் ஏழையும்
புத்தேளிர் கூட்டத் தையும்
பூமகனை யும்திகிரி மாயனையும் அரையினிற்
புலிஆடை உடையா னையும்
முறைமுறைக ளாய்ஈன்ற முதியளாய்ப் பழைமைதலை
முறைகள்தெரி யாத நின்னை
மூவுலகில் உள்ளவர்கள் 'வாலை' என்(று) அறியாமல்
மொழிகின்ற(து) ஏது? சொல்லாய்!
அறிவுடைய பேர்மநத்(து) ஆநந்த வாரியே!
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (4)

### 118. தேவியை 'நீலி' என்னலாமோ?

வாடாமல் உயிர்எனும் பயிர்தழைத்(து) ஓங்கிவர
அருள்மழை பொழிந்தும் இன்ப
வாரிதியி லேநின்ன(து) அன்(பு)எனுஞ் சிறகால்
வருந்தாம லேஅ ணைத்துக்
கோடாமல் வளர்குஞ் ஜரம்தொட்(டு) எறும்புகடை
கொண்டகரு ஆன ஜீவ
கோடிகள் தமக்கும் புஜிக்கும் புஜிப்பினைக்
குறையாம லேகொ டுத்து
நீடாழி உலகங்கள் யாவையும் திருஉந்தி
*நெட்டுதனி லேதரிக் கும்
நின்னைஅகி லங்களுக்(கு) அன்னைஎன்(று) ஓதாமல்
'நீலி'என்(று) ஓதுவா ரோ?

---

*நெட்டு திரு உந்தி உதனிலே – நீண்ட பெரிய திருவயிறாகிய இதனில். அதனில், இதனில் என்பது போல உதனில் எனவும் வந்தது.

†ஆடாய நால்மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்
ஆதிகடவூ ரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (5)

## 119. தேவியின் பெருமையும் தன் சிறுமையும்

பல்குஞ் ஜரந்தொட்(டு) எறும்புகடை ஆன(து)ஒரு
பல்உயிர்க் கும்கல் இடைப்
பட்டதே ரைக்கும்அன் றுற்பவித் திடுகருப்
பம்தனில் ஜீவ னுக்கும்
மல்கும் சராசரப் பொருளுக்கும் இமையாத
வானவர் குழாத்தி னுக்கும்
மற்றும்ஒரு மூவர்க்கும் யாவர்க்கும் அவர்அவர்
மநச்சலிப்(பு) இல்லா மலே
நல்கும் தொழிற்பெருமை உண்டாய் இருந்து(ம்)மிகு
நவநிதி உனக்(கு) இருந்தும்
நான்ஒருவன் வறுமையால் சிறியன்ஆ னுல்அந்
நகைப்(பு)உனக் கேஅல்ல வோ?
*அல்கலந்(து) உம்பர்நா(டு) அளவெடுக் கும்சோலை
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (6)

## 120. தேவியின் செல்வமும் சிவனின் வறுமையும்

நீடும்உல கங்களுக்(கு) ஆதார மாய்நின்று
நித்தமும் மூர்த்தி வடிவாய்
நியமம்உடன் முப்பத்(து) இரண்(டு)அறம் வளர்க்கின்ற
நீமனைவி யாய்இ ருந்தும்

---

† ஆடு ஆய வேள்வி—(யாகத்துக்கு உரிய, ஆடு (பசு) அமைந்த வேத யாகம்.

அல் = இருட்டு.

வீடுவீ டுகள்தோறும் ஓடிப் புகுந்துகால்
வேசற்(று) இலஜ்ஜை யும்போய்
வெண்துகில் அரைக்(கு)அணிய விதிஅற்று நிர்வாண
வேடமும் கொண்டு, கைக்கோர்
ஓ(டு)ஏந்தி நா(டு)எங்கும் உள்ளம் தளர்ந்துநின்(று)
உந்மத்தன் ஆகி, அம்மா!
உன்கணவன் எங்கெங்கும் ஐயம் புகுந்(து)ஏங்கி
உழல்கின்ற(து) ஏது? சொல்லாய்!
ஆடுகொடி மாட(ம்)மிசை மாதர்விளை யாடிவரும்
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீஸர் ஒருபாகம் அகலாத ஸுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (7)

## 121. க்ஞாந யோகம்

ஞாநம் தழைத்(து)உன் ஸொரூபத்தை அறிகின்ற
நல்லோர் இடத்தி னில்போய்
நடுவினில் இருந்து(உ)வந்(து) அடிமையும் பூண்(டு)
நவிற்றும்உப தேஸம் உட்கொண்(டு) [அவர்
ஈநம் தனைத்தள்ளி 'எனதுநான்' எனு(ம்)மாநம்
இல்லாம லேது ரத்தி
இந்திரிய வாயில்களை இறுகப் புதைத்துநெஞ்(சு)
இருள்அற விளக்(கு)ஏற் றியே
*வான்அந்தம் ஆனவிழி அன்னமே! உன்னைஎன்
மநத்தா மரைப்போ திலே
வைத்துவே றேகவலை அற்றுமேல் உற்றபர
வஸம்ஆகி அழியாத(து) ஓர்
ஆநந்த வாரிதியில் ஆழ்கின்ற(து) என்றுகாண்?
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீஸர் ஒருபாகம் அகலாத ஸுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (8)

---

*வான்—அம்ருதம் ; பெருமை.

### 122. தேவியின் மக்களுள் ஒருவர் ஆக

ஜலதிஉல கத்திற் சராசரங் களையீன்ற
தாய்ஆகி னுல்எ னக்குத்
தாய்அல்ல வோ?யான்உன் மைந்தன்அன் றோ?எனது
ஸஞ்சலம் தீர்த்து நின்றன்
முலைசுரந்(து) ஒழுகுபால் ஊட்டிஎன் முகத்தினைஉன்
முன்தானை யால்து டைத்து
மொழிகின்ற மழலைக்(கு) உகந்துகொண்(டு) இளநிலா
முறுவலும் பூத்(து)அருகில் யான்
குலவிவிளை யாடல்கண்(டு) அருள்மழை பொழிந்(து)அங்கை
கொட்டி'வா!' என்(று)அழைத் துக்
குஞ்ஜர முகன்குமர னுக்(கு)இளையன் என்(று)எனைக்
கூறினுல் ஈனம் உண்டோ?
அலைகடலி லேதோன்றும் ஆராத அமுதமே!
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத ஸுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (9)

### 123. எமன் வருங்கால் ஆள்க !

கைப்போது கொண்(டு)உன் பதப்போது தன்னிற்
கணப்போதும் அர்ச்சிக் கிலேன்;
கண்போதி னுல்உன் முகப்போது தன்னையான்
கண்டுதரி ஸனபுரிகி லேன்;
முப்போதில் ஒருபோதும் என்மநப் போதிலே
முன்னிஉன் ஆல யத்தின்
முன்போது வார்தமது பின்போத நினைகிலேன்;
மோசமே போது கின்றேன்;

மைப்போத கத்திற்கு நிகர்எனப் போதும்எரு
மைக்கடா மிசைஏ றியே
மாகோர காலன் வரும்போது தமியேன்
மநம்கலங் கித்தி யங்கும்
அப்போது வந்(து)உன(து) அருட்போது தந்தருள்க!
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி அபிராமி யே! (10)

## 124. யமன் துரத்தாமல் இருக்க

*மிகையும் துரத்தவெம் பிணியும் துரத்தமத
வெகுளிமே லும்து ரத்த
மிடியும் துரத்தநரை திரையும் துரத்தநனி
வேதனை களும்து ரத்தப்
பகையும் துரத்தவஞ் சனையும் துரத்தமுப்
பசிஎன்ப தும்து ரத்தப்
பாவம் துரத்தஅதி மோஹம் துரத்தமல
பவகார்ய மும்து ரத்த
நகையும் துரத்தஊழ் வினையும் துரத்தமுழு
நாணும் துரத்த வெகுவாய்
நாவறண்(டு) ஓடிஇரு கால்தளர்ந் திடும்என்னை
நமனும் துரத்து வானோ?
அகிலஉல கங்களுக்(கு) ஆதார மேகூறும்
ஆதிகட வூரில் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! (11)
(அபிராமி அம்மை பதிகம் – I முற்றும்)

---

*மிகை = துன்பம்; வருத்தம்.

# 17. திருக்கடவூர் அபிராமி அம்மை பதிகம்—II

(14 சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)

## 125. தேவியின் ரூப வர்ணனை

கங்கையொடு தும்பையும் அணிந்தவர் வியக்கும்
கலாமதியை நிகர்வதநமும்
கருணைபொழி விழிகளும் விண்முகில்கள் வெளி(று)எனக்
காட்டிய கரும்கூந் தலும்
ஶங்கைஇல் லா(து)ஒளிரு(ம்) மாங்கல்ய தாரணம்
தங்கு(ம்)மணி மிடறு ம்) மிக்க
சதுர்பெருகு துங்கபா ஶாங்குஶம் இலங்குகர
தலமும்விரல் அணியும் அரவும்
புங்கவற்(கு) அமுதருளு(ம்) மந்தரகு சங்களும்
பொலியு(ம்)நவ மணிநூ புரம்
பூண்டசெஞ் சேவடியும் இவ்வடிய னேன்நிதம்
போற்றிஎன வாழ்த்த விடைமேல்
மங்களம்) மிகுந்தநின் பதியினெடும் வந்(து)அருள்செய்!
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶூப *நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (1)

## 126. தேவி நாமாவளி

சந்திர ஜடாதரி! முகுந்தஸோ தரி!துங்க
ஜலஜலோ சந † மா தரீ!
ஸம்ப்ரம பயோதரி! ஸுமங்கலி! ஸுலக்ஷணீ!
சாற்றரும் கருணா கரீ!

---

*நேமி—சக்ராயுதம் (ஏந்தினவளே!); நியமி! எனலுமாம்.
† மாதரி—காளி.

அந்தரி! வராஹி! ஶாம் பவி!அமலே! ஸுரதோத்ரி!
ஆதிஜக ஜால ஸூத்ரீ!
அகிலாத்ம காரணி! விநோதஜய நாரணி!
அகண்டசிந் மயபூ ரணீ!
ஸுந்தரி! நிரந்தரி! துரந்தரி!பர் வதராஜ
ஸுகுமாரி! கௌமாரி! உத்
துங்ககல் யாணி!புஷ் பாஸ்த்ரஅம் புஜபாணி!
தொண்டர்கட் கருள்ஶர் வாணீ!
வந்(து)அரி மலர்ப்பிரமன் ஆதிதுதி வேதஒலி
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶுப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (2)

## 127. மாதர் மயக்கு அற

வாஸமலர் மரு(வு)அளக பாரமும் தண்கிரண
மதிமுகமும் அயில்விழி களும்
வள்ள(ம்)நிகர் முலையு(ம்)அன நடையு(ம்)நகை
வளமுடன் கண்டு மின்னார் [மொழிகளும்
பாஶபந் தத்திடை மநம்கலங் கித்திநம்
பலவழியும் எண்ணி எண்ணிப்
பழிபாவம் இன்னதென்(று) அறியாமல் மாயப்ர
பஞ்சவாழ்(வு) உண்மை என்றே
ஆஶைமே லிட்டுவீ ணுகநாய் போல்திரிந்(து)
அலைவ(து)அல் லாமல் உன்றன்
அம்புயப் போ(து)எனும் செம்பதம் துதியாத
அசடன்மேல் கருணை வருமோ?
மாசிலா(து) ஓங்கிய குணாகரி! பவாநி!சீர்
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶுப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (3)

## 128. அருள் பெற

நன்(று)என்று தீ(து)என்று நவிலும்இ(வ்) இரண்டில்முன்
நவின்றதே உலகில் உள்ளோர்
நாடுவார் ஆதலால் அடியேனும் அவ்விதம்
நாடினேன் நாடி னும்
இன்(று)என்று சொல்லாமல் நினதுதிரு உள்ளம் அ(து)
இரங்கிஅருள் செய்கு வாயேல்
ஏழையேன் உய்குவேன்; மெய்யான மொழிஇ.·.(து)உன்
இதயம்அறி யாத(து) உண்டோ?
குன்றம்எல் லாம்உறைந்(து) என்றும்அன் பர்க்(கு)அருள்
குமாரதே வனைஅ ளித்த
குமரி!மர கதவருணி! விமலி!பயி ரவி!கருணை
குலவுகிரி ராஜ புத்ரீ!
மன்றல்மிகு நந்தந வநங்கள்சிறை அளிமுரல
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶுப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (4)

## 129. இடர் தீரப் பெற

ஒருநாள் இரண்டுநாள் அல்லநாள் உலகத்(து)
உதித்(து)இந்த நாள்வ ரைக்கும்
ஒழியாத கவலையால் தீராத இன்னல்கொண்(டு)
உள்ளம் தளர்ந்து மிகவும்
அரு(ம்)நாணி அற்றிட்ட வில்போல் இருக்கும்இவ்
அடிமைமீ திற்கருணை கூர்ந்(து)
'அஞ்சேல்!' எனச்சொல்லி ஆதரிப் பவர்கள்உனை
அன்றிஇலை உண்மை ஆக;
இருநாழி கைப்போதும் வேண்டாது நிமிஷத்(து)
இலக்கம்இலி புவநத் தையும்
இயற்றிஅரு ளும்திறம் கொண்டநீ ஏழையேன்
இன்னல்தீர்த் (து) அருளல் அரிதோ?

வரு(ம்)நாவ லூரர்முத லோர்பரவும் இனியபுகழ்
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஸுப நேமி!புகழ் நாமி!ஸிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (5)

## 130. கடைக்கண் அருள் பெற

எண்ணிக்கை இல்லாத துன்பங்கள் மேன்மேலும்
ஏறிட்(டு) ஒறுக்க அந்தோ!
எவ்விதம் உளம்ஸகித்(து) உய்குவேன்? இப்பொழு(து)
எடுத்திட்ட ஜந்மம் இதனில்
நண்ணிஎள் அளவுஸுகம் ஆன(து)ஒரு நாளினும்
நான்அநு பவித்த(து) இல்லை
நா(டு)எலாம் அறியும்இது கேட்ப(து)ஏன்? நின்உளமும்
நன்றாய் அறிந்(து)இ ருக்கும்;
புண்ணியம் பூர்வஜந நத்தினில் செய்யாத
புலையன்ஆ னாலும் நினது
பூரணக டாக்ஷவீட் சண்ணியம் செய்(து)எனது
புன்மையை அகற்றி அருள்வாய்!
மண்ணவர்கள் விண்ணவர்கள் நித்தமும் பரவும்இசை
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி! ஸுப நேமி!புகழ் நாமி!ஸிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (6)

## 131. செய் பிழை பொறுக்க

தெரிந்தோ அலாதுதெரி யாமலோ இவ்அடிமை
செய்திட்ட பிழைஇ ருந்தால்
சினம்கொண்(டு) அ(து)ஓர்கணக் காகவை யாதுநின்
திருவுளம் இரங்கி மிகவும்
பரிந்துவந்(து) இனியு(ம்)நான் பாழ்வினையில் ஆழ்ந்(து)
படாதுநல வரம்அ ளித்துப் [இ(ன்)னல்
பாதுகாத்(து) அருள்செய்ய வேண்டும்!அண் டாண்ட
பரிவுடன் அளித்த முதல்வீ! [உயிர்

புரந்தரன் போதன்மா தவன்ஆதி யோர்கள்துதி
புரியும் பதாம்புய மலர்ப்
புங்கவி! புராந்தகி! புரந்தரி! புராதநி!
புராணி!திரி புவநேஶ்வரி!
மருந்தினு(ம்) நயந்தசொற் பைங்கிளி! வராஹி!எழில்
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶுப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (7)

## 132. வேண்டாதார் உறவு அற

வஞ்சகக் கொடியோர்கள் நட்புவேண் டாமலு(ம்)
மருந்தினுக் காவேண் டினும்
மறந்தும்ஓர் பொய்ம்மொழி சொலாமலும் தீமையாம்
வழியினில் செல்லா மலும்
விஞ்சுநெஞ்(சு) அதனில் பொருமைதரி யாமலும்
வீண்வம்பு புரியா மலும்
மிக்கபெரி யோர்கள்சொலும் வார்த்தைதள் ளாமலும்
வெகுளிஅவை கொள்ளா மலும்
தஞ்சம்என நினதுபத கஞ்ஜம் துதித்திடத்
தமியனுக்(கு) அருள்பு ரிந்து
ஸர்வகா லமும்எனைக் காத்(து)அருள வேண்டும்!
ஜலக்கயல்கள் விழியை அனைய
வஞ்சியர்செ(வ்) வாய்நிகரும் வாவிஆம் பல்மலரும்
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶுப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (8)

## 133. 'உன்னையே நம்பினேன்'

என(து)இன்னல் இன்னபடி என்றுவே(று) ஒருவர்க்(கு)
இசைத்திடவும் அவர்கள் கேட்(டு)இவ்
இன்னல்தீர்த்(து) உள்ளத்(து) இரங்கிநன் மைகள் [செயவும்
எள்அளவு(ம்) முடியாது நின்

உ(ந்)நதமரு வும்கடைக் கண்ணின்அருள் சிறிதுசெயின்
உதவாத நுண்மணல் களும்
ஓங்குமாற்(று) உயர்ஸொர்ண மலைஆகும்; அதுஅன்றி
உயர்அகில புவநங் களைக்
கநமுடன் அளித்துமுப் பத்திரண்(டு) அறமும்
கவின்பெறச் செய்யும் நின்னைக்
கருதும்நல் அடியவர்க்(கு) எளிவந்து ததியினில்
காத்துரட் சித்த(து) ஓர்ந்து
வநஜம்நிகர் நின்பாதம் நம்பினேன்; வந்(து)அருள்செய்!
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஸ்வரூப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (9)

## 134. தேவி அருளால் மார்க்கண்டேயன் பிழைத்தது

கருநீல வடிவம்ஆர் மா(டு)ஏறி உத்தண்ட
கநதண்ட வெம்பாஶமும்
கைக்கொண்டு சண்டமா காலன்முன் எதிர்க்கமார்க்
கண்டனும் வெருண்டு நோக்கி
அருநீல கண்டன்எனும் நின்பதியை உள்ளத்தில்
அன்புகொண்(டு) அர்ச்சனை செய
அரனும்அ(வ்) இலிங்கம் பிளப்பநின் றெடுதோன்றி
அவிர்செய்சூ லத்தில் ஊன்றிப்
பெருநீல மலைஎன நிலத்தில்அன் னவன்விழப்
பிறங்குதா ளால்உ தைத்துப்
பேசு(ம்)முநி மைந்தனுக்(கு) அருள்செய்த(து) உன(து)
பேர்அருளின் வண்ணம் அலவோ? [அரிய
வருநீல(ம்) மடமாதர் விழிஎன்ன மலர்வாவி
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஸ்வரூப நேமி!புகழ் நாமி!ஶிவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (10)

### 135. பதினாறு பேறும் பெற

ஸகலசெல் வங்களும் தரும்இமய கிரிராஜ
தநயை!மா தேவி! நின்னை
ஸத்யமாய் நித்யம்உள் ளத்தில்து திக்கும்உத்
தமருக்(கு) இரங்கி மிகவும்
அகிலம்அதில் நோய்இன்மை கல்விதந தாநிய(ம்)மெய்
அழகுபுகழ் பெருமை இளமை
அறிவுஸந் தாநம்வலி துணிவுவாழ் நாள்வெற்றி
ஆகு(ம்)நல் ஊழ்நு கர்ச்சி
தொகைதரும் *பதினாறு பேறு(ம்)நீ தந்(து) அருள்
ஸுகாநந்த வாழ்(வு)அளிப் பாய்!
ஸுகிர்தகுண ஶாலி!பரி பாலி!அநு கூலி!திரி
ஶூலி!மங் களவி ஶாலீ!
மகவுநான்; நீதாய்; அளிக்கொணா தோ?மஹிமை
வளர்திருக் கடவூரில் வாழ்
வாமி!ஶுப நேமி!புகழ் நாமி!ஶ்ரீவ ஸாமிமகிழ்
வாமி!அபி ராமி!உமை யே! (11)

(அபிராமி அம்மை பதிகம்—II முற்றும்)

---

* இப் பதினாறு பேறுகளையும்,

"துதிவாணி வீரம் விஜயம்ஸந் தாநம் துணிவுதநம்
அதிதா நியம்ஸவு பாக்கியம் போகம் அறி(வு)அழகு
புதிதாம் பெருமை அறம்குலம் நோய்இன்மை பூண்வயது
பதினாறு பேறும் தருவாய்! மதுரைப் பராபரனே!"

என வரும் காள மேகப் புலவர் பாடலாலும் அறியலாம்.

# 18. திருக்கடவூர் அபிராமி அம்மை பதிகம்-III*

(கட்டளைக் கலிப்பா)

136. பூ,நீர் கொடு பூஜிக்கப் புகழ் அடியார் தமைக்கூட

காலம் உண்டு புனல்உண்டு பூஉண்டு
கனிகள் உண்டு கவுமாரி நின்திருக்
கோலம் உண்(டு)இதை உட்கொண்டு தொண்டரைக்
கூடிக் கொண்டு குலாவித் திரிந்திலேன்
ஞாலம் உண்ட திருமாலும் தேவரும்
நாணி ஓட நரலையி லேஎழும்
ஆலம் உண்ட கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (1)

[புனல் - நீர். ஞாலம் - உலகம். நரலை - கடல்.]

137. பிறப்பிறப்(பு) அறும்வழி காட்(டு)எனக் கேட்டல்

துஞ்சல் என்(று)உடன் தோன்றுதல் என்றுமாய்ச்
சுழலும் வண்(டு)எனச் சுற்றித் திரிந்தபின்
மிஞ்சல் ஒன்றையும் காணேன் இதற்(கு)இனி
மேல்எனக்(கு)ஒரு மெய்வழி காட்டுவாய்!
உஞ்சல் என்(று)அழ காய்அக் கொடும்பக(டு)
ஊரும் கூற்றை உதைத்துச் சிறுவனை
அஞ்சல் என்ற கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (2)

[துஞ்சல் - இறத்தல். மிஞ்சல் - மிகுதி ஆதல். உஞ்சல் - ஊஞ்சல். பகடு - எருமைக் கடா.]

---

* இப் பதிகத்தை யாரும் இதுவரை அச்சிடவில்லை. முதன் முதலாக இப்போதுதான் இங்கு அச்சிடப் பெற்றுள்ளது. இது பற்றிய முழுச் செய்திக்கு முகவுரையைக் காண்க.

**138. வறுமைஅலேத் துரும்(பு)எனநான்**
**மறுகல்நினக்(கு) உவப்போ?**

உம்ப லேக்குறும் கார்இரும்(பு) ஆகிய(து)
உள்உ டைக்கும் படிமிடி மேற்படப்
பம்(பு)அ லேக்குள் சுழல்துரும்(பு) ஆகிஅப்
பதங்கில் ஏசற்றுப் பாழ்த்திடில் இன்பமோ?
கம்ப லேக்குடம் காவிரி பாய்ந்திடும்
கழனி தோறும் கதிர்த்தர ளங்களே
அம்(பு)அ லேக்கும் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (3)

[உம்பலே - யானேயை. குறும் - குறுகிய. கார் இரும்பு - கறுத்த இரும்பினுல் ஆன அங்குசம். மிடி—வறுமை. பம்பு-நிறைந்த. பதங்கு—குழி. ஏசற்று-வருந்தி. கம்பலே -மருத நிலம். குடம் - மருத நிலத்து ஊர். கம்பு - சங்கு எனக் கொண்டு, கம்புக் காவிரி, அலேக் காவிரி, குட காவிரி (மேலேக் காவேரி) எனினும் பொருந்தும். கழனி - வயல். கதிர் - ஒளி. தரளம் - முத்து. அம்பு - நீர்.]

**139. பாவிகள்பின் திரியாத பான்மைஉற வேண்டல்**

முலேஅ சைக்கும் பரத்தையர் ஆசையில்
மூழ்கி மூழ்கி முதுவரி ஓந்திபோல்
தலேஅ சைக்கும் பதிதரைப் பின்சென்று
ஸஞ்ச ரிப்பது கொஞ்சம தோ?சொலாய்!
குலேஅ சைக்கும் குரங்(கு)இளம் தெங்கினில்
குதித்(து)அ சைக்கக் குடவால் வளேஎறிந்(து)
அலேஅ சைக்கும் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (4)

[முது-கிழடு பட்ட. வரி-கோடுகளே உடைய. ஓந்தி-காம ரூபி ; பச்சோந்தி ; ஓணன் வகை. பதிதர்-பாபிகள். தெங்கு-தேங்காய். குட-வளேந்த. வால்-ஒளி பொருந்திய. வளே—சங்கு. அலே-கடல்.]

### 140. கடைக்கணுற் காணும் கருணையை வேட்டல்

கண்(டு)அ ரைத்துப் பிழிந்தது போல்சொலும்
கவியைச் சாடும் கவியைஒப்(பு) ஆகிய
வண்டர் அண்டையில் கொண்டுசொல் லாமல்உன்
வநஜப் பார்வை வழங்கில் குறையுமோ?
தொண்டர் போற்றக் கலயனும் போற்றமெய்ச்
ஶ்ருதி போற்று(அ)ச் சுதன்போற்ற வாஸவன்
அண்டர் போற்றும் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (5)

[கண்டு - கற்கண்டு. கவி – பாடல். சாடும் கவி – தாவும் குரங்கு. வண்டர்–துஷ்ட்டர் ; அயோக்யர். அண்டை - அருகில். வநஜம்-தாமரை. கலயன்-குங்கிலியக் கலய நாயனுர். ஶ்ருதி-வேதம். அச்சுதன்-திருமால். வாஸவன் - இந்த்ரன். அண்டர்-அண்டங்களில் உள்ள தேவர்.]

### 141. காலன் வருமுன் கரும்புவில் லொடுவந்(து)ஆள்!

தீத ரிக்கும் தமியேன்என் ஆருயிர்
சிந்த அந்தகன் வந்திடு முந்தியே
நீத ரிக்கும் ஶிலையொடு வந்துமுன்
நிற்ப தேஅன்றிச் சற்பனே செய்வையோ!
ஓத ரிக்கும் விதிக்கும்எட் டாப்பதம்
உதவி மைந்தன் மதிமயங் காமலும்
ஆத ரிக்கும் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (6)

[தீ-தீமை, கொடுமை. தரிக்கும்-கொண்டிருக்கும். தீது அரிக்கும் எனினும் ஆம். சிந்த–அழிய. அந்தகன்-யமன். ஶிலே–கரும்பு வில். சற்பனே–வஞ்சனே ; சதி. ஓது அரிக்கும் விதிக்கும் - புகழ்ந்து பாடும் திருமாலுக்கும் ப்ரம்மனுக்கும். பதம்-பாதம்; சிரஞ்ஜீவிப் பதவி. மைந்தன்–மார்க்கண்டேயன்.]

### 142. காமம் தனில்யான் கலங்கா வகைஅருள்!

ஒழி(வு)இ லாத கொடுங்காமக் கும்பியில்
உணர்(வு)இ லாதழும் ஊர்ப்பன்றி போலநான்
இழி(வு)இ லாத படிஎள் அளவும்நீ
இரங்கி டாததும் ஏதோ? அறிந்திலேன்
பொழி(வு)இ லா(து)அப் புரந்தரன் ஆதியோர்
பொன்று காலத்தும் பொன்ரு(து)எக் காலத்தும்
அழி(வு)இ லாத கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (7)

[ஒழிவு-ஒய்வு. இழிதல்-அவகீர்த்திப் படுதல். பொழிவு-பலன்; மேன்மை. பொழிவு இலாது அப் புரந்தரன் எனப் பிரிக்க. புரந்தரன்-இந்த்ரன். பொன்று-அழியும்.]

### 143. மநத்துயர் நீக்க வருகஎன்(று) அழைத்தல்

கன்(று)அ ருந்துயர் தீர்க்கும் பசுவின்நீ
கன்னல் வில்லுடன் என்அரு கில்வந்து
நின்(று)அ ருந்துயர் நீக்கிநன்(று) ஆக்கிவெண்
நீ(று)அ ணிந்(து)உளம் ஏய்ரண மாற்றுவாய்!
பொன்த ரும்துயல் பூண்முலை மார்பெறப்
பொருந்து நீஎனப் போந்து பலிஇரந்(து)
அன்(று)அ ருந்தும் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (8)

[கன்று-பசுங்கன்றினுடைய. பசுவின் - பசுவைப் போல. கன்னல்-கரும்பு. உளம்-உள்ளம். ஏய்-பொருந்திய. ரணம்-புண். ரணம்+ஆற்றுவாய் அல்லது மாற்றுவாய் எனப் பிரிக்க. பொன்-பசலே; தேமல். துயல்-அசைதல். பூண்-ஆபரணம்; பொன் தரும் முலே, துயல் முலே, பூண் முலே எனக் கூட்டிப் பொருள் கொள்க. மார்-மார்பு. போந்து-வந்து. பலி இரந்து-காம போக பிக்ஷை கேட்டு. அருந்தும்-அநுபவிக்கும்.]

**144. தரித்திரம் தனில்யான் தவிப்பது தவிர்ப்பாய்!**

ஜலம்க வர்ந்த மழைமுகில் ஆனதும்
சண்ட மாருதம் தாக்கிய போதுதன்
பெலம்கு லேந்தது போலே மிடியினால்
பிஞ்சு நெஞ்சகம் பேதகம் ஆவனோ?
'கலங்கல்!' என்றுவந்(து) ஆடகச் சூடகக்
கைஅ மர்த்திக் கருணைவந்(து) ஆளுவாய்!
அலங்கல் வேணிக் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (9)

[சண்ட மாருதம்–புயற்காற்று. பெலம்–பலம்; வலிமை. மிடி – வறுமை. பிஞ்சு – பிய்ந்துபோய். பிஞ்சு நெஞ்சகம் – பக்குவப்படாத இளம் உள்ளம் எனலுமாம். பேதகம்–வேறுபாடு. கலங்கல்–கலங்காதே. என்று உவந்து எனப் பிரிக்க. ஆடகம் – பொன். சூடகம் – கைவளை. அமர்த்தி – அஞ்சல் காட்டி. அலங்கல்–மாலை. வேணி–ஜடை.]

**145. துயரும் வறுமையும் தொலையத் துதித்திடீர்!**

சோகம் நல்குர வும்தவிர்த்(து) ஆள்கெனத்
தொல்பு விக்குத் துரந்தரன் ஆதியோர்
யோகம் என்றும்உற்(று) உத்தமி யே!புகழ்ந்(து)
உன்னைப் போற்றும் உபாயம் அறிந்திலேன்
போகம் நல்கும் புணர்முலை மார்பெறப்
புல்லி நீங்கிப் பொறுமையி னல்எனக்(கு)
ஆகம் நல்கும் கடவூர் இறைவரை
ஆளும் செல்வி! அபிராம வல்லியே! (10)

[சோகம்-துன்பம். நல்குரவு-வறுமை. 'ஆள்க என... புகழ்ந்து உன்னைப் போற்றும் எனக் கூட்டுக. துரந்தரன்–பாரம் சுமப்போன். புவிக்குத் துரந்தரன்-அரசன்; ஆதிசேஷன் (பதஞ்ஜலி). ஆதியோர் - முதலானவர்கள். யோகம் - அரச போகம் முதலிய ராஜ யோகம்; பதஞ்ஜலி யோக ஸூத்ரத்திற் சொன்ன யோகம். உற்று - பொருந்தி. உபாயம் - வழி. மார்-மார்பு. புல்லி-அணைந்து. ஆகம்-திருமார்பு.]

(திருக்கடவூர் அபிராமி அம்மை பதிகம்—III முற்றும்)

# 19. அபிராமி அந்தாதி

## 19. (அ) காப்பு (கட்டளைக் கலித்துறை)

நாட்டை] 146. அபிராமி யைப்பாட ஐங்கரன் அருள்செயும்
தார்அமர் கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும்தில்லை
ஊரர்தம் பாகத்(து) உமைமைந்த னே!உல(கு) ஏழும்பெற்ற
சீர்அபி ராமிஅந் தாதிஎப் போதும்என் சிந்தைஉள்ளே
கார்அமர் மேனிக் கணபதி யே!நிற்கக் கட்டுரையே!

## 19. (ஆ) நூல் (கட்டளைக் கலித்துறை)

கௌளை] 147. அபிராமி மேனிநிறத்(து) அழகு உவமைகள்
உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்(வு)உடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயம்என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே. 1

ஷை] 148. அனைத்தும் திரிபுரை அவளே என்றமை
துணையும் தொழும்தெய்வ மும்பெற்ற தாயும் ஶ்ருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூம்
கணையும் கருப்புச் ஶிலையு(ம்)மென் பாஶாங் குஶமும்கையில்
அணையும் திரிபுர ஸுந்தரி ஆவ(து) அறிந்தனமே. 2

ஹம்ஸத்வநி] 149. தீயோரைப் பிரிந்ததும் திருவடியிற் செறிந்ததும்
அறிந்தேன் எவரும் அறியா மறையை அறிந்துகொண்டு
செறிந்தேன் உனது திருவடிக் கேதிரு வே!வெருவிப்
பிறிந்தேன்நின் அன்பர் பெருமைஎண் ணாத கருமநெஞ்சால்
மறிந்தே விழும்நர குக்(கு)உற(வு) ஆய மனிதரையே. 3

ஷை] 150. ஶிவனொடு தேவி சிந்தையில் பொருந்த
மனிதரும் தேவரும் மாயா முநிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமள மே!கொன்றை வார்ஜடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்திஎந் நாளும் பொருந்துகவே! 4

புந்நாக வராளி] 151. விடம்அமு(து) ஆக்கினள் விரைகழல் ஶிரத்தில்
பொருந்திய முப்புரை செப்(பு)உரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குல் மநோன்மணி வார்ஜடையோன்
அருந்திய நஞ்(சு)அமு(து) ஆக்கிய அம்பிகை அம்புய(ம்)மேல்
திருந்திய ஸுந்தரி அந்தரி பாதம்என் சென்னியதே. 5

புந்நாக வராளி] 152. சென்னிஉளம் நாஇவற்றில் செறிபொருள்கள் கூறல்

சென்னிய(து) உன்பொன் திருவடித் தாமரை சிந்தைஉள்ளே
மன்னிய(து) உன்திரு மந்திரம் ஸிந்துர வண்ணப்பெண்ணே!
முன்னிய நின்அடி யார்உடன் கூடி முறைமுறையே
பன்னிய(து) என்றும்உன் றன்பர மாகம பத்ததியே. 6

தந்யாஸி] 153. தளர்வுறும் ஆவி தவிப்(பு)அற வேண்டல்

ததிஉறு(ம்) மத்தில் சுழலும்என் ஆவி தளர்(வு)இல(து)ஓர்
கதிஉறு வண்ணம் கருதுகண் டாய்!கம லாலயனும்
மதிஉறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கிஎன்றும்
துதிஉறு சேவடி யாய்!ஸிந்து ராநந ஸுந்தரியே! 7

ஷை] 154. பாபம் அறுத்தாள் பதமலர் கருத்தில்

ஸுந்தரி எந்தை துணைவிஎன் பாபத் தொடரைஎல்லாம்
வந்(து)அரி ஸிந்துர வண்ணத்தி னுள்மகி ஷன்தலைமேல்
அந்தரி நீலி அழியாத கந்நிகை ஆரணத்தோன்
கம்தரி கைத்தலத் தாள்மலர்த் தாள்என் கருத்தனவே. 8

கர ஹர ப்ரியா] 155. உருவக் காட்சி உதவிடு! தாயே!

கருத்தன; எந்தைதன் கண்ணன; வண்ணக் கநகவெற்பில்
பெருத்தன; பால்அழும் பிள்ளைக்கு நல்கின; பேர்அருள்கூர்
திருத்தந பாரமும் ஆரமும் செங்கைச் ஶிலையும்அம்பும்
முருத்(து)அன மூரலும் நீயும்அம் மே!வந்(து)என் முன்நிற்கவே. 9

ஷை] 156. எப்போதும் உமையையே எண்ணுவது கூறல்

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்ப(து)உன்னை
என்றும் வணங்குவ(து) உன்மலர்த் தாள்எழு தாமறையின்
ஒன்றும் அரும்பொரு ளே!அரு ளே!உமை யே!ஹிமயத்(து)
அன்றும் பிறந்தவ ளே!அழி யாமுக்தி ஆநந்தமே! 10

ஆநந்த பைரவி] 157. தேவியின் திருவடி ஶிவனார் ஶிரத்தில்

ஆநந்த மாய்என் அறிவாய் நிறைந்த அமுதமுமாய்
வான்அந்தம் ஆன வடி(வு)உடை யாள்மறை நான்கினுக்கும்
தான்அந்தம் ஆன சரணார விந்தம் தவளநிறக்
கானம்தம் ஆ(டு)அரங் காம்எம்பி ரான்முடிக் கண்ணியதே. 11

ஆநந்த பைரவி] 158. முன்செய் புண்ணியம் மூண்டது வோ?எனல்

கண்ணிய(து) உன்புகழ் கற்ப(து)உன் நாமம் கசிந்துபக்தி
பண்ணிய(து) உன்இரு பாதாம் புயத்தில் பகல்இரவா
நண்ணிய(து) உன்னை நயந்தோர் அவையத்து நான்முன்செய்த
புண்ணியம் ஏ(து)என்அம் மே!புவி ஏழையும் பூத்தவளே! 12

பீம்ப்ளாஸ்] 159. உன்னைஅல் லாதொரு தெய்வம்உள் கேன்எனல்

பூத்தவ ளே!புவ நம்பதி னன்கையும் பூத்தவண்ணம்
காத்தவ ளே!பின் கரந்தவ ளே!கறைக் கண்டனுக்கு(ம்)
மூத்தவ ளே!என்றும் மூவா முகுந்தற்(கு) இளையவளே!
மாத்தவ ளே!உன்னை அன்றிமற்(று) ஓர்தெய்வம் வந்திப்பதே? 13

ஷை] 160. தேவிதர் ஶநத்தால் திருவருள் எளிதுறும்

வந்திப் பவர்உன்னை வானவர் தாநவர் ஆனவர்கள்
சிந்திப் பவர்நல் திஶாமுகர் நாரணர் சிந்தைஉள்ளே
பந்திப் பவர்அழி யாப்பர மாநந்தர் பாரில்உன்னை
ஸந்திப் பவர்க்(கு)எளி(து) ஆம்எம் பிராட்டிநின் தண்அளியே. 14

தர்பார்] 161. தவத்தவர் ஸுவர்க்கமும் முக்தியும் சார்வர்

தண்அளிக்(கு) என்றுமுன் னேபல கோடி தவங்கள்செய்வார்
மண்அளிக் கும்செல்வ மோபெறு வார்?மதி வானவர்தம்
விண்அளிக் கும்செல் வமும்அழி யாமுக்தி வீடும்அன்றோ?
பண்அளிக் கும்சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே! 15

ஷை] 162. அருமைஅம் பிகையின் எளிமை அதிஶயம்

கிளியே! கிளைஞர் மநத்தே கிடந்து கிளர்ந்(து)ஒளிரும்
ஒளியே! ஒளிரும் ஒளிக்(கு)இட மே!எண்ணில் ஒன்றும்இல்லா
வெளியே! வெளிமுதல் பூதங்கள் ஆகி விரிந்தஅம்மே!
அளியேன் அறி(வு)அள விற்கள வான(து) அதிஶயமே. 16

ஆகிரி] 163. மதநனை வென்ற தன் பதியையும் வென்றவள்

அதிஶயம் ஆன வடி(வு)உடை யாள்அர விந்தம்எல்லாம்
துதிஜய ஆநந ஸுந்தர வல்லி துணைஇரதி
பதிஜயம் ஆன(து) அபஜயம் ஆகமுன் பார்த்தவர்தம்
மதிஜயம் ஆகஅன் றோ?வாம பாகத்தை வவ்வியதே. 17

ஆகிரி] 164. ''காலன் வரும்கால் காட்சிதந்(து) ஆள்!''எனல்

வவ்விய பாகத்(து) இறைவரும் நீயும் மகிழ்ந்(து)இருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தைஉள்ளே
அவ்வியம் தீர்த்(து)என்னை ஆண்டபொற் பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும் போது வெளிநிற்கவே! 18

கீர வாணி] 165. காட்சிப் பெருமிதம் கரைகாணொ ணாதது

வெளிநின்ற நின்திரு மேனியைப் பார்த்(து)என் விழியும்நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைகண்ட(து) இல்லை கருத்தின்உள்ளே
தெளிநின்ற ஞாநம் திகழ்கின்ற(து) என்ன திருஉளமோ?
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பது(ம்) மேவி உறைபவளே! 19

ஷி] 166. இறைவியின் உறைவிடம் எவைஎவை என்னல்

உறைகின்ற நின்திருக் கோயில்நின் கேள்வர் ஒருபக்கமோ?
அறைகின்ற நான்மறை யின்அடி யோ?முடி யோ?அமுதம்
நிறைகின்ற வெண்திங்க ளோ?கஞ்ஜ மோ?என்றன் நெஞ்சகமோ?
மறைகின்ற வாரிதி யோ?பூர ணாசல மங்கலையே! 20

167. பொன்மைநீல் செம்மைவெண் பசுமைநல் நிறத்தவள்
மலய மாருதம்]

மங்கலை *பாங்கரர் அண்முலை யாள்மலை யாள்வருணச்
பாங்(கு)அலை செங்கை ஸகல கலாமயில் தாவுகங்கை
பொங்(கு)அலை தங்கும் புரிஜடை யோன்புடை யாள்உடையாள்
பிங்கலை நீலிசெய் யாள்வெளி யாள்பசும் பெண்கொடியே. 21

ஷி] 168. 'ஐவரைப் பெற்றநீ ஆண்டுகொண்(டு) அருள்!'எனல்

கொடியே! இளவஞ்சிக் கொம்பே! எனக்குவம் பேபழுத்த
படியே! ** படியின் பரிமள மே!பனி மால்இமயப்
பிடியே! பிரமன் முதலாய தேவரைப் பெற்றஅம்மே!
அடியேன் இறந்(து)இங்(கு) இனிப்பிற வாமல்வந்(து) ஆண்டு
[கொள்ளே! 22

காபி] 169. குறிக்கோள் கூறிக் கோலத்தை வியத்தல்

கொள்ளேன் மநத்தில்நின் கோலம்அல் லா(து)அன்பர் கூட்டம்
விள்ளேன் பரஸம யம்விரும் பேன்வியன் மூஉலகுக்(கு) [தன்னை
உள்ளே! அனைத்தினுக் கும்புறம் பே!உள்ளத் தேவிளைந்த
கள்ளே! களிக்கும் களியே! அளியஎன் கண்மணியே! 23

---

* 'செங்கலசம்முலையாள்', என்றும் பாடம். ** மறையின்' என்றும் பாடம்.

காபி] 170. உனைப்பணிந்த பின்மற்(று) ஒருவரைப் பணியேன்

மணியே! மணியின் ஒளியே! ஒளிரும் மணிபுனைந்த
அணியே! அணியும் அணிக்(கு)அழ கே!அணு காதவர்க்குப்
பிணியே! பிணிக்கு மருந்தே! அமரர் பெருவிருந்தே!
பணியேன் ஒருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே. 24

பிலஹரி] 171. அபிராமி உலகுக்(கு) அருமருந்(து) ஆவாள்

பின்னே திரிந்(து)உன் அடியாரைப் பேணிப் பிறப்(பு)அறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண் டேன்முதல் மூவருக்கும்
அன்னே! உலகுக்(கு) அபிராமி என்னும் அருமருந்தே!
என்னே! இனிஉன்னை யான்மற வாமல்நின்(று) ஏத்துவனே. 25

ஷை] 172. மும்மூர்த் திகளும்நின் அடியவர் ஆவர்

ஏத்தும் அடியவர் *ஏழ்உல கத்தினை பும்படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவர் ஆம்;கமழ் பூம்கடம்பு
சாத்தும் குழல்அணங் கே!மணம் நாறும்நின் தாள்இணைக்(கு)என்
நாத்தங்கு புல்மொழி ஏறிய ஆறு நகைஉடைத்தே. 26

வராளி] 173. என்உள மலம்தீர் நின்அருள் என்னே!

உடைத்தனை! வஞ்சப் பிறவியை; உள்ளம் உருகும்அன்பு
படைத்தனை! பத்ம பதயுகம் சூடும் பணிஎனக்கே
அடைத்தனை! நெஞ்சத்(து) அழுக்கைஎல் லாம்நின் அருள்புனலால்
துடைத்தனை! ஸௌந்தரீ! நின்அருள் ஏ(து)என்று சொல்லுவதே? 27

ஷை] 174. சொற்பொருள் நீயும்நின் துணைவரும் ஆவீர்!

சொல்லும் பொருளும் எனநடம் ஆடும் துணைவர்உடன்
புல்லும் பரிமளப் பூம்கொடி யே!நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும்அவர்க் கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்ஶிவ லோகமும் ஸித்திக்குமே. 28

ஸிந்து பைரவி] 175. தேவியின் பரநிலை தெளிவுறக் கூறல்

ஸித்தியும் ஸித்தி தரும்தெய்வம் ஆகித் திகழும்பரா
ஶக்தியும் ஶக்தி தழைக்கும் ஶிவமும் தவ(ம்)முயல்வார்
முக்தியும் முக்திக்கு வித்தும்வித்(து) ஆகி முளைத்(து எழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தைஅன்றே. 29

---

* 'ஈர்ஏழ் உலகினை' என்றும் பாடம்.

ஸிந்து பைரவி] 176. ஆட்கொண்ட(து) இலேஎன்(று)அறைதலும் நன்ரே!

அன்றே தடுத்(து)என்னை ஆண்டுகொண் டாய்!கொண்ட(து) [அல்லஎன்கை
நன்றே? உனக்(கு)இனி நான்என் செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரைஏற் றுகைநின் திருஉளமே
ஒன்றே! பலஉரு வே!அரு வே!என் உமையவளே! 30

கானடா] 177. ஶிவனெடும் வந்தாள் தெறித்தாள் ஆஶையை

உமையும் உமைஒரு பாகனும் ஏக உருவில்வந்(து)இங்(கு)
எமையும் தமக்(கு)அன்பு செய்யவைத் தார்இனி எண்ணுதற்கு
ஸமயங் களும்இல்லை ஈன்(று)எடுப் பாள்ஒரு தாயும்இல்லை
அமையும் அமைஉறு தோளியர்மேல்வைத்த ஆஶையுமே. 31

ஷை] 178. பூவடி தலைவைத்த பூவைதண் அருள்என்னே!

ஆஶைக் கடலில் அகப்பட்(டு) அருள்அற்ற அந்தகன்கைப்
பாஶத்தில் அல்லல் படஇருந் தேனைநின் பாதம்என்னும்
வாஸக் கமலம் தலைமேல் வலியவைத்(து) ஆண்டுகொண்ட
நேசத்தை என்சொல்லு வேன்?ஈஶர் பாகத்து நேர்இழையே! 32

ஶாமா] 179. காலன் அழைக்கும் கணத்தில்வந்(து) ஆள்க!

இழைக்கும் வினைவழி யேஅடும் காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழு(து)உவந்(து) அஞ்சல்என் பாய்!அத்தர் சித்தம்
குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே! [எல்லாம்
உழைக்கும் பொழு(து)உன்னை யே!அன்னை யே!என்பன் [ஓடிவந்தே. 33

ஷை] 180. தேவியின் உறைவிடம் யாவைஎன்(று) உரைத்தல்

வந்தே ஶரணம் புகும்அடி யாருக்கு வான்உலகம்
தந்தே பரிவொடு தான்போய் இருக்கும் சதுர்முகமும்
பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும் பாகமும்பொன்
செந்தேன் மலரும் அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே 34

181. அரிஅலால் தேவிவே(று) அல்லள்என்(று) அறைந்தமை நீலாம்பரி]

திங்கள் பகவின் மணம்நாறும் சீறடி சென்னிவைக்க
எங்கட்(கு) ஒருதவம் எய்திய வா!எண் இறந்தவிண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவம்எய்து மோ?தரங் கக்கடலுள்
வெங்கட் பணிஅணை மேல்துயில் கூரும் விழுப்பொருளே! 35

நீலாம்பரி] 182. பொருளும் மருளும் தெருளும் தேவியே

பொருளே! பொருள்முடிக் கும்போக மே!அரும் போகம்செய்யும்
மருளே! மருளில் வரும்தெரு ளே!என் மநத்துவஞ்சத்(து)
இருள்ஏதும் இன்றி ஒளிவெளி ஆகி இருக்கும்உன்றன்
அருள்ஏ(து)? அறிகின்றி லேன்அம்பு யாதநத்(து) அம்பிகையே! 36

பூபாளம்] 183. அம்மைதன் மேனியில் அணிவன உரைத்தமை

கைக்கே அணிவது கன்னலும் பூவும்; கமலம்அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்து மாலே; விஷஅரவின்
பைக்கே அணிவது பன்மணிக் கோவையும் பட்டும்;எட்டுத்
திக்கே அணியும் திருஉடை யான்இடம் சேர்பவளே! 37

ஷெ] 184. அமர்உல(கு) ஆள அம்மைதாள் பணிமின்!

பவளக் கொடியில் பழுத்தசெவ் வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகை யும்துணை யாளங்கள் ஶங்கரனைத்
துவளப் பொருது துடிஇடை சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பணிமின்!கண் டீர்!அம ராவதி ஆளுகைக்கே. 38

ஆரபி] 185. என்குறை யோ?நின் குறையோ? எதுவோ?

ஆளுகைக்(கு) உன்றன் அடித்தா மரைகள்உண்(டு); அந்தகன்பால்
மீளுகைக்(கு) உன்றன் விழியின் கடைஉண்டு; மேல்இவற்றின்
மூளுகைக்(கு) என்குறை நின்குறை யேஅன்று முப்புரங்கள்
மாளுகைக்(கு) அம்பு தொடுத்தவில் லான்பங்கில் வாள்நுதலே! 39

ஷெ] 186. பார்வதிக்(கு) அன்பு பூர்வபுண் ணியமே

வாணுதல் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்(து)இறைஞ்சிப்
பேணுதற்(கு) எண்ணிய எம்பெரு மாட்டியைப் பேதைநெஞ்சில்
காணுதற்(கு) அண்ணியள் அல்லாத கந்நியைக் காணும்அன்பு
பூணுதற்(கு) எண்ணிய எண்ணம்அன் றே!முன்செய்
[புண்ணியமே. 40

பூர்வ கல்யாணி] 187. அரன்உமை எனைத்தம் அடியரில் சேர்த்தமை

புண்ணியம் செய்தன மேமந மே!புதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடிநம் காரணத்தால்
நண்ணிஇங் கேவந்து தம்அடி யார்கள் நடுஇருக்கப்
பண்ணிநம் சென்னியின் மேல்பத்ம பாதம் பதித்திடவே. 41

பூர்வ கல்யாணி] 188. அர(வு)இடைப் பனிமொழிப் பெருமலைக்
குசத்தாள்

இடம்கொண்டு விம்மி இணைகொண்(டு) இறுகி இளகிமுத்து
வடம்கொண்ட கொங்கை மலைகொண்(டு)இறைவர் வலியநெஞ்சை
நடம்கொண்ட கொள்கை நலம்கொண்ட நாயகி நல்அரவின்
படம்கொண்ட அல்குல் பனிமொழி வேதப் பரிபுரையே. 42

ப்யாகடை] 189. ஶிவன்செம் பாகச் செந்நிறத் தேவி

பரிபுரச் சீறடிப் பாஶாங் குஶைபஞ்ச பாணிஇன்சொல்
திரிபுர ஸுந்தரி ஸிந்துர மேனியள் தீமைநெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக் குனிபொருப் புச்ஶிலைக்கை
எரிபுரை மேனி இறைவர்செம் பாகத்(து) இருந்தவளே! 43

ஷி] 190. இவளே தலைவிமற்(று) எவரையும் இனித்தொழேன்

தவளே இவள்எங்கள் ஶங்கர னார்மனை மங்கலம்ஆம்
அவளே அவர்தமக்(கு) அன்னையும் ஆயினள் ஆகையினல்
இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியும்ஆம்
துவளேன் இனிஒரு தெய்வம்உண்(டு) ஆகமெய்த்
[தொண்டுசெய்தே. 44

மாண்டு] 191. தீதுநன்(று) எதுநான் செய்யினும் பொறுத்(து)ஆள்!

தொண்டுசெய் யாதுநின் பாதம் தொழாது துணிந்(து)இச்சையே
பண்டுசெய் தார்உள ரோ?இல ரோ?அப் பரி(சு)அடியேன்
கண்டுசெய் தால்அது கைதவ மோ?அன்றிச் செய்தவமோ?
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன் றேபின் வெறுக்கைஅன்றே.45

ஷி] 192. பிழைபொறுத்(து) ஆளல் பிராட்டிநின் கடமை

வெறுக்கும் தகைமைகள் செய்யினும் தம்அடி யாரைமிக்கோர்
பொறுக்கும் தகைமை புதிய(து)அன் றேபுது நஞ்சைஉண்டு
கறுக்கும் திருமிடற் ருன்இடப் பாகம் கலந்தபொன்னே!
மறுக்கும் தகைமைகள் செய்யினும் யான்உன்னை வாழ்த்துவனே. 46

வாசஸ்பதி] 193. கதிர்மதி இடைஒளிர் பதிநிலை கழறல்

வாழும் படிஒன்று கண்டுகொண் டேன்;மனத் தேஒருவர்
வீழும் படிஅன்று; விள்ளும் படிஅன்று; வேலைநிலம்
ஏழும் பருவரை எட்டும்எட் டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே. 47

வாசஸ்பதி] 194. திருவடி தொழுவார் கருவடி(வு) அடையார்

சுடரும் கலைமதி துன்றும் ஜடைமுடிக் குன்றில்ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்துநெஞ்சில் [வரோ?
இடரும் தவிர்த்(து)இமைப் போ(து)இருப் பார்பின்னும் எய்து
குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே. 48

செஞ்சுருட்டி] 195. நரம்பில் இசைவடி(வு) ஆகிய நாயகி

குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவிவெம் கூற்றுக்(கு)இட்ட
வரம்பை அடுத்து மறுகும்அப் போது வளைக்கைஅமைத்(து)
அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்(து) 'அஞ்சல்!'என்பாய்!
நரம்பை அடுத்த இசைவடி வாய்நின்ற நாயகியே! 49

ஷி] 196. நாமம் பலவாம் ஏமம் உடையவள்

நாயகி நான்முகி நாரா யணிகை நளிநபஞ்ச
ஸாயகி ஶாம்பவி ஶங்கரி ஶாமளை ஜாதிநச்சு
வாய்அஹி மாலிநி வாராஹி ஶூலிநி மாதங்கிஎன்(று)
ஆய கியாதி உடையாள் சரணம் அரண்நமக்கே. 50

ஹம்ஸாநந்தி] 197. பிராட்டிதன் அடியர் பிறப்(பு)இறப்(பு) அறுப்பர்

அரணம் பொருள்என்(று) அருள்ஒன்(று) இலாத அஸுரர்தங்கள்
முரண்அன்(று) அழிய முனிந்தபெம் மானும் முகுந்தனுமே
*சரணம் ஶரணம் எனநின்ற நாயகி தன்அடியார்
மரணம் பிறவி இரண்டும்எய் தார்இந்த வையகத்தே. 51

ஷி] 198. அடியார்க்(கு) உளஅடை யாளங்கள் இவையாம்

வையம் துரகம் மதகரி மாமகு டம்ஶிவிகை
பெய்யும் கநகம் பெருவிலை ஆரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாள்அடித் தாமரைக்(கு) அன்புமுன்பு
செய்யும் தவம்உடை யார்க்(கு)உள ஆகிய சிந்நங்களே. 52

ஹிந்தோளம்] 199. மிகஉயர் தவநெறி வகைமுறை விரித்தமை

சின்னம் சிறிய மருங்கினில் சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையு(ம்)முத்(து) ஆரமும் பிச்சிமொய்த்த
கன்னம் கரிய குழலும்கண் மூன்றும் கருத்தில்வைத்துத்
தன்னம் தனிஇருப் பார்க்(கு)இது போலும் தவம்இல்லையே. 53

---

*சரணம்-திருவடி. ஶரணம் ஶரணம்-அடைக்கலம், அடைக்கலம் எனலுமாம்.

ஹிந்தோளம்] 200. திரிபுரை சேவடி தீர்த்திடும் வறுமையை

இல்லாமை சொல்லி ஒருவர்தம் பால்சென்(று) இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவி ரேல்நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம் பால்ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே! 54

ஶங்கராபரணம்] 201. வேத முடிநடு வேர்ஆம் மின்கொடி

மின்ஆ யிரம்ஒரு மெய்வடி(வு) ஆகி விளங்குகின்ற(து)
அன்னாள் அஹ(ம்)மகிழ் ஆநந்த வல்லி அருமறைக்கு(ம்)
முன்னாய் நடுஎங்கு மாய்முடி(வு) ஆய முதல்விதன்னை
உன்னா(து) ஒழியினும் உன்னினும் வேண்டுவ(து)
[ஒன்(று)இல்லையே. 55

ஷை] 202. தத்துவ தத்துவா தீத வடிவினள்

ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்(து)இவ் வுல(கு)எங்கும்ஆய்
நின்றாள் அனைத்தையும் நீங்கிநிற் பாள்என்றன் நெஞ்சின்உள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற வா!இப் பொருள்அறிவார்
அன்(று)ஆல் இலையில் துயின்றபெம் மானும்என் ஐயனுமே. 56

ஸுரடி] 203. அறம்வளர்த் ததுவும் அருளின் இயல்பும்

ஐயன் அளந்த படிஇரு நாழிகொண்(டு) அண்டம்எல்லாம்
உய்ய அறம்செயும் உன்னையும் போற்றி ஒருவர்தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலை யும்கொண்டு சென்றுபொய்யும்
மெய்யும் இயம்பவைத் தாய்!இது வோ?உன்றன் மெய்அருளே. 57

ஷை] 204. பகவதி சரண்அ(ல்)லால் புகல்வே(று) இல்லை

அருணாம் புயத்தும்என் சித்தாம் புயத்தும் அமர்ந்(து)இருக்கும்
தருணாம் புயமுலைத் தையல்நல் லாள்தகை சேர்நயனக்
கருணாம் புயமும் வதநாம் புயமும் கராம்புயமும்
சரணாம் புயமும்அல் லால்கண்டி லேன்ஒரு தஞ்சமுமே. 58

ஸஹானா] 205. தவநெறி நினையாத் தவற்றினைப் பொறுப்பாய்!

தஞ்சம் பிறி(து)இல்லை ஈதல்ல(து) என்(று)உன் தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றி லேன்ஒற்றை நீள்ஶிலையும்
அஞ்(சு)அம்பும் இக்(கு)அலர் ஆகநின் றாய்!அறி யார்எனினும்
பஞ்(சு)அஞ்சு மெல்லடி யார்அடி யார்பெற்ற பாலரையே. 59

ஸஹானு] 206. நின்அடி என்முடி நிறுவிய(து) என்னே!

பாலினும் சொல்இனி யாய்!பனி மாமலர்ப் பாதம்வைக்க
மால்இனும் தேவர் வணங்கநின் ருேன்கொன்றை வார்ஜடையின்
மேலினும் கீழ்நின்று வேதங்கள் பா(டு)மெய்ப் பீடம்ஒரு
நாலினும் சாலநன் ருே!அடி யேன்முடை நாய்த்தலையே. 60

நாத நாம க்ரியா] 207. தன்னைஆட் கொண்ட தகைமையை வியத்தல்

நாயே னையும்இங்(கு) ஒருபொரு ளாக நயந்துவந்து
நீயே நினை(வு)இன்றி ஆண்டுகொண்டாய்!நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவுதந் தாய்!என்ன பேறுபெற்றேன்!
தாயே! மலைமக ளே!செங்கண் மால்திருத் தங்கைச்சியே! 61

ஷை] 208. அம்பிகைச் சிலைமலர் அம்(பு)என(து) உளத்(து)உறும்

தங்கச் சிலைகொண்டு தாநவர் முப்புரம் சாய்த்துமத
வெங்கட் கரிஉரி போர்த்தசெஞ் சேவகன் மெய்அடையக்
கொங்கைக் குரும்பைக் குறிஇட்ட நாயகி கோகநகச்
செங்கைக் கரும்பும் மலரும்எப் போதும்என் சிந்தையதே. 62

ஹுஸேநி] 209. வீணோர்க்(கு) உபதேசம் வீணாய்ப் போம்எனல்

தேறும் படிச்சில ஹேதுவும் காட்டிமுன் செல்கதிக்குக்
கூறும் பொருள்குன்றில் கொட்டும் தறி;குறிக் கும்ஸமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்ப(து) அறிந்(து)இருந்தும்
வேறும் ஸமயம்உண்(டு) என்றுகொண் டாடிய வீணருக்கே. 63

ஷை] 210. தேவிபால் உள்ள அன்பின் திறம்இது

வீணே பலிகவர் தெய்வங்கள் பால்சென்று மிக்கஅன்பு
பூணேன்உனக்(கு)அன்பு பூண்டுகொண் டேன்நின் புகழ்ச்சிஅன்றிப்
பேணேன் ஒருபொழு தும்திரு மேனிப் ப்ரகாசம்அன்றிக்
காணேன் இருநில மும்திசை நான்கும் ககநமுமே. 64

ஷண்முக ப்ரியா] 211. அரன்பால் முருகனை அடைந்திட்ட வல்லமை

ககநமும் வானும் புவநமும் காணவில் காமன்அங்கம்
தஹந(ம்)முன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கையும்செம்
முகனும்முந் நான்(கு)இருமூன்(று)எனத் தோன்றிய மூ(து)அறிவின்
மகனும்உண் டாய(து)அன் ருே!வல்லி நீசெய்த வல்லபமே. 65

ஷண்முகப்ரியா] 212. நாமத் தோத்திரத்(து) ஏமம் நவின்றது

வல்லபம் ஒன்(று)அறி யேன்சிறி யேன்நின் மலர்அடிச்செம்
பல்லவம் அல்லது பற்(று)ஒன்(று) இலேன்பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்உடன் வீற்றிருப் பாய்!வினை யேன்தொடுத்த
சொல்அவம் ஆயினும் நின்திரு நாமங்கள் தோத்திரமே. 66

தோடி] 213. பதம்நினை யாதவர் பலிஓ(டு) ஏந்துவர்

தோத்திரம் செய்து தொழுதுமின் போலும்நின் தோற்றம்ஒரு
மாத்திரைப் போதும் மநத்தில்வை யாதவர் வண்மைகுலம்
கோத்திரம் கல்வி குணம்குன்றி நாளும் குடில்கள்தொறும்
பாத்திரம் கொண்டு பலிக்(கு)உழ லாநிற்பர் பார்எங்குமே. 67

ஷை] 214. அடிநினை தவத்தார் படையாத் தநம்இலை

பாரும் புனலும் கனலும்வெம் காலும் படர்விசும்பும்
ஊரும் முருகு சுவைஒளி ஊ(று)ஒலி ஒன்றுபடச்
சேரும் தலைவி ஶிவகாம ஸுந்தரி சீறடிக்கே
சாரும் தவம்உடை யார்படை யாத தநம்இல்லையே. 68

காம்போதி] 215. கடைக்கண் அருளால் கிடைப்பன கழறல்

*தநம்தரும் கல்வி தரும்ஒரு நாளும் தளர்(வு)அறியா
மநம்தரும் தெய்வ வடிவும் தரும்நெஞ்சில் வஞ்சம்இல்லா
இனம்தரும் நல்லன எல்லாம் தரும்அன்பர் என்பவர்க்கே
கநம்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே. 69

ஷை] 216. அழகைக் கண்டதன் அருமையை உரைத்தல்

கண்களிக் கும்படிக் கண்டுகொண் டேன்கடம் பாடவியில்
பண்களிக் கும்குரல் வீணையும் கையும் பயோதரமும்
மண்களிக் கும்பச்சை வண்ணமும் ஆகி மதங்கர்குலப்
பெண்களில் தோன்றிய எம்பெரு மாட்டிதன் பேர்அழகே. 70

ரஞ்ஜநி] 217. நெஞ்சின் குறையைக் கெஞ்சிக் கேட்டல்

அழகுக்(கு) ஒருவரும் ஒவ்வாத வல்லி அரு(ம்)மறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத் தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்(பு)இருக்க
இழ(வு)உற்று நின்றநெஞ்சே!இரங் கேல்!உனக்(கு) என்குறையே?

* அவஶ்யம் யாவரும் மநப் பாடம் செய்ய வேண்டிய பாடல் இது.

ரஞ்ஜநி]218. நான் இனிப் பிறக்கின்அஃ(து) உன்குறை தான்எனல்

ஏன்குறை தீரநின்(று) ஏத்துகின் றேன்இனி யான்பிறக்கின்
நின்குறை யேஅன்றி யார்குறை காண்?இரு நீள்விசும்பின்
மின்குறை காட்டி மெலிகின்ற நேர்இடை மெல்இயலாய்!
தன்குறை தீரஎம் கோன்ஜடை மேல்வைத்த தாமரையே. 72

யது குல காம்போதி] 219. உருவ வருணனை ஸருவமும் உரைத்தது

தாமம் கடம்பு படைபஞ்ச பாணம் தநுக்கரும்பு
யாமம் வயிரவர் ஏத்தும் பொழு(து)எமக்(கு) என்றுவைத்த
ஷேமம் திருவடி செங்கைகள் நான்(கு)ஒளி செம்மைஅம்மை
நாமம் திரிபுரை ஒன்றோ(டு) இரண்டு நயநங்களே. 73

ஷை] 220. அடிஇணை தொழுவார் அமருல(கு) ஆள்வார்

நயநங்கள் மூன்(று)உடை நாதனும் வேதமும் நாரணனும்
அயனும் பரவும் அபிராம வல்லி அடிஇணையைப்
பயன்என்று கொண்டவர் பாவையர் ஆடவும் பாடவும்பொன்
ஶயநம் பொருந்து தமநியக் காவினில் தங்குவரே. 74

அடாணு] 221. தேவியைப் பணிவார் பூவினிற் பிறவார்

தங்குவர் கற்பக தாருவின் நீழலில்; தாயர்இன்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை; மால்வரையும்
பொங்(கு)உவர் ஆழியும் ஈர்ஏழ் புவநமும் பூத்தஉந்திக்
கொங்(கு)இவர் பூம்குழ லாள்திரு மேனி குறித்தவரே. 75

ஷை] 222. கோலம் குறித்ததும் காலனை மறித்ததும்

குறித்தேன் மநத்தில்நின் கோலம்எல் லாம்நின் குறிப்(பு)அறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப் பிரான்ஒரு கூற்றை
பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாண பயிரவியே! [மெய்யில் 76

பைரவி] 223. அம்மையின் நாமம் அடுக்கித் தொடுத்தமை

பயிரவி பஞ்சமி பாஶாங் குசை பஞ்ச பாணிவஞ்சர்
உயிர்அவி உண்ணும் உயர்சண்டி காளி ஒளிரும்கலா
வயிரவி மண்டலி மாலிநி ஶூலி வராஹிஎன்றே
செயிர்அவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே. 77

பைரவி] 224. விழிக்குத் துணையாய் எழுதின விளம்பல்

செப்பும் கநக கலசமும் போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம வல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழும்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத் தேன்என் துணைவிழிக்கே. 78

கேதார கௌளம்] 225. வேத வழியும் அபிராமி விழியும்

*விழிக்கே அருள்உண்(டு) அபிராம வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்(சு)உண்(டு) எமக்(கு)அவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம் மோ(டு)என்ன கூட்(டு)இனியே? 79

ஷை] 226. கூட்டி ஓட்டிக் காட்டிஆட் டியமை

கூட்டிய வா!என்னைத் தன்அடி யாரில்; கொடியவினை
ஓட்டிய வா!என்கண் ஓடிய வா!தன்னை உள்ளவண்ணம்
காட்டிய வா!கண்ட கண்ணும் மநமும் களிக்கின்றவா!
ஆட்டிய வா!நடம்; ஹாடகத் தாமரை ஆரணங்கே? 80

ஹரி காம்போதி] 227. 'வஞ்சரைச் சாரேன் வஞ்சிநிற் சேர்வேன்'

அணங்கே! அணங்குகள் நின்பரி வாரங்கள் ஆகையினல்
வணங்கேன் ஒருவரை வாழ்த்துகி லேன்நெஞ்சில் வஞ்சகரோ(டு)
இணங்கேன் என(து)உன(து) என்(று)இருப் பார்சிலர் யாவரொடும்
பிணங்கேன் அறி(வு)ஒன்(று) இலேன்என்கண் நீவைத்த
[பேர்அளியே. 81

ஷை] 228. உள்ளக் களியும் உமைபேர் அளியும்

அளிஆர் கமலத்தில் ஆர்அணங் கே!அகி லாண்டமும்நின்
ஒளிஆக நின்ற ஒளிர்திரு மேனியை உள்ளுதொறும்
களிஆகி அந்தக் கரணங்கள் விம்மிக் கரைபுரண்டு
வெளிஆய் விடின்எங்ங னேமறப் பேன்?நின் விரகினையே. 82

---

* இப் பாடலைப் பட்டர் பாடியவுடன் தான் தேவி தன் இடது காதுத் தாடங்கத்தை வான வெளியில் வீசி எறிந்து பூர்ண சந்த்ரனை நிலவு பொழியக் காட்டினள். அவசியம் அனைவரும் உருப்போட வேண்டிய பாட்டு இது.

ஸாவேரி] 229. வந்தனை புரிவார் இந்திரர் ஆவார்

விரவும் புதுமலர் இட்டுநின் பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல் லார்இமை யோர்எவரும்
பரவும் பதமும் அயிரா வதமும் பகீரதியும்
உரவும் குலிஶமும் கற்பகக் காவும் உடையவரே. 83

ஷை] 230. படையாள் இனிஎனைப் படையாள் உம்மையும்

உடையாளை ஒல்குசெம் பட்(டு)உடை யாளை ஒளிர்மதிச்செஞ்
ஜடையாளை வஞ்சகர் நெஞ்(சு)அடை யாளைத் தயங்கு(ம்) நுண்நூல்
இடையாளை எங்கள்பெம் மான்இடை யாளைஇங்(கு) என்னைஇனிப்
படையாளை உங்களை யும்படை யாவண்ணம் பார்த்(து)இருமே. 84

231. பார்க்கும் திஶைஎலாம் பராஶக்தி வடிவமே
ஸிம்மேந்த்ர மத்யமம்]

பார்க்கும் திஶைதொறும் பாஶாங் குஶமும் பனிச்சிறைவண்(டு)
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும்என் அல்லல்எல்லாம்
தீர்க்கும் திரிபுரை யாள்திரு மேனியும் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை மேல்முத்து மாலையுமே. 85

ஷை] 232. பால்தேன் பா(கு)எனும் பனித்த மொழியாள்

மால்அயன் தேட மறைதேட வானவர் தேடநின்ற
காலையும் சூடகக் கையையும் கொண்டு கதித்தகப்பு
வேலைவெம் காலன்என் மேல்விடும் போது வெளிநில்கண்டாய்!
பாலையும் தேனையும் பாகையும் போலும் பனிமொழியே! 86

கல்யாணி] 233. மொழிமநம் காணாள் விழிவினைக்(கு) ஆனாள்

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின்திரு மூர்த்தம்என்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற தால்;விழி யால்மதனை
அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டம்எல்லாம்
பழிக்கும் படிஒரு பாகம்கொண்(டு) ஆளும் பராபரையே! 87

ஷை] 234. 'தரம்அன்(று) இவன்'எனத் தள்ளல்ஆ காது''

பரம்என்(று) உனைஅடைந் தேன்தமி யேனும்உன் பக்தருக்குள்
தரம்அன்(று) இவன்என்று தள்ளத் தகாது! தரியலர்தம்
புரம்அன்(று) எரியப் பொருப்புவில் வாங்கிய போதில்அயன்
ஶிரம்ஒன்று செற்றகை யான்இடப் பாகம் சிறந்தவளே! 88

முகாரி] 235. அறிவு மறக்கையில் இறைவீ! வருவாய்!

சிறக்கும் கமலத் திருவே! நின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தரும்நின் துணைவரும் நீயும் துரியம்அற்ற
உறக்கம் தரவந்(து) உடம்போ(டு) உயிர்உற(வு) அற்(று)அறிவு
மறக்கும் பொழு(து)என்முன் னேவரல் வேண்டும்! வருந்தியுமே. 89

ஷி] 236. மநத்(து)அலர் உமைபுக எனக்கொரு குறை(வு)இலை

வருந்தா வகைஎன் மநத்தா மரையினில் வந்துபுகுந்(து)
இருந்தாள் பழைய இருப்பிடம் ஆக இனிஎனக்குப்
பொருந்தா(து) ஒருபொருள் இல்லைவிண் மேவும் புலவருக்கு
விருந்(து)ஆக வேலை மருந்(து)ஆ னதைநல்கும் மெல்இயலே! 90

ப்யாக்] 237. அடியரைத் தொழுவார் அடைவன கூறல்

மெல்லிய நுண்இடை மின்அனை யாளை விரிஜடையோன்
புல்லிய மென்முலைப் பொன்அனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழும்அடி யாரைத் தொழும்அவர்க்குப்
பல்இயம் ஆர்த்(து)எழ வெண்பக(டு) ஊரும் பதம்தருமே. 91

ஷி] 238. பக்தியே இஷ்ட தைவம்என்(று) உரைத்தல்

பதத்தே உருகிநின் பாதத்தி லேமநம் பற்றிஉன்றன்
இதத்தே ஒழுக அடிமைகொண் டாய்!இனி யான்ஒருவர்
மதத்தே மதிமயங் கேன்அவர் போன வழியும்செல்லேன்
முதல்தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ்நகையே! 92

மோஹநம்] 239. முரண்பா டுகளை முன்னி வியந்தமை

நகையே இஃ(து)இந்த ஞாலம்எல் லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை; மானே முதுகண்; முடிவில்அந்த
வகையே பிறவியும்; வம்பே மலைமகள் என்பதும்நாம்
மிகையே இவள்தன் தகைமையை நாடி விரும்புவதே. 93

ஷி] 240. அடியார் இலக்கணம் அறிவித்து நின்றமை

விரும்பித் தொழும்அடி யார்விழி நீர்மல்கி மெய்ப்புளகம்
அரும்பித் ததும்பிய ஆநந்தம் ஆகி அறி(வு)இழந்து
சுரும்பில் களித்து மொழிதடு மாறிமுன் சொன்னஎல்லாம்
தரும்பித்தர் ஆவர்என் றால்அபி ராமி ஸமயம்நன்றே. 94

241. தனக்குள் ளவற்றைத் தாய்க்(கு)அங்(கு) அளித்தமை
ரீதி கௌளை]

*நன்றே வருகினும் தீதே விளைகினும் நான்அறிவ(து)
ஒன்றேயும் இல்லை உனக்கே பரம்எனக்(கு) உள்ளஎல்லாம்
அன்றே உன(து)என்(று) அளித்துவிட் டேன்அழி யாதகுணக்
குன்றே! அருள்கட லே!ஹிம வான்பெற்ற கோமளமே! 95

ஷை] 242. பார்ப்பதி அடியார் பார்க்(கு)அதி பதியே

கோமள வல்லியை அல்லிஅம் தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை ஏதம் இலாளை எழுதரிய
ஶாமள மேனி ஸகல கலாமயில் தன்னைத்தம்மால்
ஆம்அள வும்தொழு வார்எழு பாருக்கும் ஆதிபரே. 96

நவரோஸ்] 243. அம்மையைப் போற்றுவார் ஆர்எனப் புகன்றமை

ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர்தம்கோன்
போதில் பிரமன் புராரி முராரி பொதியமுநி
காதிப் பொருபடைக் கந்தன் கணபதி காமன்முதல்
ஸாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே. 97

ஷை] 244. மெய்ந்நெஞ்(சு) அன்றிப் பொய்ந்நெஞ்சு புகுதாள்

தைவந்து நின்அடித் தாமரை சூடிய ஶங்கரற்குக்
கைவந்த தீயும் தலைவந்த ஆறும் கரந்த(து)எங்கே?
மெய்வந்த நெஞ்சின்அல் லால்ஒரு காலும் விரகர்தங்கள்
பொய்வந்த நெஞ்சில் புகஅறி யாமடப் பூங்குயிலே! 98

குந்தல வராளி] 245. மதுரை, மலை, வெளி, மறையில்மன் னியமை

குயிலாய் இருக்கும் கடம்பா டவிஇடைக் கோலஇயல்
மயிலாய் இருக்கும் ஹிமயா சலத்(து)இடை வந்(து)உதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில் கமலத்தின் மீ(து)அன்னமாம்
கயிலா யருக்(கு)அன்(று) இமவான் அளித்த கநம்குழையே. 99

ஷை] 246. கஞ்ஜை உருவமே நெஞ்சில் நிலவுதல்

குழையத் தழுவிய கொன்றைஅம் தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடும் தோளும் கருப்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரிஅம் பாணமும் வெண்நகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சில்எப் போதும்
[உதிக்கின்றவே. 100

---

*யாவரும் நிஶ்சயமாக நெட்டுருப் பண்ண வேண்டிய 'ஶரணாகதிப்' பாசுரம் இது.

19 (இ) நூற்பயன் (கட்டளைக் கலித்துறை)

மத்யமாவதி] 247. தேவியைத் தொழுவார் தீங்(கு)எதும் இல்லார்

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டம்எல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவிஅடங்கக்
காத்தாளை அம்குச பாசாங் குசமும் கரும்பும்அம்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்(கு)ஒரு தீங்(கு)
[இல்லையே

(அபிராமி அந்தாதி முற்றும்)

## 20. அபிராமிஅம்மை மீது பிற துதிப் பாடல்கள் †

### 248. கருணை விழியின் கனி(வு)அருள் செய்வாய்!

(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

படுகளவு கொலைபயின்ற பஞ்சபா தகருடனே பழகி நாளும்
கடுகளவும் உனதுவிழிக் கருணைஎனக் (கு) இல்லாமல் கலங்கி
னேன்காண் !
இடுசரண நூபுரத்தாய்! இந்திரவில் புருவத்தாய்! இலங்கு மார்பின்,
வடுவகிரின் நயநத்தாய் ! கடவூரில் அபிராம வல்லித் தாயே !

[படுகளவு – மிக்க களவு. பஞ்ச பாதகர் – கொலை, களவு, கள், காமம், பொய் இவை ஐந்திலும் ஈடுபட்ட பாவிகள். நூபுரம்— சிலம்பு. இந்திர வில்—வான வில். வடு வகிர் – மாவடுப் பிளப்பு]

### 249. தையலர் மையலில் தவியா வரம்தா!

(கட்டளைக் கலித்துறை)

கைக்கிளை என்றே இருதலைக் காமம் கடிப்பிக்கும்ஓர்
கைக்கி(ள்)ளை கொண்ட மடஅன்ன மே!கட வைப்பரன்ஆ
சைக்கிளை யான்ஜடை யான்புடை யாய்!மநம் தையலர்ஆ
சைக்கிளை யாவரம் தா!அபி ராம ஸவுந்தரியே!* (1)

---

† இத் தலைப்பில் வரும் மூன்று பாடல்களும் (எண் 248, 249, 250) இது வரை அச்சில் வெளி வராதவை; முதன் முதலாக இப் பதிப்பில் வெளியிடப் பெறுகின்றன. இது பற்றிய முழுச் செய்தியை முகவுரையிற் காண்க.

*'அபிராம ஸவுந்தரியே' என மகுடம் கொண்டு முடியும் ஒரு கட்டளைக் கலித்துறைப் பதிகத்தின் உதிரிப் பாடல்களாக இவை இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

[கைக்கிளை - ஒருதலைக் காமம். இருதலைக் காமம் - தலைவன், தலைவி இருவரும் ஒருவரை ஒருவர் பரஸ்பரம் விரும்பிய நிலை. கடிப்பிக்கும் - விடாது பற்ற வைக்கும். கைக்கிளை - கைக்கிள்ளை - கையிலுள்ள கிளி. கடவை – திருக்கடவூர். ஆசை - பொன். கிளையான் - ஒளியினன். புடை - பக்கம். தையலர் – மகளிர். ஆசைக்கு இளையா – காமத்தில் இளைத்துப் போகாத. ஸவுந்தரி - ஸௌந்தரி.]

250. திருவடி தீக்ஷைஎன் ஶிரத்தினில் தருவாய்!

ஶேடம் ஶிவன்எனின் நீஶேடி; ஶேடி ஶிவன்எனில்நீ
ஶேடம்;சிறியன் உரைப்ப(து)எவ் வா(று)என்ஶிரத்தினில்உன்
தாடங்க வை!முன் உவாவை உவாஆக்கும் சந்திரனும்
தாடங்க மாதங்கி யே!அபி ராம ஸவுந்தரியே! (2)

[ஶேடம் - ஶேஷம் - மிச்சப் பொருள். ஶேடி - ஶேஷி - மிச்சத்துக்கு மூல காரணமான முதற் பொருள். ஶேஷத்வமும், ஶேஷித்வமும் ஶிவனுக்கும் உமைக்கும் பரஸ்பரம் பொது என் பதை விளக்கினர். ஶேஷ ஶேஷி பாவம் - ஆண்டான் அடிமைத் திறம்; நியாமகனும் நியமிக்கப்படுபவனுமாய் இருக்கும் தன்மை; ஊடிய மகளிரை நாயகரோடு உயர்ந்தார் சேர்க்கும் ஆற்றல். தாடங்க — தாள் + தங்க — திருவடி பதிய. வை - வைப்பாயாக. உவாவை - அமாவாஸையை. உவா ஆக்கும் - பௌர்ணமியாகச் செய்த. தாடங்கம் - காதணி; தோடு. அமாவாஸையைப் பௌர் ணமி ஆக்கிய சந்த்ர தாடங்கத்தைப் பற்றி வெளிப்படையான குறிப்பு இப் பாட்டில் வரலால் இது அபிராமி அந்தாதி பாடப் பெற்ற பின்னரே அபிராமிப் பட்டர் வாக்கில் எழுந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது.]

## IV திருக்கடவூரைப் பற்றிய 20 ஆம் நூற்றுண்டு நூல்கள்

## 21. திருக்கடவூர்த் தல புராண வசநத் துதிப் பாக்கள்

(திருக்கடவூர்-ப்ரஹ்மஶ்ரீ பாலக்ருஷ்ண தீக்ஷிதர்-கி.பி.1905)

251. காப்பு [கலி வ்ருத்தம்]

உலகெ லாம்உணர் வாம்அபி ராமியோ(டு)
உலவி உள்உறை யும்அமு தீஶவரன்
நிலவு வில்வ நெடுவந மாந்மியம்
சொலவி நாயகன் தூவடி ஏத்துவாம். (1)

ஸ்ரீ சோர கணபதி துதி* (கலி நிலைத் துறை)

கார்அ(து) அணவுநீர்க் காவிரித் தென்கரைக் கடவூர்ச்
சீர்அ(து) அண(வு)அமு(து) ஒளித்துத்தம் திருவடி சிந்தை
ஊர வணங்கிய உம்பர்முன் உதித்(து)அமு(து) உதவும்
சோர கணபதி ஆம்கள்ள வாரணற் றெழுவாம்.

252. வில்வாரண்யேஶ்வரர் துதி
(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

அன்பருக் கன்ப! போற்றி! அடியவர்க்(கு) எளியாய்! போற்றி!
என்பிழை பொறுத்(து)ஆள்! போற்றி! எங்குமாய் நிறைந்தாய்!
[ போற்றி!
மின்பொலி ஶூல! போற்றி! வில்லுவா ரண்யா! போற்றி!
பொன்பொலி ஜடையாய்! போற்றி! போற்றி! நின் சரணம்
[ போற்றி! (2)

253. அமுதீஶர் துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

நீர்பூத்த தாமரையோன் நேமிஅரி தேடரிய
நிகர்இ லாத
சீர்பூத்த நிறைவாகிக் குறை(வு)இன்றி மறைஅகத்திற்
சேர்ந்(து)எந் நாளும்
பார்பூத்த பொய்ப்பொருளைப் பொய்த்தார்க்கு வைப்பாய
பலத்தை நல்கும்
ஏர்பூத்த வில்வவநத்(து) அமுதகடத்(து) உறைபொருளை
ஏத்தி வாழ்வாம். (3)

---

* திருக்கடவூர்த் தல புராண வசநத்தில் துதிப் பாக்கள் பகுதியில் சோர கணபதி துதியாக "உண்ணும் பொழுதும்" எனத் தொடங்கும் அபிராமி பட்டரின் பாடலே (எண் 74) காணப்பட்டமையின் அது நீக்கப் பெற்றது. கள்ள விநாயகர்க்கும் ஒரு துதி இருத்தல் வேண்டும் என அன்பர்கள் நினைப்பர். ஆதலின் ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளால் பாடப் பெற்ற இப் பாட்டு, தொடர் எண் இன்றி இங்குச் சேர்க்கப் பெற்றுளது.

254. அபிராமஸுந்தரி துதி (எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

நிலவுகதிர் மண்டலத்தை நெருங்க ஓங்கி
நெட்(டு)ஒன்றில் தளிர்மூன்று நெடுமிக் காநத்
தலநடுவில் அண்டர்களுக்(கு) அமுதம் ஆகும்
தாணுவின்முன் இடத்(து)உதித்துக் கீழ்நோக் காயும்
உல(கு)எவையும் உந்தியினில் விளங்க அன்பர்க்(கு)
ஒளிர்அமுதம் ஊற்றஅதன் மேல்பால் தங்கி
இலகிவளர் குண்டலியாம் அபிரா மித்தாய்
இணைஅடியை எப்போதும் ஏத்தி வாழ்வாம். (4)

[நிலவு-(நிலாவைப் பொழியும்) சந்த்ரன். நிலவு-விளங்குகின்ற எனலுமாம். கதிர்-ஸூர்யன். நெட்டு-காம்பு. தளிர் மூன்று-மும் மூன்று தளங்களாக உள்ள வில்வ(இலை)த் தளிர்கள். நெடுமிக் காநத் தலம்-ஓங்கி நீண்டு வளர்ந்த (வில்வ) மரக் காடு ஆகிய திருக்கடவூர். அமுதம் ஆகும் தாணு-அம்ருத கடேச்வரர். உந்தி - கொப்பூழ் உள்ள வயிறு. குண்டலி-குண்டலிநி-மஹாமாயை.]

255. கால ஸம்ஹார மூர்த்தி துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

சீர்ஆரும் மார்க்கண்டன் செய்தபூ ஜைக்காகச்
சினந்து கூற்றைப்
பார்ஆரும் விண்ணவரும் பந்நகரும் காணஇடப்
பாதத் தாலே
கார்ஆரும் களத்(து)அரவின் உலகில்விழ உதைத்(து)அருளிக்
கடவூர் வாழும்
வார்ஆரும் முலைமடந்தை ஒருபாகன் இருதாளை
மநத்துள் வைப்பாம். (5)

[கார்-கருமை. களம் – விஷம். அரவின்-(பெரிய) பாம்பைப் போல். அரவின் உலகில்-ஆதிசேஷனாகிய பாம்பால் தாங்கப்பெறும் பூலோகத்தில் எனலுமாம். (பந்நகரும்-) நாக லோகத்தவர்களும் காண என்றமையின் அரவின் உலகு-நாக லோகம் எனினும் பொருந்தும்.]

256. வாலாம்பிகை துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

பாலன்மார்க் கண்டற்(கு) இன்பம் பாலித்தற்(கு) அருளாய்த் [தோன்றிக்
காலனைக் காலால் மாய்க்கும் கடவுள்தன் உருவம் ஆகும்
நீலவே தண்டத்(து) ஓர்பால் நிறம்மிகு மலர்ஏழ் ஆர்ந்த
வாலையாம் பசும்பொற் கொம்பை மநத்தினுள் அமைத்து [வாழ்வாம். (6)

[நீல வேதண்டம் - நீல மலை போலக் கறுத்த உருவில் வெளிப் பட்ட கால ஸம்ஹார மூர்த்தி. நிறம் - ஒளி. மலர் ஏழ் - மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை ஏழு இடங்களிலும் உள்ள வெவ்வே றிதழ்த் தாமரைகள். ஆர்ந்த - பொருந்திய.]

257. ஸபாபதி துதி (எழுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

அடர்காளி முடிநாண அடுபூதம் அடிதாழ
அயன்ஏழு ஜதிபோடவே
கடல்ஈடு பறையோடு கணநாதர் துதியோடு
கலைவாணி மறைபாடவே
விடைஏவல் ஸநகாதி தவயோகி ரிஷிகாண
வெளிமீதில் உமையாளுடன்
நடம்ஆடு நடராஜன் இருதாளை மறவாது
நமன்ஏக நினைவாம் அரோ. (7)

[அடர்-(தாண்டவப்) போர் புரிந்த. அடு - கொல்லும். ஏழு ஜதி - ஸப்த தாளங்கள். ஈடு - ஒப்பாக.]

258. தக்ஷிணா மூர்த்தி துதி (எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)
ஶீலமுநி நால்வர்மதி ஶிவமே பற்றிச்
சிந்மயமும் மூலம்அதில் திரும்பி ஒன்றுய்

ஏலஉயர் மால்வரையில் வலக்கால் தொங்க
இடக்காலே மடக்கிஅதில் ஏற்றி நீண்ட
தாலவிரல் மேல்உறஅங் குஷ்டம் தன்னைத்
தர்ஜநியின் நுனிதீண்ட மிச்சம் கூட்டிச்
சாலவளர் ஆலடியில் தானே தானும்
தக்ஷிண மூர்த்திபத ஜலஜம் போற்றி. (8)

[நால்வர் - ஸநகாதியர். சிந்மயம் - அறிவு மயம். மும்மூலம் - அ, உ, ம என்னும் மூன்று மூலாக்ஷரங்கள். தர்ஜநி - சுட்டு விரல்.]

259. ஸுப்ரம்மண்யர் துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

மதிரவி முடிமீ(து) ஊர்ந்து மன்னும்மேற் கடலில் தோயப்
புதியதேன் அருவி என்றும் பூநிமிர்ந்(து) அமர ஓங்கும்
பொதிகைமா முநிக்கு ஞாநப் பூரணப் பொருளைக் காட்டிக்
கதிதரும் கந்த வேலைக் கருத்தினில் இருத்தி வாழ்வாம். (9)

260. திருமால் துதி (கலி வ்ருத்தம்)

அமலே ஆதிஎன்(று) எண்ணி அவள்பதம்
விமலம் ஆகத் தொழுதுவிண் ணோருடன்
ஸமல(ம்) நீங்கித் தனிஅமு(து) உண்டுவாழ்
கமலே நாதன் கழல்இணை ஏத்துவாம். (10)

261. சதுர்முகன் துதி (கலி வ்ருத்தம்)

அலேபுனல் மதிஅர(வு) அணியும் நாதனே
தலேவன்என்(று) எணிமிகத் தவம்இ யற்றுகால்
மலேமக ளொடும்அரன் வழங்கி யவணம்வாழ்
கலேமகள் கொழுநன்நற் கழல்இ றைஞ்சுவாம். (11)

262. நாமகள் துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

இலக்கண இலக்கி யங்கள் இமைப்பொழு தேனும் கல்லா(து)
அலக்கணுர் புலேக்கு றும்பன் அமுதமே இலிங்கம் ஆகும்
தலத்(து)உயர் மான்மி யத்தை ஸத்குரு அருளால் ஓதக்
கலேக்(கு)உயர் வாணி பாதம் கருத்தினில் இருத்தி வாழ்வாம். (12)

**263.** திருநந்தி தேவர் துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

ஸித்தர்கள் இருடி கட்கு ஸ்ரேஷ்டமாய் உதித்து நித்தம்
ஸத்தியம் ஸாந்தம் ஆதித் தனிப்பதி ஞறு பேறும்
அத்தனல் அளிக்கப் பெற்றே அநுதிநம் அவர்முன் தங்கும்
கத்தனும் நந்தி தானேக் கருத்தினில் இருத்தி வாழ்வாம், (13)

**264.** நால்வர் துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

கற்பனே உலகம் எல்லாம் கடந்(து)அரன் பதத்தின் மேவி
விற்பன அடியார் ஆக விளங்குஸம் பந்தர் அப்பர்
பற்பல் ஏவல் செய்யப் பரனை விடுவன் ஞெண்டர்
நற்பொருள் வாத வூரர் நறுமலர்ப் பதங்கள் போற்றி. (14)

**265.** மார்க்கண்டேயர் துதி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

ஈர்எட்டை அயனல் பெற்றே என்(று)என்றும் ஈர்எட்(டு) ஆக
வீரட்டத்(து) அமுதை ஏத்தி விதியினை மதியால் மாற்றி
ஈர்எட்டுப் பனிரண்(டு) எட்டில் ஈர்இரண்(டு) அழியா(து)
ஒன்ருய்ச்
சீர்இட்ட முநிமார்க் கண்டன் செய்யசிற் றடியைத் தாழ்வாம்
(15)

[ஈர் எட்டு - $2\times8=16$ வயது. ஈர்எட்டு ஆக—(வயது) பதினறு ஆக. ஈர்எட்டுப் பனிரண்டெட்டில் - $2\times8+12\times8=16+96=112$ இல். ஈர் இரண்டு ($2\times2=4$) நான்கு. அழி - அழித்துக் குறைத்த பின் (112 — 4) 108. யாது ஒன்ருய் - மிகுதியாக நிற்கும் 108 ஆக=108 சதுர் யுகங்களாக. சீர் இட்ட - தம் வாழ்நாளானது நீளும்படியான சிறப்பைப் பெற்ற.]

**266.** திருக்கடவூரில் வழிபட்ட அடியார்கள் துதி

(பதினன்கு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)

திருமாயன் அயன்வாணி ஸஸிஇந்த்ரன் வரிஉம்பர்
ஸித்தர்ரிஷி முநிவர் அஸுரர்
திக்பாலர் ஆறிருது பூதேவி நவதுர்க்கை
சித்ரவ்ரதர் ஸப்த கந்நி

குருவாம் அகஸ்த்தியர்பு லஸ்த்யர்ஜாம் பவர்கலய
குங்கிலியர் ரத்நா கரன்
கூற்றன்வா ஸுகிப்ரமதி ஹநுமான்இ ராமன்மதி
குணவதிபி ராமி காரி
தருமஶ்ரீ லன்காக(ம்) மார்க்கண்டன் மிருகண்டு
ஸதிமருத் துவதி ஶிபிமன்
சந்த்ரபூ ஷணர்ரத்ந கைடன்ஐந்(து) இரவிஶிவ
ஶருமன்யம படர்கள் ஸோம
ஶருமன்ஹே மக்கிரீ டன்சோழன் அபிராமி
தாஸபா ரதிபட்டர் முத்
தமிழ்வல்ல என்குரவன் உய்யவந் தான்முதல
தாதர்தாள் மலர்கள்தொழு வாம். (16)

[ஶசி-இந்த்ராணி. வரி–புலி- உம்பர்-தேவர். ஆறு இருது-வஸந்த, க்ரீஷ்ம, வர்ஷ, ஶரத், ஹேமந்த, ஶிஶிர ருதுக்கள். கூற்றன்-எமன். குரவன்-ஆசிரியர். தாதர்–அடியார்கள். வழிபட்டவர்களின் பெயர்ப் பட்டியலை முகவுரையிற் காண்க.]

267. ஸ்ரீ(வில்வ) வ்ருக்ஷ ஸ்துதி (அறு சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

இந்தரி ஒளியே மும்மூன்(று) இலைகளாய்த் தழைந்து வானோர்
வந்தநம் செய்ய நீண்டு வநஜனுக்(கு) உயர்ஞா நம்தான்
தந்(து)அரன் வடபால் தங்கித் தனைஅடைந் தவர்கட்(கு) [எல்லாம்
எந்தையார் பதத்தை நல்கும் எழில்வில்வம் இறைஞ்சி வாழ்வாம். (17)

[ஸ்ரீ வ்ருக்ஷம்–வில்வ மரம். இந்து-சந்த்ரன். அரி–ஸூர்யன். ஒளி–அக்நி. வநஜன்-ப்ரஹ்மா.]

268. பிஞ்ஜில ஸ்துதி (எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

அலகில்உயிர் எவைஇடத்தும் அமரும் அப்பன்
அடிகள்மார்க் கண்டெயர்க்காய் அழைத்த ஞான்றில்
உல(கு)எவையும் தன்னஹத்தில் அமைத்த அம்மை
ஒன்றுமுதல் நவதளிர்ஆர் கொடிகள் ஆகி

ஜலஜம்நிறை கங்கையுடன் திரும யாநம்
தனில்உதித்துத் தனைஅடைந்தோர் பவத்தை மாற்றப்
புலவர்தொழும் அமுதகடம் இடையில் ஓங்கும்
பிஞ்ஜிலத்தை எந்நாளும் போற்றி வாழ்வாம். (18)

[நவ தளிர் ஆர் கொடிகள்-நவ ஶக்தி ஸ்வரூபம் ஆன ஒன்பது தளிர்களை உடைய பிஞ்ஜிலக் கொடிகள்.]

### 269. ஸித்தர்கள் துதி (கலி நிலைத்துறை)

முக்தி ஆகிய முழுமுதல் அமு(து)இடை அமைய
ஶக்தி யாம்அபி ராமியின் தாள்துணை இடும்என்(று)
இத்தை வாகட மந்திரம் இரஸவா தமும்நல்
ஸித்தி யாவுமாய்த் தெருட்டிய ஸித்தரைப் பணிவாம். (19)

[இத்தை-இதனை. வாகடம்–வைத்ய நூல். தெருட்டிய-உறுதிப் படுத்திய; தெளியச் செய்த; வற்புறுத்திய.]

### 270. திருக்கடவூர் ஸ்துதி (கலி வ்ருத்தம்)

தருக்கலை ஆன்இனம் தறுகண் மாபுலி
திருக்கடை யா(து)உயர் தீம்தண் நாட்டினில்
இருக்கவன் ஆதியோர்க்(கு) இனிமை நல்கிய
திருக்கட வூரினைத் திநமும் போற்றுவாம். (20)

[தரு-இசைப்பாட்டு வகையில் மயங்கும். கலை-மான். ஆன் இனம்-பசு வகை. தறுகண்-வீரம்; அஞ்சாமை. திருக்கு–மாறுபாடு; குற்றம். கலை...அடையாது: புலி, மானையும் பசுவையும் கொல்லும் பகைமை (மாறு பாட்டு)க் குணம் இல்லாமல். இருக்கவன்-ருக் முதலிய நால் வேதம் வல்ல ப்ரம்மன்.

### 271. நூற் பயன் (எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

விண்டயன்இந் திரன்முதலோர் வியந்து சூழும்
வில்வவந மாந்மியத்தை விளக்கும் முன்நூல்
கொண்டவர்கள் மண்டலங்கள் மூன்றும் கூடிக்
கொண்டாடக் குவலயத்தில் என்றும் வாழ்ந்தே

அண்டர்களுக்(கு) அரியஸுதை அதன்மேல் ஆகும்
அந்தம்இலா அதிற்படிந்(து)அந் தகனை மாற்றிப்
பண்டையமார்க் கண்டன்எனப் பதினா றுண்டாய்ப்
பகல்இரவற்(று) அருள்மயமாய்ப் பல்கு வாரே. (21)

[விண்டு-திருமால். முன் நூல்-முதல் நூலான வடமொழித் தல புராணம். மண்டலங்கள் மூன்று-மண், விண், பாதாளமாம் மூன்று உலகங்கள். குவலயம்-உலகம். ஸுதை-அம்ருதம். அதில்-அம்ருத புஷ்கரணியில். பல்குவர்-பெருகுவர்.]

272. நூல் வந்த வழி (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

புண்ணிய வியாதன் ஓதும் புராணமூ வாறு தம்முள்
எண்ணிய காந்தம் ஏத்தும் ஈசஸம் ஹிதையின் ஏழு
நண்ணிய அரண்யத்(து) ஒன்றும் நளிர்வில்வ வநத்தின் மேன்மை
பண்ணெழு நால்ஒன் றாய படலம்அன்(று) உரைத்தார் ஸூதர். (22)

[ஏழு...அரண்யம்-கஜ, வேத, நைமிச, தில்லை, வட, ஶ்வேத, வில்வ அரண்யங்கள். அரண்யம்-காடு. எழுநால் ஒன்றாய படலம்— $7\times4+1=$ தல புராணத்தில் 29 படலங்கள் உள்ளன.]

273. நூலை மொழி பெயர்த்தோர் (எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

நறைகமழும் வில்வவநத்(து) அமுதம் ஆக
நயந்(து)உறையும் பெருங்கருணை நாதன் கீர்த்தி
மறைபுகழும் திருக்குடந்தைப் பால க்ருஷ்ண
மறைமுநியாய் உதித்தஉயர் மதிசூழ் மேகம்
நிறைதவரு வடமொழியாம் பரவை தன்னை
நிறையஉண்டு தமிழ்மழையாய் நிறைத்த தாலே
சிறைபடும்எச் ஜீவன்உளும் சென்றே பக்திச்
செழும்பயிராய் ஸித்திமுக்தி விளைக்கும் அன்றே. (23)
(திருக்கடவூர்த் தலபுராண வசநத் துதிப்பாக்கள் முற்றும்)

# 22. திருக்கடவூர் ஸ்ரீ கள்ள வாரணப் பிள்ளையார் திருஇரட்டை மணிமாலை

[திருக் கடவூர் மயாநம்-செந்தமிழ் வித்யாசாலை ஆசிரியர் ஸ்ரீ ந.க. முத்துச் சிதம்பரச் செட்டியார் அவர்கள் இயற்றியது-1937 ஆம் ஆண்டுப் பதிப்பு]

### 274. காப்பு (கலி வ்ருத்தம்)

உலகம் எங்கணும் உள்ளவர் ஓங்கிட
அலகில் ஜோதிஎம் அம்பலத்(து) ஐயனை
நிலவு யானையை நிந்மலக் கந்தனைத்
திலக வாள்நுதல் தேவியைப் போற்றுவாம்.

### 275. நூல் (நேரிசை வெண்பா)

கடல்அமுதம் அன்(று)அளித்தோன் கண்மணியாம் மின்கண்
மடல்அமுத நோக்(கு)அருளும் மன்னும்-திடம்உடையோர்
உள்ளமுகத் தெள்ளமுதம் ஊற்றும் திருக்கடவூர்க்
கள்ளமுக வாரணத்தான் காண். (1)

### 276. (கட்டளைக் கலித்துறை)

தாண்பரி(து) ஆம்கட வூர்உறை வள்ளல் கருதரிதாம்
சேண்பரி ஏறுடைச் சிந்மயத் தோன்இளம் சேய்முநிக்கு
மாண்பரி அன்னத்(து) இறைவர்க்(கு) ஒளிஒளி வாய்க்கும்வண்ணம்
பூண்பரி கூற்றுதை காலோன் புகழ்மணிப் பூங்களிறே ! (2)

### 277. (நேரிசை வெண்பா)

களித்தருளும் கன்றே! கடவூரில் அன்பர்க்(கு)
அளித்(து)அருளும் இன்பத்(து) அமுதே! — ஒளிக்குவளைக்
கண்ணாள் அபிராமி கைக்கமலம் சேர்த்(து)அணைமுக்
கண்ணாள் அமுதமே! கா! (3)

### 278. (கட்டளைக் கலித்துறை)

கார்அமர் வண்ணக் கஜமுக! கங்கைக் கரைஉவக்கும்
சீர்அமர் செல்வத்(து) எழில்மணி யே!சினச் சிந்துரமாப்
போர்அமர் பூண்(டு)உல(கு) ஆண்ட புநித!எம் போதகமே!
பேர்அமர் வில்வ வநக்களி றே!துணைப் பே(று)எமக்கே. (4)

279. (நேரிசை வெண்பா)

எமக்(கு)அருளும் என்றுதுதி ஏத்தும் அடியார்
தமக்(கு)அருள்செய் தண்ணளியால் சார்ந்தோர்-ஸமர்த்தோங்கப்
பே(று)உற்ருன் ஊர்க்கடவைப் பேர்க்'கள்ள வாரணம்'என்(று)
ஏ(று)உற்ருன் என்போம் இனிது. (5)

280. (கட்டளைக் கலித்துறை)

இனி(து)எற் பிறவி இடர்களைந்(து) ஆளும் இறைவன்எம்மான்
கனிபெற்(று) உவக்கும் கடவையின் கற்பகக் கண்மணிஎன்(று)
இனி(து)உற்(று) இரு!ஐங் கரத்தனை எண்ணி இரவுபகல்
தனிஉற்(று) இரு!மந மே!நமைக் காக்கும் தயாபரனே. (6)

281. (நேரிசை வெண்பா)

பரன்அமுத பாலா! பகர்கடவூர்ச் சீலா!
வரன்அருள வாதோ? வரதா?—புர(ம்)நகைத்தோன்
போதகனே! பூமன் புரந்(து)அளித்த புத்திரிகள்
போதகநின்! போதருள்இப் போது. (7)

282. (கட்டளைக் கலித்துறை)

போதா(து) என(து)உணர்(வு) உன்னைப் பரவிடப் போதம்உள
தாதா! தமியேன் இருவினை தாக்கிநின் தாள்இணைக்கீழ்
ஆதார மேஅளி! அம்மைஅப் பா! எனை ஆள்கடவூர்
மாதா மணிநகை யாள்அபி ராமி மகிழ்மகனே! (8)

283. (நேரிசை வெண்பா)

மகனே! கடவூர் மணியே! மதமா
முகனே! முனியேல்! முதல்வா! — புகவே
தடமே இலையே தமியேன் உயவே
இடமே தருவை!நீ இங்கு. (9)

284. (கட்டளைக் கலித்துறை)

இங்கார் உளர்எம் மதோற்கட வா!துணை எம்பிணிக்கு
மங்கா தருள்கட வூர்இறை மாரசக்தி மாமதிவிண்
கங்கா தரன்மகிழ் கள்ளக் கடாசலக் கார்மணிமா
தங்கா! உனைத்தொழும் அன்(பு)அளித்(து) உன்பதம் தந்தருளே! (10)

285. (நேரிசை வெண்பா)

அருள்வழங்கு தண்கடவூர் ஆநந்தா! நந்தாப்
பொருள்வழங்கு பூங்கைப் புநிதா! — இருமா(து)
இனியவருக்(கு) ஏற்ற எழிலாய்! எனைஆள்!
இனியமுகா! என்கண் இருந்து. (11)

286. (கட்டளைக் கலித்துறை)

இருந்துறை வான்உளம் உள்ளக் கறைகள் எலாம்களைய
இருந்துறை வான்நம பாசப் பிணிபகை ஏகிடநெஞ்(சு)
இருந்துறை வான்எம துட்கள்ள ஆணவம் என்றும்இரா(து)
இருந்துறை வான்என்(று) இரு!கட வூர்இறை ஏகன்என்றே. (12)

287. (நேரிசை வெண்பா)

என்றும் இனியன் இமையோர்க்(கு) அருள்கடவூர்
துன்றும் இடம்கொண்ட தூயோனும் — என்றும்ஒளி
சிந்தா மணியன்உயர் சேய்கள்ள வாரணன்தாட்
சிந்தா மணிநினைவாய்! தேர்ந்து. (13)

288. (கட்டளைக் கலித்துறை)

தேர்ந்துள் எழும்அமு தாஇனி(து) என்றும் தெவிட்டஉண்பார்
ஆர்ந்துள் அமுதப் பிரளய வாரிஅண் டாண்டமுதல்
சார்ந்துள் அஹம்புறம் சாரும் கடவையின் சாந்தர்எமைக்
கூர்ந்துள் எழிற்சிவ ஞாநம் தரும்இறை கூறு!நெஞ்சே! (14)

289. (நேரிசை வெண்பா)

நெஞ்சே!நீ அஞ்சல்! நிமலன் கடவூரான்
செஞ்சே வலன்துணைவன் செய்யதிருக்-கஞ்ஜமலர்ப்
பாதப்போ தெப்போதும் பார்த்தே அஹம்உருகப்
போதப்போ தம்தருவான் போற்று! (15)

290. (கட்டளைக் கலித்துறை)

போற்றும் புகழ்க்கட வூர்அமு தேசர் புகழ்வநத்தே
தோற்றும் துணைவல் லபைஅணை தூமணி தொல்வினைகள்
பாற்றும் எனவே பணிவாய்! பதுமன் படிஅளந்தோன்
சாற்றும் இணைஅடி நம்முடி தாங்கச் சலம்இலவே. (16)

291. (நேரிசை வெண்பா)

இலங்(கு)ஒளிய தண்கடவூர் எம்மான்கன்(று) என்று
மலங்களைய நின்றே வணங்கிப்—புலன்பொறிகள்
கூடும் உளத்தோர்க்கே குஞ்ஜரக்கோ கூர்ந்(து)அளிக்கும்
தேடும் வளம்சேர் திரு. (17)

292. (கட்டளைக் கலித்துறை)

திருவிற் சிறந்த மடந்தையர் பற்பலர் சேர்கடவை
மருவும் இருகவுள் மும்மத வாரண மாமுகத்தோன்
உருவும் எழிலும் ஒளிநகை யும்கிளர்ந்(து) ஓங்கஅன்பின்
பெருகும் மநத்தவர்க்(கு) என்றும் பிறங்கிடு பேர்தருமே. (18)

293. (நேரிசை வெண்பா)

தருமேநல் வாழ்வு தருமே தவமும்
தருமேநல் ஆக்கம் தருமே-அருள்ஒளிகூர்
விண்டளித்த பன்னிருவர் வேட்டபிரான் தண்கடவூர்
ஒண்டிறல்முக் கண்ணரசை ஓது. (19)

294. (கட்டளைக் கலித்துறை)

ஓதும் பழமறை எண்ணில ஏத்தும் உமைபுதல்வன்
போதம் தரும்இறை புங்கவன் நல்லிரு பூங்கழல்நா
ஓதும் கடவூர் உறைவீர்! உலகீர்! உவப்பினெடு
காதும் இருவினை தீர்த்(து)இனி தாளும் கடல்அமுதே. (20)

(ஸ்ரீ சோர கணபதி திருஇரட்டை மணிமாலை முற்றும்)

## 23. திருக்கடவூர்க் கோயில் கீழைக் கோபுர வாயில் ஸ்ரீ முநீச்வர ஸ்வாமி பதிகம்

(திருக்கடவூர் மயாநம் செந்தமிழ் வித்யா ஶாலை
ஆசிரியர் ஸ்ரீ ந.க. முத்துச் சிதம்பரச் செட்டியார்
அவர்கள் இயற்றியது-1939 ஆம் ஆண்டுப் பதிப்பு)

295. காப்பு(நேரிசை வெண்பா)

பூமங்கை வாழ்கடவூர்ப் போத முநிவன்தாள்
நாம்அம்கை கூப்பி நவிலவே—கோமங்கை
முன்னவா! முக்கண்ணு! முத்தமிழ்ச்சீர் என்உளத்தே
பன்னவா! பண்பின்இசைப் பா.

296. நூல் (பதினான்குசீர்க் கழிநெடில்அடி ஆசிரிய வ்ருத்தம்)

பூமேவு பொன்னிவள நல(ம்)மேவு விலவநப்
புகழ்மேவு கடலூர் இறை
புவிஆடை உடைமேவு புலிஆடை இடைமேவு
பூங்கொன்றை பூண்அமுதன் வாழ்
மாமேவு மணிமாட மதில்சூழும் உயர்வண்ண
மகமேரு என்ன ஓங்கும்
மந(ம்)மேவு தற்(கு)அரிய மதிஇரவி வல(ம்)மேவு
மாண்பின்உயர் கீழ்வாயில் தேர்
கோமேவு கோட்டிமகிழ் பொற்பீடம் உறைதவக்
கோலனே! மோந ஞாநக்
குருநாத! சிவபோதம் உரைநாத! அருள்அன்பு
குன்றாத துரிய பரனே!
பாமேவு பதிகம்இதை ஓதுதுதி செயும்அடிமை
பக்கல்வந்(து) அருள்புரிகு வாய்!
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு(ம்) முநிநாத னே! (1)

297

ஶிவலோக ஶிவபோக ஶிவயோக ஶிவஞாந
ஸித்திஅருள் வீட்டின் உயர்வால்
ஸித்தர்மா தவர்பிரமன் உந்திபூத் தவன்இரவி
செப்(பு)அரிய வாஸுகி முதல்
தவம்ஆற்றி அருள்பெற்று மநம்வெற்றி உறமுற்று
ஜயராஜ ராஜ வாழ்க்கைத்
தானமால் உரவநக் கடவைஅம் புரிஎழில்
தாண்டவா நந்த வீரன்
உவமாநம் உவமேயம் ஒன்றும்ஒன் றுக்கருணை
உயர்நாத நாத அமுதன்
உறைகோயில் கீழ்வாயில் உறைபோதம் உரைசீல!
உத்தமக் கோல வடிவா!

பவமோஹ போகம்உறை(வு) இன்றிஅருள் செய்யஎன்
பக்கல்வந்(து) அருள்புரிகு வாய்!
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (2)

298

தவம்ஓங்கு பிரமன்உயர் ஶிவஞாநம் வேண்டிடத்
தையல்ஓர் பாகன் எம்கோன்
தருஓங்கு மாவில்வ வித்(து)உதவ அருள்பெறத்
தாநம்உயர் பூமிவந் தே
நவநிதியம் ஓங்குபுகழ் வித்(து)ஊன்ற வான்ஓங்கு
ஞாநம்உயர் தருஓங்க வே
நாடிமநம் ஒன்றிஓர் ஆயிர(ம்)நல் வருஷம்உயர்
நாட்டம்உற அருள்கடவை வாழ்
புவநைதிரி புரைவாலை உயர்ஶக்தி பீடம்ஒளிர்
புராந்தகன் பூர்வ திஶைபால்
பொற்பின்அருள் போதம்உரை பகரஒளிர் உலகனே!
புநிதமா தவபால னே!
பவம்ஓங்கு வினையினேற்(கு) உறுபிணி அகற்றிஅருள்!
பலகலைகள் ஒலிநூ புரப்
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (3)

299

விரைகமழு(ம்) மாவில்வ காநபதி அமுதம்உதி
விடைஉளக் கோட்டி உறைசீர்
வித்தகா! உத்தமா! நற்றவா! பற்(று)அவா
விட்டவா! வீர! தீரா!
உரைபரவும் உன்றன்ஒளி பூத்ததுதி எண்திஶையர்
ஓங்கு(ம்)நிதி ஏற்கும் இறைவா!
உற்றதுணை பெற்(று)அறிவு பே(று)இலா நாயினேன்
ஓதரிய கேதம் உற்றே

நரை திரைகள் உற்றும்உடல் உயிர்அகலும் முன்வருக !
நான்முகன் அமைப்(பு)இலா தே
நல்லறிவு தந்(து)என்னை நாட்டம்உறு மூவினைகள்
நாடாத வண்ணம் அருள்க!
பரைகௌரி ஸாம்பஶிவை சாமுண்டி யாமளா
பதுமா தநத்தி ருத்ரி
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (4)

300

அரிபிரமர் ஆதிமுநி வரர்பரவி அஹமகிழ்ந்(து)
ஆடிஒளிர் ஓங்கு கடவூர்
அம்மைஅந் தரிகௌரி பூபாலி முக்கண்ணி
ஆநந்த யோக விஜயை
பிரி(வு)இலா(து)அன்பருக்(கு) இன்(பு)அளித்(து)அருள்பிரான்
பெற்றம்உயர் அமுதநிதி வாழ்
பெற்றிஉயர் கீழ்வாயில் உறையோக போகனே!
பேரின்ப இன்ப அமுதா!
திரி(பு)இலா மந(து)ஒன்று சினம்இன்றி அஹ(ம்)மேவு
ஶிவஞாந நிதிபெருக வே
ஸித்திதந்(து) அருள்ஸச்சி தாநந்த நாமனே!
செம்மலர்த் தேஜோ மயா!
பரிவுடன் உவந்துமுப் பதம்ஓங்கும் நிலைமேவு
பற்றுவைத்(து) எனைஆளு வாய்!
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (5)

301

விண்உலக போகர்முதல் யாவர்களும் வதிகாநம்
வில்வதரு வாழ்க்கை நண்ணி
வித்தைஉயர் முக்திதரு முக்கண்உடை எம்பிரான்
வீ(டு)அடைய மேவு கடவூர்

கண்கவர் வனப்பின் ஒளிர் ஒளிவீசு சிநகரக்
காவல்உயர் கீழ்வாயில் வாழ்
கைலைநிதி கடவுள்ஆல் அடிஅதனில் நால்வர்முன்
காட்டும்ஒரு கோலம் எனவே
தண்உலவு மலர்வதந அருள்பொழியும் ஐயனே!
தத்துவா தீத பாதா!
தமியனேன் உலகவா தனைபெரு(து) உன(து)உபய
தாள்மலர்கொள் ஜோதி காட்டிப்
பண்உலவும் இசையோடும் உனைநாட அறியாத
பாமரன்என் உரையும் ஏற்பாய்!
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (6)

302

தரணிபுகழ் ஸ்ரீலமார்க் கண்டன்உள(ம்) மகிழ்தரச்
சண்டனை உதைத்த முதல்வன்
தருஓங்கு மாவில்வ கா(வு)அமுத புஷ்கரணி
தவபீடம் ஓங்கு கரைவாழ்
ஸ்ரீரம்ஒளிரு தாமமணி மகுடவரி இமைகமல
ஸ்ரீதமுக மதிபூர ணா!
செங்கைமலர் முத்திரைச் சிந்மயா நந்தனே!
ஸ்ரீவகோல! பால லீலா!
குரவன்என வந்(து)எனது பேதைமையை நீக்கஅருள்!
கோகநத பாதோத யா!
கோடிஆ யிரஞால அண்டபகிர் அண்டஅணு
குறைவிலா(து) அளிகோ மளப்
பரமபதி ஒருபாகம் அகலாத ஒளிவாலை
பார்வதி பராஸக்தி பூம்
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (7)

303

முப்போதும் உன்றன்அடி அகலாது நினைபவர்தம்
முன்நின்று காத்(து)என்று மே
முன்புவரு கணமு(ம்)மு வினைகள்அடர் கோள்முதல
முறையிட்(டு)உ வரிபுகுத வே
எப்போதும் உன்கருணை நோக்(கு)அருள்க! முநிநாத!
எண்ஸித்தி முக்தி நெறியோ(டு)
எத்திசையும் இசைஓங்க அருள்புரியும் ஐயனே!
எளியவர்க்(கு)அருள்ஈஶ னே!
தப்பாது சீற்றமொடு வருகாலன் வாராத
தாநம்இசை ஓங்கு வாழ்க்கைத்
தடம்ஓங்கு ஶிவஞாநம் அளிஉலக திலகதல
ஶாந்தஸற் குருபரா! இன்
பப்போது மலர்வதந காவில்வ காமனே!
பயிரவா நந்தி செம்பொன்
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
**பதிமேவு முநி நாதனே!** (8)

304

ஶிவஶக்தி பாதத்தை நினைபவர் இடத்(து)அன்பு
செய்பவர்க்(கு) இன்ப ஶீலா!
சிறி(து)அளவு நற்சிந்தை பற்(று)இலாப் பொய்யர்பால்
சீறுவெம் கோப கோலா!
எவராயி டினும்நினது பாதமலர் நாடினால்
இமையாது நோக்கும் இறைவா!
இறையவனை உள(ம்)நெகிழ்ந்(து)உரைசெயும் [தொண்டர்கள்
இடுக்கண் தவிர்க்கும் ஈஶா!
தவஸித்தி தருவில்வ வநநாதன் ஒளிர்கடவை
தண்தரள மேனி அழகா!
தளிர்பதும முகமதிய(ம்) மணிமவுலி பவளஇதழ்
தவளநீ(று) அணிதாம னே!

பவம்ஏக நமன்ஏக அடர்துஷ்ட்டர் தொடர்(பு)அறப்
பக்கல்வந்(து) அருள்புரிகு வாய்!
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (9)

305

பூமங்கை அகலாத நல்வாழ்வின் உயர்சீல
போத(ம்)முதிர் ஆதி கடவூர்ப்
புரிஅஷ்ட்ட வீரட்ட நடநாதி பதியின்அருள்
புவிஉளோர் போற்றும் ஐயா!
நாமங்கை நாடினல் திசைபரவும் உயர்விஞ்சை
நாயினேற்(கு) அருள்க! நாதா!
நாதாந்த போதாந்த வேதாந்த ஸித்தாந்த
ஞாநவீ(டு) அருள்க! விகிர்தா!
தூமபரி மளம்இனிய கன்னல்கற் கண்(டு)அடிசில்
தூயநெய் அமுத இன்பா!
தூலஉடல் உயிர்அறத் தோன்றும்நமன் இடர்இலாத்
துணைவருக! வாழி! முநிவா!
பாமங்கை நாவில்உறை ஏழ்இசைகள் ஒலிகீதர்
பாவாணர் வாழ்த்து பைம்பொன்
பதமலர்கள் ஒளிஇலகு பரைஞாந அபிராமி
பதிமேவு முநிநாத னே! (10)

306. அவை அடக்கம் (நேரிசை ஆசிரியப் பா)

தமிழ்உரை அறியா தவன்உரை உலகர்
அமிழ்தினும் இனி(து)என்(று) அதன்குறை தவிர்த்தே
அன்புகொண்(டு) இன்போ(டு) அவர்அவை சேர்ப்பர்என்(று)
எண்ணிஇப் பதிகம் இசைத்தனன் இதனைக்
கற்றவர் கண்(டு)உளம் களிக்க
அற்புத நடநன் அடிஇணை சரணே.

(ஸ்ரீ முநீஸ்வர ஸ்வாமி பதிகம் முற்றும்)

# திருக்கடவூர் அருட்புகழ்

[அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்கள் 28-2-1963 அன்று திருவருள் உந்தத் திருக்கடவூரில் அருளிச் செய்தது]

## 24. கள்ள விநாயகர் அருட்புகழ்

சந்தப்பா

நவரோஸ்) 307. நல்லவர் சூழலைப் பெற (ஆதி

**தய்யன தானனத் தனதான**

தொல்வினை வாழ்வில்உற் பவம்ஆகும்—
தொல்லைகள் போய்அறத் துயர்ஆற ;
நல்வினை யேசெயப் புரிவாயே—
நல்லவர் சூழலைத் தருவாயே ;
செல்வி ரமாபதிக் கினியோனே—
திவ்விய மானகற் பகமே!மெய்க் ;
கல்வி வலார்திருக் கடவூரிற்—
கள்ள விநாயகப் பெருமாளே.

## 25. கால ஸம்ஹார மூர்த்தி அருட்புகழ்

பதிகம்

ஹரி காம்போதி) 308. எண்சீரடி ஆசிரிய வ்ருத்தம் (த்ரிபுடை

கண்டி யூர்த்திரு வீரட்டத் தானைக்
கமல னைச்சிரங் கொய்தகை யானைக்
குண்டி கைக்கரக் குடமுநி யார்க்குக்
குமர னைக்கொண்டு தமிழ்கொடுத் தானைத்
தண்டி கைப்பரி தாளவெண் கவிகை
ஸம்பந் தப்பெரு மாற்(கு)அளித் தானைக்
கண்டி கைக்களத் தனைத்திருக் கடவூர்க்
கால காலனைக் கால்தொழென் மநனே! (1)

309

கோவ லூர்த்திரு வீரட்டத் தானைக்
கொடிய அந்தகன் நிலைகுலைத் தானை
மூவ லூர்த்திரு மூர்த்தியை முதலை
மூவர் தேவர்க்கும் யாவர்க்கும் அரிய
நாவ லூர்த்திரு நம்பிஆ ரூரர்
நவில்த மிழ்த்திருப் பாட்டுடை யானைக்
காவல் ஊர்திநந் தியைத்திருக் கடவூர்க்
கால காலனைக் கால்தொழென் மநனே! (2)

310

அதிகை அம்திரு வீரட்டத் தானை
அரக்கர் மூவர்தம் புரம்எரித் தானை
நிதிகை யால்அள்ளி நெடிதுபல் லோர்க்கும்
நிறைய ளித்தருள் குறைவில்செல் வத்தை
வதிகை ஆயிரத் தெட்டின்மேல் தலம்கொள்
வள்ள லைச்சிறு மார்க்கண்ட னுக்குக்
கதிகை காட்டிய கருணையைக் கடவூர்க்
கால காலனைக் கால்தொழென் மநனே! (3)

311

பறிய லூர்த்திரு வீரட்டத் தானைப்
பறித்துத் தக்கன்றன் தலைபடைத் தானை
நெறிஅ லாவழி செல்லும்ஆ ணவத்தார்
நீடு காண்பதற்(கு) அரியபே ரொளியைக்
குறிய தாக்கொண்டு குங்கிலி யம்தீக்
கொளுந்தி னர்க்(கு)அருள் செய்(து)ஒரு பிள்ளைக்
கறிய தைவினும் கடவுளைக் கடவூர்க்
கால காலனைக் கால்தொழென் மநனே! (4)

312

விற்கு டித்திரு வீரட்டத் தானை
 வியன்ஜ லந்தரன் உயிர்கெடுத் தானை
நற்கு டிப்பிறந் தார்மறை யோர்சொல்
 நாலு வேதமும் காண்(பு)அரி யானை
முற்கு டிப்புகுந்(து) என்னுளே நின்று
 முயன்றும் நீங்ககில் லாமுறை யானைக்
கற்கு டிச்சிலைக் கருத்தனைக் கடவூர்க்
 கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே. (5)

313

வழுவூர் வீரட்டம் வாழ்தரு வானை
 மத்த மாஉரித்(து) உரிவைபோர்த் தானைப்
பழுவூர் ஆலநல் துறையனைப் பரம
 பதத்த னைப்பிரி யாஉட லானை
மழுவூர் கையனை மாணிக்க மலையை
 மன்றுள் ஆடியை மடையனேன் மலத்தைக்
கழுவூ ராய்த்திகழ் தருதிருக் கடவூர்க்
 கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே. (6)

314

குறுக்கை அம்திரு வீரட்டத் தானைக்
 கோபத் தால்மத னைப்பொடித் தானை
மறுக்கை இன்றிஓர் கலயருக் காக
 வளைந்த தன்தலை நிமிர்ந்துவந் தானை
வெறுக்கை யாய்உள்ளப் பொறுக்கையாய் நிற்கும்
 வேதி யன்தனை விடத்தைஉண் டதனைற்
கறுக்கை கொண்டநீற் களத்தனைக் கடவூர்க்
 கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே! (7)

**315**

கடவூர் வீரட்டம் கண்டுநின் ருனைக்
கரிய காலனைக் கால்உதைத் தானைப்
பிடவூர் வந்துசேர் ஸுந்தரர் பதிகப்
பெரும்ப யன்தனைக் கரும்பின்இன் சுவையைக்
குடவூர் என்(று)உரை தருகுட வாயில்
குடமூக்(கு) ஆதிய கோயில்கொண் டானைக்
கடவூர்க் கள்ளவா ரணத்தினைப் பயந்த
கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே! (8)

**316**

அட்ட வீரட்டம் அமர்ந்(து)அருள் அரசை
அயனுக்(கு) அன்(று)ஒரு வில்வமா விதையை
இட்ட மாய்அளித்(து) அதுமுளை தரவும்
இருந்து பூஜனை செயஅருள் தேவை
அட்ட காலனை உயிர்பெற அருளி
அமுத மாக்கட மாய்அமைந் தானைக்
கட்(டு) விழ்த்(து)அருள் கரத்தனைக் கடவூர்க்
கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே! (9)

[ஞாநோபதேசம் பெற வேண்டிப் ப்ரஹ்ம தேவன் இறைவனை வழிபட்டான். அப்போது இறைவன் வில்வ விதை ஒன்றினைப் ப்ரஹ்மன் கையில் தந்து, ''இது இட்ட ஒரு முஹூர்த்தத்துள் எந்த இடத்தில் முளைக்கிறதோ அந்த இடத்தில் தங்கி எம்மை வழி படுவாயாக!'' எனக் கட்டளையிட்டு மறைந்தருளினன். அவ்வாறே ப்ரஹ்மன் பற்பல இடங்களில் அவ் விதையை இட்டுப் பார்த்து இறுதியாக இத் தலத்தில் இட, அது குறித்த காலத்துக்குள் முளைத்தது. ப்ரஹ்மனும் அது கண்டு மகிழ்ந்து இங்குத் தங்கி இறை வழிபாடாற்றி ஞாநோபதேசம் பெற்ருன். அது முதல் கடவூர் ''வில்வ வநம்'' ஆயிற்று என்பது திருக்கடவூர்த் தல வரலாறு].

317

ஒன்ப தாவது வீரட்ட மாய்என்
உள்ளத் தேஅருள் வெள்ளத்தை நிறைத்துக்
கொன்ப தத்திளுற் கூத்திடு வானைக்
கூற்(று)உ தைத்த(து)ஒர் சேவடி யானை
என்ப தேஅணி ஈசனைக் காரி
என்ப வர்க்(கு)அருள் எளியனை மாறும்
கன்ப வன்ப(ல்)லைக் கனைதரும் கடவூர்க்
கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே! (10)

[மாறும் 'கன்ப' —'கன்ப' எனும் சொல் இடம் மாறினல் ('ப' எழுத்தை முன்னர்க் கொணர்ந்தால்)' 'பகன்' என்ளுகும். பகன்—ஒரு ஸூர்யன். காரி—காரி நாயனர்.]

318

பத்துப் பாட்டிலும் பகர்ந்தனன் கேட்டாய்!
பழைய வண்ணம்நீ திரிதர்வை ஆகில்
செத்துப் போவது நிச்சயம் திடமே
சேவ டித்துகள் சூடுவை ஆகில்
அத்து மீறிஅவ் வந்தகன் வாரான்
அங்ஙன் மேவினும் அவனைக்கொல் வானைக்
கத்தும் நீர்ப்பொன்னிக் கரைஉறும் கடவூர்க்
கால காலனைக் கால்தொ(ழு)என் மநனே! (11)

(கால ஸம்ஹார மூர்த்தி அருட்புகழ்ப் பதிகம்—1 முற்றும்)

## 26 அம்ருதகடேச்வரர் அருட்புகழ்ப் பதிகம்-1

நாத நாமக்ரியை] கலி வ்ருத்தம் [ரூபகம்

319

வந்தார்துயர் அகலும்படி வாழ்வேஅருள் மலையே !
எந்தாய்உனை ஏத்தாதிருந் தனன்நாயடி யேனும்
கந்தார்களி(று) அசைத்தற்(கு)இய லாமைக்குறும் கடவூர்
அந்தார்அணி காலாரி !என் அமுதக்கடத்(து) அரசே ! (1)

320

எண்ணாதன எண்ணிப்பல காலம்பிழை இழைத்தேன்
உண்ணாமுலை கொழுநா! என ஓதிப்பணிந்(து) அறியேன்
கண்ணார்சுழல் தருகாவிரிக் கடற்றென்கரைக் கடவூர்
அண்ணா!அடி யனைஆண்டருள் அமுதக்கடத்(து) அரசே! (2)

321

பொல்லாவினை புரிந்தேன்புவி திரிந்தேன்இவை போதும்
கல்லாதன பலவாம்இவன் கற்கைகை(ம்)மண் அளவே
கல்லால்நிழல் இருந்தேஅறம் கனித்தாய்!திருக் கடவூர்
அல்லாளிகொள் ஜடையாய்!அருள் அமுதக்கடத்(து) அரசே! (3)

322

வானார்ந்(து)இழி மந்தாகிநி மங்கைச்சடை வைத்தாய் !
ஏனார்ந்(து) எனை இனும்ஆண்டிலை? இதுவோ! உனக்(கு) அழகே
கானார்ந்(து) இழி அருவித்திரள் கலக்கும் பொ(ன்)னிக் கடவூர்
ஆனார்ந்(து) இவர் அண்ணல்!அருள் அமுதக் கடத்(து) அரசே! (4)

323

குமரப்பெரு மானுக்(கு)ஒரு குமரப்பெயர் கொடுத்தாய் !
ஸமரக்க(ள்)ளப் பிள்ளையார்க்(கு) ஒரு தநயப்பெயர் தந்தாய் !
கமரிற்பொழி வதலாமல்நற் கால்சேர்பொ(ன்)னிக் கடவூர்
அமரர்க்(கு)அமு(து) அளித்தாய்!அருள் அமுதக் கடத்(து)
அரசே ! (5)

[ஸமரம்-போர். தநய்ன் - மகன். கமர்-நிலப்பிளப்பு. கால் - (நீர்ப்)பிரிவு. பொன்னி-காவிரி]

324

பழகாஇழை பாவம்பல அறியாமையிற் பண்ணித்
தொழஓர்நெறி அறியேன்மிகச் சிறியேன்துரி(சு) உடையேன்
கழகாரியர் முதலானவர் கருதும்மிறை ! கடவூர்
அழகார்உமை கொழுநா! அருள் அமுதக் கடத்(து) அரசே (6)

325

தோலால்உடை கொண்டாய்!திருத் தொண்டாளர்கள் தம்மை
நாலாவிதம் பரிபக்குவம் நண்ணத்துணை புரிவாய் !
காலாறுகள் பாயும்கடும் திரைக்காவிரிக் கடவூர்
ஆலார்அடி உடையாய் !அருள் அமுதக்கடத்(து) அரசே ! (7)

326

வரமாநதி தனைமா(று) இன்றி வருவித்தனை ! அருகே
பிரமாதொழ அருள்செய்தனை ! பேயாடல்செய் பெருமான் !
கரமாமதி உரித்தாய் ! உரி களித்தாய்! திருக் கடவூர்
அரமாஅணி கலனே! அருள் அமுதக்கடத்(து) அரசே ! (8)

327

வளர்பிஞ்சிலப் பூவால்நிதம் வழிபாடுசெய் வார்கள்
உளமாம்தளி திருக்கோயில்கொள் உமையாள்ஒரு பாகா !
களமாம்கறை உடையாய் !கழுக் கடையாய்! திருக் கடவூர்
அள(வு)ஏய்ந்திடற்(கு) அரியாய்!அருள் அமுதக்கடத்(து) அரசே!(9)

[பிஞ்சிலம்-திருக்கடவூர்க்குத் தல வ்ருக்ஷம். இது ஒரு வகை ஜாதி மல்லிகைக் கொடி. இதனால் ஸ்தலத்திற்குப் 'பிஞ்சில வநம்' என்றும் பேர் உண்டு. மார்க்கண்டேயர், அம்ருத கடேஶ்வரரின் அபிஷேகத்துக்குக் கங்கை நீர் வரவழைத்தபோது அக்கங்கையோடு இதுவும் சேர்ந்து வந்தது.]

328

பதினாறெனும் அகவைச்சிறு பாலன்தவ மாணி
துதிவாய்சொலித் தொழுபூஜனை செயவும்துயர் துடைத்துக்
கதிதான் உற யமனைத்திருக் காலாற்கடி கடவூர்
அதிவீரட்டம் உடையாய்! அருள் அமுதக்கடத்(து) அரசே! (10)

329

மனைதாலியை விற்றும்நறு மணவான்புகை புகைப்பரன்
தனைஈந்தவர் கலையர்க்(கு) அருள் தந்தாய்!புவித் தந்தாய் !
கனைமாகடல் எனவேஒலி கலிக்காவிரிக் கடவூர்
அனையே!எனை ஈன்றாய்!அருள் அமுதக்கடத்(து) அரசே ! (11)

330

திருமாநெறித் தமிழ்பாடிய மூவர்திருப் பாடல்
வருமாநெறி வகுத்தாய்! வளை சிலையாமலை வளைத்தாய்!
கருமாஉரி உடையாய்! முகில் கவர்கோபுரக் கடவூர்
அருமான்உரி உடையாய்! அருள் அமுதக்கடத்(து) அரசே! (12)

331

வருதேள்மதித் திருநாள்மதி தோறும்வளைக் குலங்கள்
பெரு(கு)ஆயிர முகத்தாற்கங்கைப் பெருநீர்முழுக்(கு) ஆட்டல்
கருமாலொடு கமலத்(து) அயன் காணும்திருக் கடவூர்
அருமாமறை உடையாய்! அருள் அமுதக் கடத்(து) அரசே! (13

[தேள் மதி வரு - கார்த்திகை மாதத்தில் வருகின்ற. மதி திரு நாள்-சந்த்ரனின் அழகிய திநமாகிய ஸோம வாரம்.]

(அம்ருத கடேஸ்வரர் பதிகம்-1 முற்றும்)

## 27. அம்ருத கடேச்வரர் அருட்புகழ்ப் பதிகம்-2

நாதநாமக்ரியை] (கலி வ்ருத்தம்) [ரூபகம்

332

ஒருமாணியை ஆள்வான்உணர் மறலிக்(கு) உதை தந்தாய்!
வருமாணிஇவ் வெளியேனையும் மறலிக்கைந்நின்(று) எடுப்பாய்!
கருமாயவன் கழற்றும்பணி சிவைஆம்திருக் கடவூர்
அருமாதவர்க்(கு) அரசே! அருள் அமுதக்கடத்(து) அரசே! (1)

[திருமால் தனது அலங்கார ஆபரணங்களை எல்லாம் திருக் கடவூரில் ஓரிடத்தில் கழற்றி வைக்க, அவை யாவும் சேர்ந்து தேவி அபிராமியாக ஆவிர்ப்பவித்தது என்பது ஸ்தல புராண வரலாறு]

333

அன்(று) ஒர்இடக் காலால் உதைத் தனை ஆதலின் அம்மை
சென்றோ உதை தந்தாள்சிறு நமனைத்தெரிந்(து) என்பர்;
சன்(று) ஒலிடல் போல்ஒலிடும் கடையேற்(கு) உரை! கடவூர்
அன்றோ? உன தலமற்றதும் அமுதக்கடத்(து) அரசே! (2)

[மற்றதும்-மற்றையதும் ''திருக்கடவூர் மயாநம்'' அன்றோ என வருவித்துப் பொருள் கொள்க.]

334

குமுதப்பதி முதலாயவர் கடைந்தும்பரிற் கொணர்ந்த
அமுதக்குடம் இவண்வேர்விழுந்(து) அமைதல்லதி சயமே
கமுகிற்கயல் மோதச்செறுக் கழைசாய்வயற் கடவூர்
அமுதத்(து) உரு ஆனாய்!அருள் அமுதக்கடத்(து) அரசே! (3)

[குமுதன்—விஷ்ணு. குமுதப் பதி — திருமாலாம் தலைவன். செறு — வயல்.]

335

கெட்டேன்பல நாளும்நினை(வு) இன்றிக்கிழம் பட்டே
விட்டேன்எனில் எனைஆள்பவர் வே(று)ஆர்உனை அன்றிக்
கட்டேஅவிழ் கமலங்கள்மன் கமழும்வயற் கடவூர்
அட்டாநத்(து)எம் அழகா! அருள் அமுதக்கடத்(து) அரசே! (4)

336

செத்தார்உடன் வாரார்உள ஜெகத்தார்களும் வாரார்
இத்தாரணிப் பெருமைக்குறி இதுவேகண்டு கொண்டேன்
கைத்தாமரைக் கனல்ஏந்திஒண் கழல்ஆடல்செய் கடவூர்
அத்தா!அறி வினைஈந்(து) அருள்! அமுதக்கடத்(து) அரசே! (5)

337

பூந்தாமரைப் பொய்கைம்மலர் கொய்யும்பொழு(து) ஆனை
வேந்(து)ஆனவன் விளிக்கத்துணை விளைத்(து)ஆள்அரி விரும்பும்
காந்தா! தமிழ்க் கடலும்வட மொழியும்பயில் கடவூர்
ஆந்தாணுஎன் அடிகேள்!அருள் அமுதக்கடத் (து) அரசே! (6)

[ஆனை வேந்து - கஜேந்த்ரன். காந்தா - கணவனே. தாணு - அசையாதவன்; ஶிவன்.]

338

கண்ணார்நுதல் உடையாய்! திருக் கடவூரில் மயா நம்
நண்ணுமகிழ் நாதா! அரி வேதாநண்ணா அரியாய்!
கண்ணார்திரை பொருகாவிரி கலஎன்(று)ஒலி கடவூர்
அண்ணுதிரை யானே!அருள் அமுதக்கடத்(து) அரசே! (7)

[நுதல் - நெற்றி. நண்ணு-நண்ணி. வேதா - பிரமன். அண்ணு- நெருங்கி அமரும். ஆதிரையான் - ஆருத்ரா நக்ஷத்ரத்திற் குரிய ஶிவபிரான்]

339

எம்மான்என எந்தாய்என ஏத்தல்புரி யேன்நான்
சும்மாஇருந்(து) அஹம்தூங்கவும் ஸுகம்காணவும் அறியேன்
கைம்மாஉரிக் கவர்போர்வைகொள் கடவுள்!திருக் கடவூர்
அம்மா!உனே அடைந்தேன் அருள் அமுதக்கடத்(து) அரசே! (8)
[கைம் மா - யானை. உரி - தோல். கவர் - விருப்பமுள்ள]

340

பேணேன்உனே எதுநாளும்உன் பெருமாபுகழ் பேசேன்
காணேன்கடைக் கண்இன்னருள் கண்டும்உய்வன் கொல்லோ!
காணேசுரன் எனப்பேர்பெறு கயிலாய!நற் கடவூர்
ஆணே!அலி! பெண்ணே! அருள் அமுதக்கடத்(து) அரசே! (9)

341

ஐயாஎன உரையேன்உனே அடையேன்அடைக் கலமாச்
செய்யா!திரு மேனிச்செழுஞ் செந்தாமரை வண்ணா!
கையார் மழு உடையாய்! யம காலா! திருக் கடவூர்
ஐயா(று)உறை அம்மா!அருள் அமுதக்கடத்(து) அரசே! (10)

342

செப்பார்முலே உமையாள்பர சிவையாள்அபி ராமி
அப்பால்உற இடத்தேபரிந்(து) அவளுக்(கு)இடம் தந்தாய்!
கைப்பாணமொ(டு) இலிங்கத்தினிற் கனன்றேஎழு கடவூர்
அப்பா!எனே உடையாய்!அருள் அமுதக்கடத்(து) அரசே! (11)

343

இருள்ஏறிய கருவிற்புகுந்(து) இவனேபிறந்(து) ஒழிவேன்
மருளேதெறும் வழிகாண்கிலன் மன்னித்தருள் செய்வாய்!
கருளேஅடு காலாரி!முக் கணனே! திருக் கடவூர்
அருளே!அருள் புரிவாய்!அருள் அமுதக்கடத்(து) அரசே! (12)

344

பரசேன்உனேப் பாடேன்புகழ் பாடும்அடி யவர்பால்
விரசேன்மிகு வெகுளிக்குண விலங்(கு)ஒத்துள வினேயேன்
கரைசேர்வயற் கடைசிக்கனி மார்காநம்செய் கடவூர்க்(கு)
அரைசே!அடி பரவற்(கு)அருள்! அமுதக்கடத்(து) அரசே! (13)
(அம்ருத கடேஸ்வரர் அருட்புகழ்ப் பதிகம்-2 (முற்றும்)

# 28. அபிராமி அம்மை அருட்புகழ்

ஹரிகாம்போதி] உயிர் வர்க்க மாலை [ஆதி

(பதினான்கு சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய விருத்தம்)

345. தேவியின் தன்மையும் பெருமையும்

அருவாகி மற்றும் உருவாகி அன்றி
அருவச் சொரூபம் அதுவாய்
அருளாகி அன்பர் தெருளாகி என்றும்
ஆநந்தம் ஆன நிறைவாய்க்
கருவாகி உள்ள உயிராகி நின்று
காப்பாற்றும் அன்னை வடிவாய்க்
கதிஆகி மேலை விதிஆகி மிக்க
கருணைப் ப்ரகாஶ முதலாய்த்
திருவாகி நல்ல பொருளாகி எங்கள்
தேவாதி தேவர் துணையாய்ச்
செயலாகி அந்தச் செயலும் கடந்த
செயல்அற்ற மோந முடிவாய்
அருவாய நோய்கள் அவைதீர்க்கும் இன்ப
அமுதீஶர் பாகம் உறைவாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (1)

346. தொண்ணூற்றாறு தத்வங்களைக் கடக்க

ஆறோடு நாலும் ஆறோடு நாலும்
ஆறோடு நாலும் ஒருசேர்
ஆறோடும் ஆறும் ஆறோடும் ஆறும்
ஆறோடும் ஆறும் உடனாய்

ஆறேடு நாலும் ஆறேடு நாலும்
ஆறேடு நாலும் அவைஆம்
ஆபாஸம் ஆன மாயா விகாரம்
அவைசேர் உடற்குள் உறைவேன்
பேறேடு ஞாந மொழியோடு பேசு
பெருமா தவத்தர் குழுவிற்
பிரியாது வாழ விரிவான போதப்
பிரஸாதம் ஈய நினைவாய்!
ஆறேடும் ஆரும் அணிவேணி அண்ணல்
அமுதீஶர் பாகம் அகலாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (2)

[ஆறேடு நாலும்......ஆபாஸம்: 6+4+6+4+6+4+6+6+6+6+6+6+6+4+6+4+6+4=96 தத்வங்கள். இதனை 'ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் அறுநாலும், ஆறும் ஆய ஸஞ்சலங்கள்'' என்றார் அருணகிரி நாதரும் (திருப்-'ஆறுமாறும்') ஆறேடும் ஆரும் - கங்கை நதியோடு ஆத்தி மலரையும். வேணி-ஜடை.]

## 347. பலவகை அருள் வேட்டல்

இயல்பான நல்ல அறிவும் குணங்கள்
இவையும் சிறந்த மதமும்
எழிலான மேனி அழகோடு ஞாந
இனமான அன்பர் உறவும்
பெயல்போல உன்றன் புகழ்பேசு வாய்மைப்
பிரமாத வாக்கு வளமும்
பிரமாவும் மாலும் அறியாத தெய்வப்
பெருவாழ்வும் ஈய நினையாய்!

கயல்போல வாய்த்த விழியாற் கணித்துக்
கடையேன் மநத்துள் இருளைக்
கதிர்போல ஞாந ஒளிவீசி ஓட்டிக்
கரவாமை காக்க வருவாய்!
அயலாக என்றும் ரிபுகாலன் ஆன
அமுதீஶர் பாகம் அமர்வாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (3)

[அயல்-பக்கம்; அருகாமை. ரிபு காலன்-காலகாலனும் ஶிவன்.]

348. தாந தர்ம சிந்தையும் ஜீவ காருண்யமும் வேண்டல்

ஈயாத லோபி எனவே அழைக்கும்
இதுபேர் எனக்கு மருவா(து)
எதுவேண்டி னாலும் எவர்ஆயி னும்தான்
எளிதாக ஈய அருளாய்!
நோயாளர் தம்மை விழிகாணும் மெத்த
நோக்காடு கொள்ளும் மநமே
நோய்தீர்த்(து) அவர்க்கு வாழ்வைத் தரற்கு
நோன்பாக வாய்க்க அருளாய்!
தேயாத தெய்வத் திருவே! சிறந்த
திருமாது வாணி இருவர்
'ஶிவகாமி! வாமி! அபிராம வல்லி!
ஜெய!' என்(று) இசைக்க மகிழ்வாய்!
ஆயாது கூட அருள்செய்ய வல்ல
அமுதீஶர் பாகம் உடையாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (4)

349. க்ஞாநோப தேஶமும் அன்பு நெறியும் அருள்க!

உபகாரம் ஆன தொருசித்தம் எற்கும்
உடனே அமைந்து விடுமா(று)
ஒருவார்த்தை சொல்லி மறுவார்த்தை இன்றி
உபதேஶ வார்த்தை புகலாய்!

ரூபமான செய்கை எதுநாளும் ஓங்கு
ஸுகமான வாழ்வும் அமரர்
ஸுரர்தேவர் காண அரிதான அன்பு
தொகுதூய தான நெறியும்
கபடம் களங்கம் மருவாத சிந்தை
கநயோக மார்க்கம் முயலும்
கருணைப் ப்ரகார அருளும் கலந்து
கடையேற்கு நன்(கு)உன் அருள்தா!
அபசாரம் அற்ற அடியார்கள் ஏத்தும்
அமுதீஸர் பாகம் வளர்வாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (5)

### 350. அழகு நிதியே! உனையே நினைக்க அருள்!

ஊமைக்கு(ம்) ஞாநம் ஒருநேரில் ஈந்த (து)
உளமேவல் உற்(று)இ (வ்) அடியேன்
உனைவந்(து) இறைஞ்சும் நினைவைக் கருத்தில்
உறவாக வைப்பை! மறவாய்!
மாமைக்கொர் சேம வீடாய் இருக்கும்
மறைஞாந வல்லி! பரையே!
மயில்ஏறும் ஐயன் முருகேஸ னுக்கு
மாதாவும் ஆன ஸிவையே!
பாமைக்கு நாதன் நெடுமால் மகிழ்ந்த
பகிநிப் பெயர்ப்பண் மொழியே!
பழு(து)அற்ற சித்தர் எழுதற்(கு) ஒணாத
படிவத்து நுட்பம் உடையாய்!
ஆமைக்கு(ம்) முன்னர் அருள்செய்த அண்ணல்
அமுதீஸர் பாகம் அறிவாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (6)

[ஊமை - மூக கவி. மாமை - அழகு; நிறம். பாமை-ஸத்ய பரமா. பகினி-தங்கை. ஆமை-கூர்மாவதாரத் திருமால்]

351. ஞாநத்தால் தொண்டர் நாயகம் ஆக

எப்பாலும் உன்றன் முகமே துலங்க
எளியேன் நினைந்து மகிழ
ஏழைக்கு(ம்) ஞாநம் ஈயப் பரந்த
இதயா ஸநத்தை உடையாய்!
துப்பால் உயர்ந்த தொழுபாரில் உள்ள
தொண்டர்க்(கு) எலாம்ஓர் முதலாய்ச்
சோராத வாய்மை மாறாத சிந்தை
தோயும் படிக்(கு) உன் அருள்தா!
கைப்பால் உகந்து பிரமா புரத்தர்
கவிபாட ஊட்டு கருணைக்
கடலே! கநத்த முகிலே! உயர்ந்த
கயிலாய(ம்) மீதும் அதனின்
அப்பாலும் ஆன அருளாளர் எந்தை
அமுதீசர் பாகம் அடைவாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (7)

352. தமிழ்ச் சங்கத் தலைவியே! ஞாநக் கண் பார்!

ஏழ்ஏழு பேர்கள் ஸங்கத்(து) இருந்த
எழுவாய நாளில் அதனை
இமையாது காத்த உமையே! எனக்(கு)உன்
எழில்ஞாந நோக்கம் உதவாய்!

தாழ்ஏழு மாதர் தலையால் வணங்கு
தகைமைக்கு வாய்த்த தயையே !
தவமிக்க ஶக்தி ! நவஶக்தி மார்சொல்
தரிஶித்(து) உரைக்க மகிழ்வாய் !
பாழ்ஏழு லோகம் ஆமாறு வந்த
பண்டக் கொடூர அஸுரன்
பாவம் பறக்க ஆகம் கிழித்த
பரமாநு கூல அரியே !
ஆழ்ஏழு வேலை நஞ்சுண்ட கண்டர்
அமுதீஶர் பாகம் நிறைவாய் !
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (8)

[ஏழ் ஏழு பேர்கள் ஸங்கம்-49 தமிழ்ப் புலவர்கள் இருந்த கடைச் சங்கம். எழுவாய் அந்நாளில்-ஆதி முதல் ஆகிய அந்த நாளில். ஏழு மாதர்-ப்ராஹ்மி, மஹேஶ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, இந்த்ராணி, சாமுண்டி என்னும் ஸப்த மாதர். நவஶக்திமார்-வாமை, ஜேஷ்டை, ரௌத்ரி, காளி, பலவிகரணி, பலப்ரதமநி, ஸர்வபூததமநி, ஶக்தி, மநோந்மநி என்ற ஒன்பது பேர்.]

## 353. ஶிவபிரான் பெருமையும் தேவியின் அருமையும்

ஐம்மா முகத்தர் எம்மான் அருத்தம்
அனையார் மஹத்து வம்அ(து)ஆர்
அறிவாம் ஸொரூபர் குருவாம் பிநாகி
ஆணோடு பெண்ணும் அலிஆம்
பெம்மான் நிறத்தில் மலர்மாலை பூண்ட
பெருமான் எருத்தம் நேரியப்
பெறுமாய வேணி ஒருபத்தி னைக்கொள்
பிடியான் பிடுங்கு மலையைச்
சும்மா நகத்தின் நுனியால் அழுத்து
தொடர்பால் அவற்கு வலிசேர்

ஸோமன் புனைந்த வாமன் செறிந்த
சோலைத் தலத்துள் உறைவார்
அம்மான் அமைந்த ஆறேறு சென்னி
அமுதீஸ ர் பாகம் விழைவாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (9)

[அருத்தம்-அர்த்தம்-சொல்லின் பொருள்; செல்வமும் ஆம். நிறம்-மார்பு. எருத்தம்-கழுத்து. பெறும்-பெறுதல். மாய-மாயம் வல்ல. ஆய-ஆகிய எனலும் ஆம். வேணி-முடியை உடைய தலை. மலை-கயிலாயம். அவற்கு-அந்த ராவணனுக்கு. வலி-நோவு; வலிமை (வாழ்நாள், வாள் இவை தந்ததால்) எனலும் ஆம். சேர்-வரத்தால் சேர்த்த. ஸோமன்-சந்த்ரன். வாமன் அழகன். சோலைத் தலம்-சோலைகளை உடைய திருக்கோலக்கா, திருநெல்லிக்கா, திருக் கோடிகா, திரு ஆனைக்கா முதலிய.]

354. தேவியின் முடி முதல் அடி வரை வர்ணனை

ஒளியார் முகம்கொள் உமையே! வளைந்த
ஒயிலான நெற்றி உடையாய்!
ஒழுகும் கடைக்கண் அருளே வழிந்த
உபயத் தனிச்செ(வ்) விழியாய்!
களியே கொடுக்கும் அழகான வாய்ச்சொல்
கமழ்கின்ற தொண்டை இதழாய்!
கமு(கு)அம் கழுத்தும் பணைபோல நீண்ட
கழைஅன்ன தோளும் உடையாய்!
வெளிபோல் இடைக்கு வெகுபாரம் ஆன
விரிமேரு ஒத்த முலையாய்!
விளைகின்ற பேராபை வளைகொண்ட கைகள்
மிளிர் உந்தி பூத்த மலராய்!
அளியால் உயர்ந்த அடியாய்! மருங்கில்
அமுதீ ர் பாகம் நுழைவாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (10)

[உபயம் - இரண்டு, தொண்டை - சிவந்த கொவ்வைக் கனி. கமுகு - பாக்கு மரம். பணை - மூங்கில். கழை - கரும்பு. மிளிர்- விளங்குகின்ற. உந்தி-வயிறு. அளி-கருணை.]

### 355 தேவியும் அபிராமிப் பட்டரும்

ஓதா (து) உணர்ந்த ஒளிஇன்ப வெள்ளம்
உடையாய்! எனக்(கு) ஒர் தலைவீ!
ஒளிமேவு திங்கள் அதுகாட்ட வேண்டி
உயர்தோ(டு) எறிந்து வெளியில்
மாதா வணங்கும் அபிராமிப் பட்டர்
மகிழ்வாய்ச்சொல் மெய்ம்மை உறுமா
வருபூர ணைக்கு வழிகாட்டி ஆண்ட
மஹமாயி! தேவி! மறவார்
பாதார விந்தம் அவர் வந்(து)அ(வ்) வாறு
பரமேசை நீசெய் வகைதான்
பாடித் துதித்த அந்தாதி கேட்ட
பரிவான தெய்வ எழிலே!
ஆதாரம் ஆக உலகுக்(கு) அமைந்த
அமுதீசர் பாகம் அணைவாய்!
அழகால் உயர்ந்த கடவூர் அமர்ந்த
அபிராமி அம்மை உமையே! (11)

[மாது + ஆ = மாதா(க). மாது - அழகு; பெருமை. தேவி உபாஸகர் என்ற முறையில் ஒரு பெண்ணைப் போல எனினும் ஆம். பூரணை-பௌர்ணமி. அந்தாதி - அபிராமி அந்தாதி. ஆதாரம் ''கால முதல் வாழ் புவிக்கு ஆதாரநகர் கோபுரத்துள்'' (திருப்புகழ் ''சூலம் என''). புவிக்கு ஆதார நகர் -திருக்கடவூர் ஆதலின்- அவ்வூர்ச் சிவபெருமானும் அமுதீசரும் ஆதாரமாக உலகுக்கு அமைந்தார் என்க. ''அன்னே உலகுக்(கு) அபிராமி என்னும் அரு மருந்தே!'' என்ற அபிராமி அந்தாதி (25) வாக்குப்படி ஆதாரம் ஆக உலகுக்கு அமைந்த ...... அணைவாய்! (அபிராமியே) என்றும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ள இடம் தருகிறது இவ்வடி.)

(அபிராமி அம்மை அருட்புகழ்ப் பதிகம் முற்றும்)

# 29. முருகவேள் அருட்புகழ்

ராகம்-ஸிந்து பைரவி ] 356. அருள் பெற [ தாளம் - ஆதி

தத்த தானன தனதான

அட்ட மாமலர் அணிதாளா-
இட்ட மாய்உனை நினைவேனைக்;
கெட்ட மாயையில் இடல்ஆமோ?
சட்ட நீஅருள் புரிவாயே;
துட்ட ஸூதந! முருகேஸா!
சிட்ட பாலந! அபிராமிப்;
பட்டர் பூஜைசெய் கடவூர்வி-
ரட்ட(ம்) மேவிய பெருமாளே.(1)

[ அட்ட-அஷ்ட-எட்டு வகையான. அஷ்ட புஷ்பங்கள்-அலரி, சண்பகம். செந்தாமரை, நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, புன்னை, வெள்ளெருக்கு. இட்டமாய்-இஷ்டமாக சட்ட-நன்று. துட்ட - துஷ்டர்களை. ஸூதந - அழித்தொழிப்பவனே. சிட்ட - சிஷ்ட - நெறிமுறை வழி நடப்போர்களை பாலந - பரிபாலிப்பவனே. கடவூர் வீரட்டம் - அட்ட வீரட்டாநங்களுள் எட்டாவது வீரட்டத் தலம். ]

ஸாமா ] 357. பிழை தீர [ த்ரிபுடை

தானதன தத்தன தானன
தானதன தத்தன தானன
தானதன தத்தன தானன தனதான

ஆராதனை பற்றிஉன் ஆயிர
நாமாதிகள் துத்தியம் ஆகிய
ஆசாரஅ நுஷ்ட்டித மோடுய அருளாலே—

ஆராய்அறி வற்றுவி டாதுசெய்
பாராயண மெய்க்ரமம் ஏதறி
யாநாயின னைப்பொரு ளாகஉ தவிநீயும்;
பேராதர வைத்தரு வாய்இலை
பாதாலயம் வைத்தருள் வாய்இலை
பேசாதுசொல் அற்றநு பூதியில் நிலையாகப்-
பேராமல் இருக்கைசெய் வாய்இலை
நாராயண னுக்கினி யாய்!இனி
பேயேன்எனை உற்றணை வார்எவர்? பிழைதீராய்;
தோராத அயிற்படை வானவ!
போராடு(ம்) மயிற்பரி போல்நவ
ஜோரான மநப்பரி மேல்நவ மணிபூணு-
தோலாது செலுத்தெழில் ஆனவ!
காலாய்த! முகச்சடு தாநவ!
ஶூலாய்தம் உடைச்ஜடை யான்அவன் அருள்சேயே;
தீராத வினைப்பிணி தீர்தரு
பேராயிரம் உற்ற பிரான்மஹ
தேவாதி பதிக்கொரு போதக! ஸுரர்சூழும்-
தேவாமிரு தக்கட வூர்இறை
காலால்எம னைக்கட வூர்கடை
சேராத திருக்கட வூர்உறை பெருமாளே—(2)

[ஆராதனை – வழிபாடு. ஆயிர நாமாதிகள்-ஸஹஸ்ர நாமம், த்ரிஶதீ நாமம், அஷ்டோத்தர ஶதநாமம், ஷோடஶ நாமம், த்வாதஶ நாமம் இவை. துத்தியம் - ஸ்தோத்ரம் ஆதிய - முதலிய. அநுஷ்ட்டிதம் - கைக்கொண்டு நடத்தல். உய - உய்ய ஆராய் - ஆராய்ச்சி செய்கின்ற ஏது-எதுவும்; எத்தநம், முயற்சி

எனலுமாம். பேர்-பெரிய. இலை-இல்லை. பாத ஆலயம்-திருவடி யாம் கோயில். பேராமல் - நிலை மாறாமல்.

தோராத - தோல்வி காணாத. அயில் - வேல். வானவ - தேவனே. மயிற்பரி போல் - மயில் வாஹநத்தைப் போல. (போனவ - போல்+நவ எனப்பிரிக்க). நவ - புதிய. ஜோரான - அழகான, கம்பீரமான மநப் பரி மேல்-மநமாகிய குதிரை மீது. நவமணி - ஒன்பது ரத்நங்கள். பூணு - பூண்டு. தோலாது - தோற்றுப் போகாமல். எழில் ஆனவ - அழகே (உரு) ஆனவனே. கால் ஆய்த-காலை ஆயுதமாக் கொண்ட கோழி(க் கொடி)யனே. முகச் சடு தாநவ - ஷடு முகத் தாநவ - சந்த்ரன் போன்ற முகங்கள் ஆறு கொண்டவனே. தாநவன்-சந்த்ரன் ஜடையான் அவன்-ஶிவன். மஹாதேவ அதிபதி அல்லது ஆதிபதிக்கு—மஹா தேவனாகிய யஜமாநன் அல்லது முதல் தலைவனுக்கு. போதக! - ஆசிரிய! தேவாமிருதக் கடவூர் - தேவாம்ருதம் நிறைந்த குடம் உள்ள ஊர். கடம் - குடம். இறை கடவு ஊர் - ஶிவபெருமான் தன் காலால் எமனை உதைத்துச் சிதைத்த ஊர். கடை சேராத - யுக முடிவில் உண்டாகும் ப்ரளயம் வந்தணுகாத. உறை - வீற்றிருக்கும்.]

பூர்வ கல்யாணி ] 358. திருவடி சேர [ ஜம்பை

தனதனந் தானதன தானதன தானதன
தனதனந் தானதன தானதன தானதன
தனதனந் தானதன தானதன தானதன தந்ததான

இரவியும் ஸோமன்ஓர்செ வாய்புதன்வி யாழன்வெளி
ஶநிதமம் கேதுவும்இ ராகுநவ கோள்கள்எனும்
இவர்கள்ஒன் பான்மரும்இ றுசெயல்இ லாதபடி
எந்தநாளும்-
இனிதுநன் றேபுரிய ஏழைஎளி யேன்எனது
மனிதலஞ் சாரவினை வாழ்வுவிதி யால்மருளும்
இழவுகொண் டாடுதல்இ லாதபடி மேன்மைஉற
இன்புமேவப்;

பரவிஉன் பாதமலர் நாளும்வழி பாடுசெய்து
கரவில்நெஞ் சால்அடியர் ஸேவைமற வாதுபல
பணியும்அன் பால்விரவி மேலும்இனி மேலு(ம்)மிக
நன்குபேணிப்—

பயில்தொழும் பாளரொடு கூடிஇசை பாடிஎன
செயல்முயன் றேஉனதெ ணுநினைவு கூர்தரும்ஓர்
பதம்அடைந் தேபதம தாகவும்உ ணுதுபதம்
என்றுசேர்வேன்?

புரவிஎன் றோர்மயிலில் ஏறிஉல கேழு வல(ம்)
மருவிவந் தேசயிலெ நா தாசனி யாவைஒரு
புகர்முகன் பாணியில்இ டாசெய்வளை யாடல்அது
கண்பொருமே—

பொருமிஅன் றேமகிழ்தி ராவிடந ணுடுபுகழ்
பழநிதென் பாலுளதில் ஏகிமுடி மீதுகுடி
புகுதண் டாயுதஸ பாணிய! பின் ‘நீபழம்’ என்
நுந்தையாயை;

அரவணைந் தாய்!கலைய தூர்திரு மால்பிரமன்
அரிசுறுந் தேஹிபுலி சாகம்அர சேமமுடி
அரதநம் சேர்கயிடன் ஆகரன்வ லாரிஉய வந்ததேவர்—

அமுதர்சந்த் ராபாணன் ஆர்கலயர் காரிஸிபி
மிருககண் டுயரது பேரன் எமன் ஆதிதொழும்
அமுதலிங் கேஸுர்கட வூரில்அபி ராமிபெறு
தம்பிரானே.(3)

[இரவி - ஸூர்யன். ஸோமன் - சந்த்ரன். செவாய் - செவ்வாய். வெளி - வெள்ளி தமம் - ராகு. இனர்கள் - இன்னவர்கள். நவகோள்கள் நவக்ரஹங்கள் ஒன்பான்மர் - ஒன்பது பேர்கள். இன செயல் - இன்னாத (கூடாத) துன்பங்களைச் செய்தல். ஸஞ்சார

வினை வாழ்வு - வினைக்கு ஈடான ஸம்ஸார வாழ்வு. மனித ஸஞ்சார-மனிதனாய்ப் பிறந்து உலகில் அலையும் எனினுமாம் விதி - தலைவிதியால் மருளும் - மயங்கும் இன்பு - இன்பம். கரவு இல் - ஒளி மறைவு இல்லாத. தொழும் ஆளர் - அடியார்கள். எனை - என்று. ஓர் - ஒப்பில்லாத. பதம் - பதவி. பதமதாக - பக்குவமாக. உனது - உனது. பதம் - திருவடி.

புரவி - குதிரை. மருவி - பொருந்தி கனி மாவை மாங்கனியை. புகர்முகன் - புள்ளிகளையுடைய யானை முகத்துக் கணபதி. பாணி - கை. இடாசெய் - இட்டு வைத்து கண் பொறுமே - கண்ணுற்றுப் பார்க்க ஸஹிக்காமல். பொருமி - மதம் குமுறி திராவிட நல்நாடு - நல்ல தமிழ்நாடு. பழநி தென்பால் உளது - தெற்கே உள்ள தென் பழநி ஏகி - சென்று முடி - உச்சி ஸுபாணிய - நல்ல கையை உடையவனே! நீபழம் - பழம் நீ; பழநி என் - என்ற. நுந்தை-நுன்-(உன்) தந்தை; ஶிவன். யாயை-தாயை; உமையை அரவணைந்தாய் - அரவணைத்தாய் - அநுஸரித்தாய் கலையதூர்த்தி - மான் வாஹிநி; துர்க்கை. அரி - (ஐந்து) ஸூர்யர்கள் குறுந்தேஹி - குறுகிய (குட்டையான) உடம்பை உடைய அகஸ்தியர். அரசு ஏமமுடி - ஹேம கிரீட மன்னன் அரதநம சேர் கபிடன் - ரத்நகபிடன். (அரதநம் சேர்) ஆகரன் - ரத்நாகரன். வலாரி - இந்த்ரன். உய வந்த தேவர் - உய்ய வந்த தேவ நாயனார். அமுதர்–அம்ருதம் உண்ட தேவர். சந்த்ராபரணன்-சந்த்ர பூஷண ராஜன். ஆர்-(பெருமை) பொருந்திய. கலயர், காரி குங்கிலியக் கலயர், காரி ஆகிய நாயன்மார்கள் ஶிபி - ஶிபிச் சக்ரவர்த்தி மிருக கண்டுயரது பேரன் - மார்க்கண்டேயர் ]

காம்போதி ] 359. துதி [ ஆதி

தத்த தானத்தத் தத்தான தானன
தத்த தானத்தத் தத்தான தானன
தத்த தானத்தத் தத்தான தானன தனதான

ஒற்றை மூலத்துக் கொத்தார்க ஜாரணி
யச்சு வாதிடடத துத்தாந(ம்) நான்மறை
உற்ற காநத்திப சக்ராதி பேர்வந(ம்) மணிபூரம்-

ஒப்பில் கோயிற்சிற் பொற்கான்அ நாஹத(ம்)
'வி'ச்சொல் சேர்[illegible]த்திச் சுஸ்த்தாந ஆல்வநம்
உட்சு வேதப்பொச் சைக்காற தாம்இடம்
உயர்ஆ(க்)ஞை;

அற்றை நாள்தொட்டுச் சித்தாதி தேவர்கள்
அர்ச்ச ஞபக்திக் குப்பூஜை ஆதிசெய்
அட்ட வீரட்டத் தெட்டாவ தாகிய கடவூராம்-
ஐக்ய வீரட்டத் துக்கூவி ளாரண்ய
பத்து நூறெட்டுப் பொற்பேடு ளார்ஸஹஸ்
ரத்தி ஞரத்துச் சொற்கோயில் வாழ்தரும் அமுதீ[illegible]ர்;
கற்றை வேணிக்கட் கைக்கூடை சூழ்செய்து
பிட்டு வாணிச்சிக் குச்சேவை பேணிய
கட்டு மேனிச்சொக் கக்கால காலரொ டபிராமி-
கட்டி ஆரைப்பட் டுச்சேய்ஸ ஞஇடை
வைத்து மார்பிற்ருெட் டுச்சேர லாலனே
கட்க வாவிப்பற் றித்தோள்கள் ஆரவும்
அணைகாளாய்:

பொற்றை பேல்உற்றுச் சிற்ஜோதி போல்வளர்
அற்பு தா![illegible]க்திக் கட்காயு தா!கொடி
புச்சி கேகைக்கைக் கற்பூர ஜோதிய! புருஹூ[illegible]தன்-
புத்ரி வேடிச்சிக் குக்காத லா!பரி
பக்ஷி கேகிக்கட் புக்கேறி ஏழ்புவி
பொற்பொ டேசுற்றிச் சற்றேஉ லாவரு
பெருமாளே.(4)

[ இப் பாடலில் முதல் 12 வரிகளுள் காடாக உள்ள ஏழு தலங்கள் ஆறு ஆதாரங்களாகவும், ஸஹஸ்ரதள கமலமாகவும் உள்ளன என்று கூறப்பட்டுள்ளது. அவை வருமாறு:

| | காடு | ஊர் | ஆதாரம் |
|---|---|---|---|
| 1. | கஜாரண்யம் | திருஆனைக்கா | மூலாதாரம் |
| 2. | வேதாரண்யம் | திருமறைக்காடு | ஸ்வாதிஷ்டாநம் |
| 3. | நைமிஶாரண்யம் | நேமிவநம் | மணிபூரகம் |
| 4. | சிற்பொற்கான் | சிதம்பரம் | அநாஹதம் |
| 5. | வடாரண்யம் | திருஆலங்காடு | விஶுத்தி |
| 6. | ஶ்வேதாரண்யம் | திருவெண்காடு | ஆக்ஞை |
| 7. | வில்வாரண்யம் | திருக்கடவூர் | ஸஹஸ்ராரம் |

ஒற்றை - முதலாவதான. மூலத்துக்கு - மூலாதாரத்துக்கு. ஒத்துஆர் - ஏற்பப் பொருந்திய. கஜாரணியம் - திருஆனைக்கா. சுவாதிட்டாநத்துத் தாநம் - ஸ்வாதிஷ்டாந ஸ்தாநம். மறை உற்ற காநம்-வேதாரண்யம். சக்ர ஆதி பேர் வநம்-சக்ரம் என்று பொருள்படும் நேமி என்னும் சொல் முதற்கண் அமைந்த பேர் கொண்ட வநம் - நைமிஶாரண்யம். நைமிஶவநம் - 108 விஷ்ணு ஸ்தலங்களுள் ஒன்று. வடநாட்டில் ஸாண்டிலிக்கு வடக்கு 25 மைலில் உள்ளது இந்த ஊர். (நிமிஸா ரயில்வே ஸ்டேஷனுக்கு ஸமீபம்). மணிபூரம் - (கடைக்குறையாய் வந்த) மணிபூரகம். மூன்றாவது ஆதாரம். ஒப்புஇல்-ஸமாநம் இல்லாத. கோயில், சிற்பொற்கான் - கோயில், சித்ஸபை, பொற்சபை என்றெல்லாம் சொல்லப்பெறும் சிதம்பரமாகிய தில்லைக்காடு. கான் - காடு. அநாஹதம் - நான்காம் ஆதாரம். 'வி'ச் சொல் சேர் ஶுத்தி - விஶுத்தி. சு ஸ்த்தாநம் - ஶுத்தமான இடம்; விஶுத்தி ஸ்தாநம். ஆல் வநம் - திருவாலங்காடு. உள் - உட்புறத்தில். சுவேதம் - வெண்மை ஆன. பொச்சை - காடு; திருவெண்காடு.

ஆறதாம் இடம் உயர் ஆக்ஞை - உயர்ந்த ஆறுவது ஆதாரமான ஆக்ஞை ஸ்தாநம். அற்றை - அந்த. கடவூராம்... கூவிளாரண்யம் - திருக்கடவூரை வில்வாரண்யம் என்று ஸ்தல புராணம் கூறும். கூவிளம் - வில்வம். பத்து நூறெட்டு — $10 \times 100 + 8 = 1008$. பொற்பு ஏடு - அழகிய இதழ்கள். ஸஹஸ்ரத்தின் ஆரத்து - ஸஹஸ்ராரத்து. சொல் - கூறப்பெறும். கோயில் - சிறந்த இடமாம் குருகமல பீடம்; ஸஹஸ்ராரம்; ப்ரம்ம ரந்த்ரம். அமுதீசர் - கடவூர்ச் வபிரான். ஶிகற்றை - திரண்ட. வேணி - ஜடை. கண் - இடம். சேய் - குழந்தை. எனு - என்று. இடை - இடுப்பில். லாலனைகட்கு - கொஞ்சிக் குலாவுதலுக்கு. அவாவி - ஆசைப்பட்டு. ஆரவும் - பொருந்தவும். காளாய்! - காளையே! பொற்றை - மலை ஶக்தி - வேல். கட்கம் - வாள். புச்சி-சேவல். கேகை - மயில். கொடி . கை - மயில், சேவல் இரண்டையும் கொடியாகக் கையில் ஏந்துபவன் செவ்வேள். புருஹூதன் - இந்த்ரன். புத்ரி - தேவஸேனை. பரி - தாங்கும் குதிரையாக. பக்ஷி - பறவையாம். கேகி - மயில் மீது பொற்பொடு - அழகோடு. ]

பந்து வராளி ] 360. அகப்பொருள் [ ஆதி

தந்தன தானன தத்தன தானத்
தந்தன தானன தத்தன தானத்
தந்தன தானன தத்தன தானத் தனதான

கண்கிளி நேர்பவர் கட்டழ கால்மெச்
சம்படி மேயவர் சித்தஜ பார்யைக்
கண்படு மாறெழில் மிக்கவர் வானிற் கமழ்கானிற்-
கண்டெடு பேதையர் கற்புக ளாவுக்
கென்றுறு கோதையர் கட்டுகி ரீவக்
கம்புடை பாவையர் கற்பக மீவெற் பகமேல்வாழ்;

திண்கிளி நாஸிள னச்செய மேனிக்
கிஞ்சுக வாயள்ஒ ருத்திவ லாரிச்
செங்கிளி கிரம்ள னப்பசு மேனித் திருமேவும்-
தெங்கிள நீர்நகில் செப்பனே யாள்கற்
குன்றவர் பூவைஒ ருத்திஇ ஞரைச்
சென்றணை தோள்கள்ஓர் எட்டொடு நால்தொட்
டெனைஆள்வாய்;

பண்கிளி ஆகி வகுப்பநு பூதித்
தண்கவி பாடரு ணைச்ஸிலை நாதப்
பண்படி யார்சொல்தி ருப்புகழ் கேள்விக்
குடையோனே-

பம்பர மாகந டிப்பவள் பாணிப்
பைங்கிளி ஆள்பவள பட்டர்பி ரான்மெய்ப்
பங்கில்அ மாவஸி யைப்பரி பூர்ணைத் திதியாவை;
பெண்கிளி போல்பவள் பெட்பபி ராமச்
சுந்தர நாயகி புத்திர னே!முற்
பின்பெறு கூன்அற முத்தமிழ் மாறற் கருள்வோனே-
பிங்கல வேல்மயில் குக்குட வா!பொற்
சந்திர பூஷண னுக்கருள் வார்நற்
பிஞ்ஜில ஆரணி யக்கட வூரிற் பெருமாளே. (5)

[கிளி - ஒரு வகை மீன். சித்தஜ பார்யை - மந்மதன் மனைவியாம் ரதி. கண்படுமாறு - கண் எச்சில் படும்படி. வானில் கமழ் கானில் - விண்ணுலகத்திலும், மண்ணுலகத்தில் வள்ளிமலைக் காட்டிலும். கண்டு எடு - கண்டெடுக்கப் பெற்ற. வானில் தெய்வயானையை இந்த்ரனும், மண்ணில் வள்ளியை நம்பிராஜனும் கண்டெடுத்து வளர்த்தனர். களாவு - களவு, களாவு என

நீண்டது. கற்பு... கோதையர்-கற்பு, களவுத் திருமணங்கட்குரிய மாதர்கள். (கற்பு - தேவயானை. களவு-வள்ளி,) கட்டு-கட்டித் தழுவும். கிரீவம் - கழுத்து. கம்பு - ஶங்கு. மீ - மேலே உள்ள (கற்பகக் கா). வெற்பக மீ - (வள்ளி) மலை மேலே. கற்பக மீ வெற்பகம் - கற்பகச் சோலையிலும், வள்ளி மலையிலும். நாஸி - மூக்கு. செய - செய்ய - சிவந்த. கிஞ்சுக வாயள் - கிளியின் மூக்கைப் போல், சிவந்த வாயிதழ்களை உடையவள். வலாரிச் செங்கிளி - வலாஸுரனின் பகைவனும் இந்த்ரனின் சிவப்புக் கிளி போல்வாளாம் தேவஸேனை என்னும் பெண். கீரம் - கருங்கிளி. பசு மேனி - பச்சை மேனி. திரு - லக்ஷ்மி போன்ற வள்ளி நாயகி. தெங்கு - தேங்காய். நகில் - கொங்கை. செப்பு - சிமிழ். கற் குன்றவர் - மலை வாழ்வோர் ; வேடர்கள். பூவை - (பேச்சில்) நாகணவாய்ப் பறவை போல்வாள். எட்டொடு நால் (8+4) - பன்னிரண்டு. பண் - பல பண்களைப் பாடும். கிளி ஆகி -கிளியின் உருவினராகி. வகுப்பு - திருவகுப்புகள். அநுபூதி - கந்தர் அநுபூதி. அருணைச் ஶ்ரீலை நாதப் பண்படியார் - அருணகிரி நாத ஸ்வாமிகள். கேள்வி-காதாற் கேட்டல். பாணி-கையில். பட்டர் பிரான் - அபிராமிப் பட்டர். மெய்ப் பங்கில் - உண்மையான சார்பில்; கட்சியில். அமா வஸி-அமாவாஸை. பரி பூர்ணைத் திதி- முழுதுமான பௌர்ணமித் திதி. வை - ஆக்கி வைத்த. பெட்பு - அன்பு. முன் பின் பெறு கூன் அற - மதுரைக் கூன்பாண்டியன் உடம்பில் முற்பகுதியிலும் பிற்பகுதியிலும் பெற்றிருந்த இரு கூன் களும் மறைந்து போமாறு நீக்கிய. முத்தமிழ் மாறன் - நின்ற சீர் நெடுமாற நாயனர். அருள்வோன் - திருஞாந ஸம்பந்தராய் அவதரித்தபோது அருள் செய்தவன். பிங்கல - பொன்நிற முடைய; பொன்னுல் ஆன. குக்குடவா - கோழி(க் கொடி)யனே! சந்திர பூஷணன் - ஒரு மன்னன். பிஞ்ஜிலம் - ஒரு வகை ஜாதி மல்லிகைக் கொடி. ஆரணியம் - காடு. திருக்கடவூர் 'பிஞ்ஜிலா ரண்ய'மும் ஆகும். ]

கல்யாணி ] 361. குறைந்த நிலை பெற [ ஆதி

தனத்தன தானத் தனத்தன தானத்
தனத்தன தானத் தனதான

கருப்புகழ் சாடித் துடிப்பொடு தேடிக்
கலைத்திறம் நாடிச் சிவஞானக்—
கநத்தினை நேடித் திநத்திநம் ஓடிக்
களைத்திடும் வாடிக் கையைவீடிக்;
குருப்புகழ் நீடித் திடக்கடி தாடிக்
குளித்திடும் வேடிக் கையில்மோநக்—
குளத்தினில் மூழ்கிக் களித்திடும் வாழ்வைக்
குணத்ரய(ம்) மாழ்கத் தருவாயே !;
தருப்புகழ் வானச் சுரக்கொடி காணத்
தனிப்பர கோடுற் றணைவோனே!—
தமிழ்த்ரயம் நீள்கற் றினைப்புனம் ஏகித்
தவக்குற மானைப் புணர்வோனே!;
திருப்புகழ் பாடிக் கனற்சிலை நாதத்
திருத்தகை பேணற் கருள்வோனே —
சிவத்தலம் ஆகிச் சிலவத்தலம் ஆ(ம்)மெய்த்
திருக்கட வூரிற் பெருமாளே!(6)

[கருப்புகழ் - தாயின் கர்ப்பத்தில் புகுந்து வாழும் இகழ்ச்சி. இகழ்ச்சியைப் புகழ் என்று கூறியது வஞ்சப் புகழ்ச்சி அணியாம். சாடி - அழித்து. துடிப்பு — ஆர்வம். கநம் - பெருமை. நேடி - விரும்பி. வாடிக்கை - பழக்கம். வீடி - அழித்து. குருப்புகழ் - குருநாதனுடைய புகழ். நீடித்திட - தொடர்ந்து இருக்க. கடிது -

விரைவில். ஆடி - நீராடி. குணத்ரயம் - ஸத்வ, ராஜஸ, தாமஸம் என்னும் மூன்று குணங்கள். த்ரயம் - மூன்று. மாழ்க - அழிய. தரு - தேவலோகத்து ஐந்து வ்ருக்ஷங்களால். புகழ் - பெருமை கொண்ட. வானம் - விண்ணுலகம். ஸுரக்கொடி - தெய்வப் பெண்ணும் தேவஸேனை. பர கோடு-திருப்பரங்குன்றம். கோடு - மலை. தமிழ்த்ரயம் - (இயல், இசை, நாடக) முத்தமிழ். நீள்கல் திணைப்புனம் - தமிழ்நாட்டைச் சேர்ந்த, நீண்ட - பெரிய, வள்ளிமலைத் திணைப்புனத்தில். ஏகி - சென்று. திருப்புகழ் - முருக வேளின் கீர்த்தி; 'திருப்புகழ்' என்னும் நூல். கனல் சிலை - நெருப்பு மலை - திரு அண்ணாமலை. நாதத் திருத்தகை - அருணகிரிநாத ஸ்வாமிகள். பேணற்கு - கருதி மதித்தற்கு, விரும்புதற்கு. சிவத் தலம் - காலனை உதைத்த கடவுள் வாழ்தலால் சிவஸ்தலமாயிற்று கடவூர். புகழ் மேலோங்கி நிற்கும் அபிராமியம்மை வீற்றிருத்தலால் திருக்கடவூர், (சிவைத்தலம்) மதுரை, ஆனைக்கா, கந்யா குமாரி போல அம்பிகை ஸ்தலமாகவும் ஆகிவிட்டது.]

கர ஹர ப்ரியா ] 362. இரங்கி அருள [ த்ரிபுடை

தய்யாதன தத்தன தந்தன
தய்யாதன தத்தன தந்தன
தய்யாதன தத்தன தந்தன தனதான

கல்லாதவர் கற்றவர் தங்களை
எல்லாரையும் ஒத்துநி னைந்தருள்
கல்யாணகு ணத்தைவ னைந்திசை புனைபாடல்—
கல்லோல ஸமுத்திர மும்சொல
ஒவ்வாதென நித்தியம் விண்டுசொல்
கையானவ ழக்கமும் இங்கிலை பதிதோறும்;

செல்லாதவன் உத்தமர் தொண்டரை
வையாமல் இருப்பதும் இங்கிலை
செய்யாதஅ பத்தியம் ஒன்றினி இலைமீதி —
செவ்வான்உரு வத்தைஇ ணங்குன
மெய்யேதரி ஶிப்பதும் இங்கிலை
செய்வேன்எது? சற்றும் இரங்கிலை ஒருநீயே;
வல்லாதவர் பத்தொடி ரண்டுரு
கொள்ளாயுத ஶக்திய! பொன்ப்ரம
மையாநவ! ஶ த்துரு ஸங்கர வடிவேலா —
வள்ளால்!கலை கற்ற சிதம்பர
நல்யோகியர் கச்சியில் வந்தவர்
வல்லாளர் பி ளைத்தமிழ் விண்டிசை மயில்வாஹா;
வெல்லாத அரக்கரை வென்றுகொல்
செல்வா!முநி ஶிஷ்ட்டர்ப ரஞ்சுடர்
வீள்ளார்யர்கு ருக்கள்ஓர் நம்பிசொல் கடவூராம் —
வில்வாரணி யப்ரம ரந்திர
தெய்வாலயம் உற்றமர் ஸுந்தர!
வெள்ளோதிம மெய்த்வஜர் இந்திரர் பெருமாளே.(7)

[ஒத்து - நன்றாக. கல்யாண குணம்-மங்களமான குணங்கள். வனைந்து - அலங்கரித்து: இயற்றி. இசை புனை - ஸங்கீதம் கலந்த. கல்லோல - அலைகளையுடைய. ஒவ்வாது - உவமிக்க முடியாது. நித்தியம் - தினந்தோறும். விண்டு, சொல் - ஒரு பொருட் பன் மொழி. விண்டு - வாய் திறந்து கூறி. கை - ஒழுக்கம். பதி - ஸ்தலம். வையாமல் - ஏசாமல். அபத்தியம் - செய்யக் கூடாதன வான தவறுகள். இலை மீதி - மீதி இலை-பாக்கி இல்லை. செவ்வான்-

சிவந்த வானம். ''செவ்வான் உருவில் திகழ் வேலவன்''-கந்தரநுபூதி. சிவந்த வானம் போல் முருகன் நிறம் சிவப்பு. இணங்கு - போன்றதான. மெய்-உடம்பு - திருமேனி.

பத்தொடு இரண்டு - $(10+2) = 12$. வல் ஆதவர்-வலிமை கொண்ட ஸூர்யர்களின். உரு கொள் ஆயுத ஶக்திய - (ஒன்று சேர்ந்த) பேரொளியையுடைய ஶ்ரிக்த்யாயுத! (வேலாயுத!). ''மரகத பக்ஷகுலத் துரகத் திவாகரர் வடிவை உருக்கி வடித்த திருக்கைவேல்''-சித்து வகுப்பு. பொன்-அழகிய. ப்ரமயை யாநவ-ப்ரம்ம மயாநத்தவ. 'மயாநவ' என்ற சொல் முதற் போலியாக 'மையாநவ' என வந்தது. கடவூர் மயாநம் ''ப்ரம்ம ஸ்மஶாநம்'' எனப் பெறும். ஶிவபெருமான் ப்ரஹ்மனைச் சாம்பராக்கிப் பின் உயிர்ப்பித்துப் படைப்புத் தொழிலை அநுக்ரஹித்த ஸ்தலம் ஆதலால் இப்பெயர் பெற்றது. திருக்கடவூருக்குக் கிழக்கே 1 மைலில் உள்ளது. தேவாரம் பெற்ற ஸ்தலம்; ''திருமெய்ஞ்ஞாநம்'' என வழங்கப் பெறுகிறது. ஶத்ரு ஸங்கர வடிவேலா - கடவூர் மயாநத்துக் குமரவேளின் பெயர் 'ஶத்ரு ஸம்ஹார வடிவேலன்' என்பது. வள்ளால் வள்ளலே. கலை - பல கலைகள். நல் சிதம்பர யோகியர், கச்சியில் வந்தவர்-காஞ்சிச் சிதம்பர முநிவர். பிளைத் தமிழ் விண்டு - க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழில் பாடி. இசை - புகழ்ந்த. வாஹா-வாஹநனே. வெல்லாத - மற்ற யாவரும் வெற்றி கொள்ளாத. முநி ஶிஷ்டர் பரஞ்சுடர் - நன்னெறியாளரான, பரஞ்ஜோதி முநிவா; திருவிளையாடற் புராண ஆசிரியர். விள் - சொல்லப்படுகின்ற. ஆர்யர் - ஶ்ரேஷ்டர். குருக்கள் - ஆதி ஶைவர். ஓர் - ஒப்பற்ற. நம்பி - நம்பியாண்டார் நம்பிகள்; 'திருத்தொண்டர் திரு அந்தாதி' பாடியவர். சொல்-புகழ்ந்து பாடியுள்ள. கடவூராம் தெய்வாலயம்-திருக்கடவூர் வில்வாரண்ய க்ஷேத்ரம்; ப்ரமரந்திர தெய்வாலயம்-ஸஹஸ்ரார கமல ஸ்தலம். வெள் ஓதிம மெய்த்வஜர் - வெள்ளை நிற அன்னப் பறவைக் கொடியுடையவர்களான பிரமர்கள். அன்னக் கொடி ப்ரம்மாவுக் குரியது.]

ஒருவர்க்கும் அவர் அட்குள் விழுகின்ற தேஇலா
நிலைமைக்கும் வினைவெக்கை தனைநொந்து மாய்கிறேன்
உலகத்தில் அருள்மிக்க குஹனென்றுன் நாமமே
அறிவேன்யான் —
உனபத்தொ டிருபத்ர செவியுங்கொ டாய்!கொல்! நீ
எனதுக்கம் வெகுகஷ்டம் அறிவுங்கொ ளாய்!கொல்! நீ
உயிர்விட்டு மடிதற்கும் இனிஅஞ்சி டேன்விஞஅய்
உலகேசும்;
இருவர்க்கு நடுவுற்ற உனைஎன்றும் நீதியோ?
எனைமெய்க்கை விடல்இப்ப டியும்எங்கள் வேலனே!
இயலுக்கும் இசைமற்றும் நடம்என்பதி யாவுமே
வளர்வேளே —
எழுபத்தொ டிருபக்தர் இறைதொண்டர் சீர்பரா
வியபக்தர் அருள்பெற்ற மொழிகொண்ட தேவனர்
இணைஅற்ற சதுரர்க்குள் உமைகொண்கர் பேர்கொள்வார்
குளிர்காவில்;
தருவர்க்கம் வளர்கொற்ற குடிமன்பு ராணஸா
ரமதற்பொ டறுபத்து மூவர்தம்பு ராணஸா
தநமிற்கு தவிமற்ற முதலிங்க ஓதுவார் கடவூராம் —
தவஸித்தி புரமிற்சொல் புனைதந்து பாடியே
வழிபட்ட விலுவத்து வநபா ம்பு போதனே!
ஜநநத்தை மரணத்தை விறல்கண்ட ஞாநியோர்
பெருமானே. (9)

[முடி சுற்றும் - (கர்வ மிகுதியால்) தலை சுற்றுதல். உனது - உன்னுடைய. உனது, உனது என்றுயிற்று. வனைதந்து - வளைந்து. ஓலம் - முறையீடு. ஒருவர்க்கும் - யாருக்கும். அவர் - அவரவர்

களுடைய. அட்குள் - காதுக்குள். அள் - காது. உன - உன்னுடைய. பத்தொடு இரு (10 + 2) பன்னிரண்டு. பத்ர செவி - இலை போன்ற அகன்ற காதுகள். கொடாய் கொல்! - கொடுக்க மாட்டாய் போலும்! அறிவும் கொளாய்! - அறிய மாட்டாய்! மடிதல் - இறத்தல். வினு அய் - வினவி; கேட்டு. ஏசும் - பழிக்கும்.

இருவர்க்கும் - இரு மனைவியர்க்கும். மெய் - உண்மையாக. இயல் - இயற்றமிழ். இசை - இசைத் தமிழ். நடம் - நாடகத் தமிழ். வளர் - வளர்த்த. எழுபத்தொடு இரு - (7×10+2)=72. பக்தர் - ஶிவனடியார்கள். பெரிய புராணத்திற் சொன்னபடி 63 தனியடியார்கள், 9 தொகையடியார்கள் ஆக மொத்தம் 72 பேர்கள். இறை-ஶிவபிரான். தொண்டர் தேவனுர் - 'தொண்டர் சீர் பரவுவார்' என்று சிறப்புப் பட்டம் பெற்ற 'அருண்மொழித் தேவ'ராம் சேக்கிழார். இணை அற்ற - ஒப்பில்லாத. சதுரர்க்குள் - ஶைவ ஸமய ஸந்தாந குரவர்கள் நால்வருக்குள். உமை கொண்கர் பேர் - உமாபதி ஶிவாசாரியார்) என்னும் பெயர். கொண்கர் - கணவர். கா - சோலை. தருவர்க்கம் - மர வகைகள். கொற்ற குடி-'கொற்றவன் குடி' என்னும் ஊர். மன்-தலைவன். புராண ஸாரம் - 'திருத்தொண்டர் புராண ஸாரம்' என்னும் செய்யுள் நடை நூல். அற்பொடு - அன்போடு. அறுபத்து மூவர்தம் புராண ஶாதநமிற்கு-63 நாயன்மார் கதையான பெரிய புராணமாம் (ஶாஸநப்) ஆதார பத்திரத்துக்கு. உதவி-'திருத்தொண்டர் புராண ஸார' நூலை உதவினவர். மற்று - மேலும். அமுதலிங்க...பாடியே - திருக்கடவூரில் வாழ்ந்த அமிர்தலிங்க ஓதுவார் கடவூர் மயாநத்து முருகவேள் மீது சீழ்க்கண்ட துதியைப் பாடியுள்ளார். தவஸித்திபுரம்-திருக்கடவூர். விலுவத்துவநம் - வில்வாரண்யம் - திருக்கடவூர். ஶம்புபோதனே - ஶிவனுக்கு உபதேஶித்தவனே. ஜநநம்-பிறப்பு. விறல்-வெற்றி.]

திருக்கடவூர் மயாநம் ஶத்ரு ஸம்ஹார ஶிங்கார வேலவர் துதி

[ திருக்கடவூர் உலாவின் ஆசிரியர் ஶ்ரீ ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகளின் இரண்டாம் குமாரர், திருக்கைலாய பரம்

பரைத் தருமபுர ஆதீநம் - திருக்கடவூர்த் தேவஸ்தாநம்-ஸ்ரீ அம்ருத லிங்க ஓதுவார் அவர்கள் இயற்றியது ]

(பதினன்கு சீர்க் கழி நெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)

வம்பன்வல் இடும்பன்வெகு வஞ்சநெஞ் சன்கொடிய
மாபாவி பொல்லா தவன்
வறிஞன்அறி(வு) இல்லாத முழுமூடன் உனதுதிரு
மலர்அடியை நினையா தவன்

தம்புவிஸூ வாஸம்இல் லாதவன் செய்திட்ட
நன்றிகொன் றவன்உ லுத்தன்
ஞாலத்தில் இனும்அண்ட கோளத்தி னும்தேடின்
நான்ஒருவன் அல்லா மலே

உம்பர்நரர் அஸுராதி எண்ணிறந் திடும்உயிருள்
ஒற்றைஉயிர் கண்ட(து) உண்டோ?
ஓஹோ! கிடைப்ப(து)அரி தானபொருள் காணின்ஆர்
ஒருவர்தாம் கைவிடுவர் காண்?

செப்பவள மேனியான் சேய்நீகை விடில்உனைச்
சிறுபிள்ளை என்று சொல்வர்
*தென்கடவை அயன்மயா நச்சத்ரு ஸங்கார
ஸிங்கார வடிவே லனே!

---

*தென் - அழகிய. கடவை - திருக்கடவூர். அயன் மயாநம் - ப்ரம்ம ஸ்மஶாநம்; திருமயாநம்.

அடாணு] 365. பிறப்பை ஒழிக்க [சாபு

தனதான தானத்த தனதான தானத்த
தனதான தானத்த தனதான

செடியான நோய்பற்றி அடியோடு வீழ்புற்று
தெஸவாயு சூழ்கொட்டில் புழுவீடு—
தெஸமாத காலத்தில் உறுமாத ரார்கர்ப்ப
ஜெடரேஷு வாஸத்தில் வளர்தேஹம்;

மிடியான தோர்துச்சில் கெடியான தோர்புக்கில்
வினைமேவு போகத்தின் விளைவாகி—
மிகுநாய்கள் பேய்கட்கும் நரிபாறு தீமட்கும்
மிசைவான காயத்தை விடுவேனோ?

இடியான கேதுற்ற புருஹூத னார்பெற்ற
இபமாது மாஸொர்க்க மகளான—
இவள்தேவ ஸேனைக்கும் அவள்கான வேடிச்சி
எனும்ஞான மானுக்கு(ம்) மணவாளா;

கடியான மாம்உக்ர மயில்ஏறி மாயுத்த
களமீது போரிட்ட கதிர்வேலா—
கடவூர்ம யானத்தர் குடவூர்சொல் வீரட்டர்
கடவூரில் மேவுற்ற பெருமாளே.(10)

[செடி - பாவம். புற்று - மண் புற்று. தெஸ வாயு - பத்து வாயுக்கள். கொட்டில் - ஜீவனாகிய பசு கட்டப் படடிருக்கும் கொட்டகை. புழு வீடு - க்ருமி வீடு தெஸ மாதம் - பத்து மாதம். ஜெடரேஷு - வயிற்றில். ஜடரம் - வயிறு. 'ஷு' வடமொழியில் ஏழனுருபு. மிடியான - வறுமையான. துச்சில் - ஒதுக்கிடம்; ஸொந்தம் இல்லாத தங்குமிடம். கெடி - அதிகாரம்

உடைய. புக்கில் - (புகுந்த வீடு;) புகலிடம் பாறு - பருந்து. மட்டும் - மன்னனுக்கும். மிசைவு ஆன - உணவாக ஆகும். காயம் - உடம்பு.

இடி - வானத்து இடி. கேது - கொடி. புருஹூதன் - இந்த்ரன். இந்த்ரனுக்கு இடிக்கொடி உண்டு. இபமாது-யானையால் வளர்க்கப் பெற்ற பெண்; தெய்வயானை. கானம் - காடு. வேடிச்சி - குறத்தி. ஞான மான் - வள்ளி. கடி - விரைவான. யானம் - வாஹனம். குடஊர் - திருக்கடவூர் மயானத் தலத்துக்கு மேற்கில் உள்ள ஊர். சொல் குட ஊர் வீரட்டர் - சொல்லப் பெறும் (திருக்)கடவூர் வீரட்டானத்தர் எனினுமாம். கடம்-குடம். பெரும் ஆளே-பெருமையை ஆள்பவரே! பெருமைக்கு உரியவரே!]

தோடி ] 366. துதி [ அங்க தாளம்

தனன தானன தத்ததன தத்ததன
தனன தானன தத்ததன தத்ததன
தனன தானன தத்ததன தத்ததன தந்ததான

தரும ஸ்ரீலர்அ கத்தியர்பு லத்தியர்ப்ர
மதிம ஹிபதி சித்ரவ்ரதர் ஸுக்திஸிவ
ஸுருமர் வாஸுகி ஸப்தகநி ரத்நகயி டன்கிரீடத்-

தமநி யாதிபன் விட்டுணுரு துக்கள்விதி
அரத நாகரர் ஸப்தரிஷி ஸுக்ரன்எம
தரும ராஜன்மு தற்றிஸைபு ரக்கும்எண்மர்
[இந்துஸோம;

ஸுருமர் காலன்ஒ ருத்தல்முக வ்ருத்தர்குண
வதிபி ராமிஸ ரச்சுவதி லக்ஷ்மிபுவி
ஸுஸிக பிஸுர்க குஸ்த்தர்நல துர்க்கைஸசிபி
[பஞ்சஸௌர்யர்-

தகுப ராஶர புத்ரர்முநி ஸித்தர்ஸ**ரர்
கபிலர் வாலகில் யத்தவர்அ ரக்கர்ருஶி
தரவி பூஷண சக்கிரிம ருத்வதிம்ரு கண்டுதேவ;

ஶருமர் சோழர்அ ரிட்டம்வரி குக்கிலிய
கலயர் காரிவ னப்பகையின் அப்பர்முனர்
தரும ஸேநர்என் அப்பர்மயி லைப்பதியில் வந்தபாவை-

தநுஜை யாம்எனும் அப்பர்தகு கொச்சைவயர்
தலைவர் மூவர்த மிழ்ப்பதிகம் முற்சொல்ஶிவ
ஸமய தேஶிகர் ம்ருத்யுவைமுன் வெற்றிகொள்ம்ரு
[கண்டுசேய்ஷட்;

கருமர் பாலகி ருட்டிணர்சொல் ஸுப்ரமண்யர்
இருவர் பாரதி பட்டர்தவ ஸித்திபுர
கவிஉ லாவின்நர் கச்சிமுநி புத்ரர்உய வந்ததேவர்-

களக ணேபரர்இ ரட்டைமணி மெய்த்தொடைசொல்
வணிகர் பேர்திலே முத்தருணை வெற்பர்தொழு
கடவை மாநகர் வெற்றிஅயில் பெற்றிலகு
[தம்பிரானே.(11)

[திருக்கடவூர்ப் பெருமானை வழிபட்டவர்களுடைய பெயர்கள் இப் பாடலில் தரப்பட்டுள்ளன. இந்தப் பெயர்களுள் பல திருக் கடவூர்த் தல புராண வசந நூலில் குறிக்கப் பெற்றவை. வழி பட்டோர் பட்டியலை இந் நூலில் 'திருக்கடவூர் - முக்யக் குறிப் புகள்' என்னும் தலைப்பில் காண்க. பாடல் 266 உம் பார்க்க.

ப்ரமதி மஹீபதி - ப்ரமதி மஹாராஜன். மஹீ - உலகம். பதி - தலைவன் (மன்னன்). கிரீடத் தமநிய அதிபன் - ஹேமகிரீட

ராஜன். தமநியம், ஹேமம் - பொன். விதி - ப்ரம்மா. அரத நாகரர் - ரத்நாகரர். ஶக்ரன் - இந்த்ரன். முதல் - முதலான. திஶை புரக்கும் எண்மர் - எட்டுத் திக்குப் பாலகர்கள். இந்து - சந்த்ரன். காலன் - யமதூதன். ஒருத்தல் முக வ்ருத்தர் - கரடி முகத்துக் கிழவராம் ஜாம்பவான். புவி - பூதேவி. ஶசீ - இந்த்ராணி. கபீஶர் - ஹநுமான். ககுஸ்த்தர் - ராமபிரான். பஞ்ச ஸூர்யர் - ஐந்து ஸூர்யர்கள். பராஶர புத்ரர் - வேத வ்யாஸர். முநி - முநிவர்கள். ஸுரர் - தேவர். வாலகில்யத் தவர் - வாலகில்யர்கள் ஆம் தபஸ்விகள் - கட்டைவிரலளவு வடிவமுள்ள ரிஷிக் கூட்டத்தார். ஶஶதர விபூஷண சக்கிரி - சந்த்ர பூஷண மஹாராஜன். ஶஶம்-முயல். ஶஶதரன் - சந்த்ரன். சக்கிரி - ராஜா. அரிட்டம் - காக்கை. வரி - புலி. குக்கிலிய - குங்கிலிய. காரி - காரி நாயனார். வனப்பகையின் அப்பர் - சிங்கடி, வனப்பகை இவர்களைத் தம் பெண்கள் எனச் சொல்லி அன்பு செய்த தந்தையாம் ஸுந்தர மூர்த்தி நாயனார். முனர் தருமஸேநர் என் அப்பர்- ஶமண மதத்தில் முன்பு இருந்தபோது 'தருமஸேநர்' என்று பட்டப் பெயர் கொண்டிருந்த திருநாவுக்கரசராம் அப்பர் ஸ்வாமிகள். பாவை - எலும்புகள் நிறைந்த குடத்தினின்று வெளிவந்த 'அங்கம் பூம்பாவை'. பாவை தநுஜையாம் எனும் அப்பர் - அந்தப் பெண்ணைத் தன் மகளெனக் கூறி ஆதரவு காட்டிய தந்தை போல்வாராம் திருஞாந ஸம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள். தநுஜை - மகள். தகு - தகுந்த. கொச்சைவயர் - சீகாழித் தலத்தவர். கொச்சைவயம் - சீகாழி. தமிழ்ப் பதிகம் - தமிழ்ப் பாடல்களாம் தேவாரம். ஶிவ ஸமய தேஶிகர் - ஶைவ ஸமய குரவர்கள். ம்ருத்யு - யமன். ம்ருகண்டு சேய் - மார்க்கண்டேயர். ஷட் கருமர் - ஆறு தொழில்களையுடைய அந்தணரான. பால கிருட்டிணர் - வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்துத் திருக்கடவூர்த் தலபுராண வசநம் எழுதிய ஸ்ரீ பால க்ருஷ்ண தீக்ஷிதர். ஸுப்ரமண்யர் இருவர் - ஒருவர் 'ஸுப்ரம் மண்யன்' என்ற இயற்பெயர் கொண்ட, திருக்கடவூர்-'அபிராமி பட்ட பாரதி' அவர்கள். (தவஸித்தி புரம் - திருக்கடவூர். கவி-

புலவர்.) மற்ருெருவர், உலா விள்நர் - திருக்கடலூர் உலாவைப் பாடிய ஸுப்ரம்மண்யக் கவிராஜ மூர்த்திகள். கச்சி முநி புத்ரர் - க்ஷேத்ரக் கோவைப் பிள்ளைத் தமிழில் கடலூரையும் வைத்துப் பாடியுள்ள காஞ்சி சிதம்பர முநிவர். உய வந்த தேவர் - ஶைவ ஸித்தாந்த சாஸ்த்ரங்கள் பதினன்குள் 'திருக்களிற்றுப்படியா'ரைப் பாடிய உய்ய வந்த தேவ நாயனுர். கள கணேஶர் - கள்ள விநாயகர். தொடை - மாலை. வணிகர் - வைஶ்யர்-செட்டியார், கள கணேஶர் பேர்திலை முத்து - கள்ள வாரணப் பிள்ளையார் திரு இரட்டை மணிமாலை பாடிய ந. க. முத்துச் சிதம்பரச் செட்டியார். திலை முத்து-முத்துச் சிதம்பரம். அருணை வெற்பர் - அருணகிரிநாத ஸ்வாமிகள். அருணை - அருணைசலம். வெற்பு - மலை. கடவை - திருக்கடலூர். அயில் - வேல். தம்பிரான் - தமக்குத் தாமே தலைவராய் இருப்பவர்; கடவுள்.]

ஆஹிரி ] 367. அகப்பொருள் [ த்ரிபுடை

தனதத்தன தானத் தனதன
தனதத்தன தானத் தனதன
தனதத்தன தானத் தனதன தனதான

நவரத்திந(ம்) மாணிக் கமு(ம்)மர
கதபச்சைவை டூர்யக் கொழுமணி
நவமௌக்திகம் நீலச் செழுமணி பசுமேதம்—
நலவச்சிர(ம்) மேன்மைப் பவழமும்
ஒளிர்பத்தும ராகப் பெயர்பலர்
நவில்புட்பஇ ராகத் தையும்அணி மணிமார்பில்;
சிவரத்திநம் ஆகித் திகழ்தரும்
அதிஅற்புதன் நீசற் றெனைஅணை
செயில்நிற்கது தோஷத் தினைஇழை தருமோ?சொல்—

செழுநத்திழை கோஷத் துளும்அலை
கடல்கத்திடும் ஓசைக் குளு ம்`மதி
செயும்வெப்பவி சேஷத் துளும்இவள் சிதையாளோ?

தவரத்திநம் ஆகப் பிறவிகொள்
சிறுவற்குநல் வேதத் திருநெறி
தழுவுற்றமெய் மாணிக் கிடர்புரி மனைத் —

தவறுக்கென மோதித் தரும்உதை
சரணத்துளும் வாமப் பதம்அது
தனதப்படி ஆ(ம் மெய்க் கிடம்உறு தலினல்என்(று);

அவரத்திநம் ஏமற் கிடர்செய்தும்
உரிமைப்படி வாதிட் டரன்உயர்
வதனைப்பறி ஸாமர்த் தியஉமை அருள்பாலா! —

அமுதக்கொடி காலற் குயிர்தரும்
விலுவக்கடம் ஆகத் திகழ்தரும்
அமுதக்கட வூரிற் குடிஉறை பெருமாளே. (12)

[நவ - புதிய. மௌக்திகம் - முத்து பசுமேதம் - கோமேதகம். நல - நல்ல. வச்சிரம் - வைரம். பத்தும ராகம் - பத்மராகம். நிற்கு – நினக்கு. தோஷம் - குற்றம். செழு நத்து - செழுமையான ஶங்குகள். கோஷம் - ஒலி மதி - சந்த்ரன். ஶங்க நாதமும், அலைகடல் ஓசையும், சந்த்ர கிரணமும் விரஹ தாபத்தில் இருக்கும் பெண்ணுக்குத் துன்பம் விளைவிப்பனவாம்.

சிறுவன், மாணி - இளைஞனும், ப்ரம்மசாரியுமான மார்க்கண்டேயன். ஶமன் - யமன். சரணம் - கால் வாமப் பதம் - இடது பாதம். தனது - தன்னுடையது. மெய்க்கு இடம் - ஶிவனார் திருமேனியில் இடப் பாகத்தில். அவரத்திநம் - அவர் அத் திநம் எனப்

பிரிக்க. ஏமற்கு - எமனுக்கு. தவறுக் உமை—ஸ்ரீவஞர் தம் இடப் பாதத்தால் எமனை உதைத்ததாலும், ஸ்ரீவபிரான் இடப் பாகத்தில் உமா தேவியார் இருத்தலாலும், எமனை உதைத்த பாதம் தேவியின் திருவடியாக ஆதலின், யமனை உதைத்தது தான் தான் என்று கூறி அரனுரின் உயர்வைப் பறித்துக் கொண்ட உமா தேவி. ''கூற்று மரித்திடவே உதை பார்வதியார்க்கும்'' திருக் கடவூர்த் திருப்புகழ். அமுதக் கொடி - உமையம்மை. அமுதம் அழியாமை தரும் சாவன் அழிவை உண்டாக்குவன்; அவனுக்கு உயிர் தந்தவள் தேவி. விலுவக் கடம் - வில்வக் காடு. கடம் - காடு. அமுதக் கடம் - அம்ருத கலஶம்.]

ஸஹாஞ ] 368. உபதேஶம் பெற [ ஜம்பை

தானனம் தனதனன தனதான தானதன
தானனம் தனதனன தனதான தானதன
தானனம் தனதனன தனதான தானதன தனதான

நாழியும் பொழுதை அதி விருதாவி லேசெலவி
டாமல்உன் கருணைபொழி முகம்ஆறும் ஈரறுகண்
நாரஜங் களும்ஒர்அறு திருவாயும் ஆறுநுதல்
[களு(ம்)மேல்முந்—

நாலுதின் புயமும்அறு திருமார்பும் அறிருகை
வாரிஜங் களும்இனிய திருமேனி ஆர்எழிலும்
நாதகிங் கிணிபயிலும் இருதாளும நாளும்இசை
[நனிபாடி;

வாழிஎன் றழகுபொழி கவிமாலை சூடிஉனை
'வா!'எனும் திருவரவு பலகூறி வாஸமலர்
மாலைகொண் டுனதுஷடு களமீது பூணவரம்
[அருள்நாளே!—

மாணவன் பொரஎளையும் இனிதாளும் ஆதரவொ
டாணவம் கெடஎனது குருநாதன் ஆகிமணி
வாசகம் தருபரம உபதேஸம் ஈயும்ஒரு திருநாளே!;
கோழிக்கும் கொடிஉடைய குமரேஸ! தோகைமயில்
ஏறிவந் தடியவரை இனிதாளும் வேல்முருக!
கூடலன் கொடியன்இரு பிளவாக மாவைஅடு
[குணநீதா! —
கோதமன் குடிலில்உயர் தவமேசெய் கோதைசிவ
காமஸுந் தரிகவுரி அபிராம நாயகிம
கோதைமன் பரசுபக வதிகாளி பார்வதிகண்
[மணிபோல்வாள்;
காழிஎன் பிரமபுரம் உறைதேவி பால்பருகு
ஞானபந் தனு(ம்)முதிய திருநாவின் ஈஸனும்ஓர்
கானஸுந் தரனும்இசை தமிழ்வேத கீதம்ஒலி
[பழமூதூர் —
காரிகுங் கிலியக்கலைக ஏயநாய னரொடபி
ராமிசெங் கழல்பரவு மறையோர்சொல் காலரிபு
காலஸங் கரர்மருவு கடவூரில் மேவிவளர் பெருமாளே (13)

[நாழி - நாழிகை; அறுபது விநாடி கொண்டது. பொழுது - நேரம். அதி - மிகவும். விருதா - வீணாக. ஈர்அறு - (2 × 6) 12. நாரஜம் - தாமரை. முந்நாலு - (3 × 4) 12. வாரிஜம் - தாமரை. ஷடு களம் - ஆறு கழுத்துகள். பொர - போல. கூடலன் - பகைவன். மாவை - மாமரத்தை அடு - பிளந்து வேறுபடுத்திய. கோதமன் - கௌதம முநிவர். குடில் - பர்ணசாலை. மகோதைமன் - கொடுங்கோளூரின் மன்னராம் சேரமான் பெருமாள் நாய

ஞர். பரசு - வழிபட்ட. பகவதி - கொடுங்கோளூர்ப் பகவதி. காழி - சீகாழி. தேவி - திருநிலை நாயகி; ஸ்திர ஸுந்தரி. க்ஞாந பந்தன் - திருஞாந ஸம்பந்தர். திருநாவின் ஈசன் - திருநாவுக்கரசர். காந ஸுந்தரன் - 'திருப்பாட்டு' இசைத்த ஸுந்தர மூர்த்தியார். பழம் மூதூர் - மிகப் பழைமையான ஊர். அபிராமி...மறையோர் - அபிராமி தேவியின் திருவடியை வழிபட்ட அபிராமிப் பட்டர். கால ரிபு - எமனுக்குப் பகைவனை கால காலன் கால ஸங்கரர் - கால ஸம்ஹார மூர்த்தி.]

ஆரபி ] 369 துன்பம் அற [ ஆதி

தானத்த தானன தனதான

போதப் பிதாமகன் விதியோடே—
போய்முற்றும் நாயென அலையாமல்;
நாதப் பிரான்உனை நணுகாமல்—
நாண்அற்று நான்அ(ல் லல் உறலாமோ?
பூதப் பிரேதமும் இசைபாடும்—
போர்வெற்றி வேலவ! புகழாளர்;
வேதப் பிராமணர் கடவூரில்—
வீரட்ட(ர்) மேவிய பெருமாளே.(14)

[போதம் - வேத அறிவு. பிதாமகன் - ப்ரம்மன். விதி - தலை விதி. அலையா - அலைந்து, நாண்-வெட்கம். பிரேதம்-உயிர் நீங்கிய உடம்புகள்; ஸ்தூல உடம்பை நீத்த ஜீவர்கள்.]

பிலஹரி ] 370. துதி [ ஆதி

தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன தந்ததான

யமனை உதைத்தவர் மதனை எரித்தவர்
கரியை உரித்தவர் ஜலதரனைத்தெறும்
இறையவர் தக்கனை அஜமுகம் இட்டவர்
[மிண்டர் ஊர்மூன் (று) —

எரிய நகைத்தவர் குருடன் எனப்பொருள்
படுபெயரைப்பெறு கொடிய அரக்கனை
இடறு கழுக்கடை உடையவர் பற்பர்சம் பிண்டபாணி;

ஸமனொர் முத்தலை வடிவுடை உக்ரவெம்
படைகொடமுத்திய பாஸிவ முககணர்
தாமன் முடிக்கணி பவுலிக ரக்கதை பங்கிலொடச் —

சருபர் வெலுக்துள எருமை பெருத்தது
கருமை நிறத்தது பருமன் மிகுத்தது
தமஸ கநிக்கொரு பெயர்பெற(ப்) பற்றது செண்டுபாய;

நமனை உதைத்தவர் இதழி முடித்தவர்
விடையை நடத்துநர் ஜடையை விரித்தொரு
நதியை அடைத்தவர் மதியை உடைக்கலம்
[என்றபோதே —

நளிர்முடி வைத்தவர் குளிர்அரவைத்தரி
கயிலை மலைக்கிறை வரிமறி கைச்ஸிலை
நரஹரி தட்டையில் உயர்நிரி விக்ரமர் தங்கள்தோலர்;

ஸமனை உயிர்த்தெழ அருள்செய் பரப்ரம
ஸொரூபர் மறைச்சிர முநிவர ரெனப்ரம
சரிய நெறித்தவ யுவமை மைத்வர்க்கு கண்டுசேயைத் —

தகவை யடுத்தமு அகவை நிலைத்துற
அருணி இரத்திந கயிடனை மிக்கருள்
சரணர் திருங்கட லையில்பயி லிற்றிரி தம்பிரானே.(15)

[மதனை - மந்மதனை. கரி-(தாருகா வநத்து முநிவர்கள் அனுப்பிய) யானை. ஜலதரனை - ஜலந்தராஸுரனை. செறும்-தண்டித்து அழிக்கும். தக்கன்-தக்ஷ ப்ரஜாபதி. அஜமுகம் - ஆட்டின் முகம். மிண்டர் - திண்ணியர். ஊர் மூன்று-திரிபுரங்கள். நகைத்தவர்-சிரித்தவர். குருடன் - அரக்கனை-அந்தகாஸுரனை. இடறு- குத்திக் கொன்ற. கழுக்கடை - ஶூலம். பற்பர்-பத்மத்தில் (தாமரையில்) அமர்ந்திருக்கும் ப்ரம்மன். கம் விண்ட பாணி - (ஐந்தாவது) தலையைக் கிள்ளிய திருக்கையினர். ஶமனை - யமனை. முத்தலை - ஶூலம். தருமன் - யமதருமன். மவுலி - கிரீடம். கரக் கதை - கையில் கொள்ளும் கதாயுதம். பங்கில் - பக்கத்தில். வலுத்துள சருமம் - தடித்த, வலிமை மிக்க தோல். தமஸ - தாமஸ; மெதுவான. கதி - நடை. தமஸ கதிக்கொரு பெயர் பெறும்: மெதுவாக நடப்பவர்களை 'எருமை மாடுபோல் நடக்கிறாய்' என்று உதாரணங் காட்டி உலகத்தார் பேசுவர். செண்டு - பந்து. செண்டு பாய - நிலைகுலைய; (ஒரு பக்கத்தில்) பந்துபோல் உருண்டு விழ எனினுமாம். நமனை-யமனை. இதழி-கொன்றைப் பூ. முடித்தவர் - தலையில் தரித்தவர். விடையை - ரிஷபத்தை. நடத்துநர்-அதன் மேல் ஏறிச் செலுத்துபவர். நதி - கங்கை. அடைத்தவர் - தம் ஜடையில் அடைய நிறுத்தியவர். மதி-சந்த்ரன். நளிர் முடி-குளிர்ந்த தம் ஜடை முடியில். குளிர் - எப்போதும் குளிர்ச்சியாக இருக்கும். அரவை - பாம்பை. வரி - புலி. மறி - மான். கைச் ஶிலை - கைம்மலையாம் யானை. நரஹரி - நரஸிம்மம். குட்டையில்

உயர் - முதலில் குட்டையாயிருந்து பின் நீண்டு உயர்ந்த. திரிவிக்ரமர் - த்ரிவிக்ரம அவதாரம் எடுத்த திருமால். தோலர் - நரஸிம்மம், ஹிரண்ய வதத்துக்குப் பின் கோபாவேஶம் அடங்காது உலகைக் கலக்கியபோது ஶரபப் பக்ஷியாகச் ஶிவபிரான் தோன்றி நரஸிம்மத்தை அடக்கிக் கொன்று அதன் தோலையும் போர்த்திக் கொண்டார் என்பதும், திருமால் உலகளந்த பின்னரும் தம் வேகம் தணியாது இருந்த நிலையில் அத் த்ரிவிக்ரமரை அடக்கி அவர் உடல் தோலைச் சட்டையாக அணிந்து 'சட்டைநாதர்' ஆனார் என்பதும் புராண வரலாறுகள். புலித்தோல், மான்தோல், யானைத்தோல், (நர)ஸிங்கத்தோல், த்ரிவிக்ரமர் தோல் இவை புனைந்தவர் ஶிவன். மறைச்சிறு முநிவரன் - மார்க்கண்டேயன். யுவன் - இளைஞன். மஹத்வ - பெருமை மிக்க. தக - தகுதியாக. வை - வைக்கப் பெற்ற. ஷடுத்தஶ - (6+10) 16. அகவை - வயது. நிலைத்து உற - நிலையாகச் சிரஞ்ஜீவியாக இருக்கும்படி. இரத்திந கயிடன் - ரத்ந கைடன் என்ற பக்தனுக்கு. சரணர் - திருவடியுடைய அரனார் தம். திருக்கடவை - திருக்கடவூர். மயிலில் திரி - மயில் மேல் உலாவரும்.]

ஸுரடி.] 371. துதி [ரூபகம்

தய்யத் தய்யனு தந்ததான
தனனு தானந் தானந் தந்ததான

வெள்ளைப் பிள்ளையார் தும்பிபோல்வார் —
விடையார் சேய்அட் டானந் தம்பிரானார்;
வெள்ளப் பிள்ளையார் விண்டுவேதா —
விழைதான் மூலட் டானந் தெம்பிரானார்;
பள்ளப் பிள்ளையார் பண்டைஊராம் —
பழமா நாகத் தாகக் குன்றினார்மெய்க்;
கள்ளப் பிள்ளையார் தம்பிஆனாய்!
கடவூர் வீரட் டானந் தம்பிரானே.(16)

[வெள்ளைப் பிள்ளையார் - திருவலஞ்சுழி ஶ்வேத விநாயகர். தும்பி - யானை. விடையார் - ரிஷப வாஹநச் ஶிவபிரான். சேய் - மகன். அட்டாந - எட்டு வீரட்டாநத் தலங்களிலும் வீற்றிருக்கின்ற. தம்பிரானுர் - தமக்குத்தாமே தலைவரானவர். வெள்ளப் பிள்ளையார் - திருப்புறபயம் என்னும் ஸ்தலத்தில் உள்ள 'ப்ரளயம் காத்த விநாயகர்'. வெள்ளம் மிகுந்த நீர். விண்டு - விஷ்ணு. வேதா - ப்ரம்மா. மூலட்டாநம் - திருவாரூர்த் திருமூலஸ்தாநம், புற்றிடம் கொண்டார் ஸந்நிதி. 'தம்பிரானுர்', 'எம்பிரானுர்', என்பவையும், முறையே எட்டு வீரட்டங்களிலும், திருவாரூரிலும் திகழும் கணபதியையே குறிக்கும். பள்ளப் பிள்ளையார் ... பழமா நாகத்து - பழம் பெருமலையாம் வ்ருத்தாசலத்தில் 'ஆழத்து (பள்ளத்து)ப் பிள்ளையார்' உள்ளார். பள்ளம் - ஆழம். பண்டை - பழைய. நாகம் - மலை. ஆகக் குன்றினுர் - மலை போல் பெரிய திருமேனியர். ஆகம் - உடம்பு கள்ளப் பிள்ளையார் - திருக்கடவூர்ச் சோர கணபதி.]

(முருகவேள் அருட்புகழ் முற்றும்)

# 30. அபிராமி அம்மை கீர்த்தனை

(ஆசிரியர் பெயர் தெரியவில்லை)

ராக மாலிகை ] 372 [ ஆதி

பல்லவி

நித்ய கல்யாணியே! நிகில லோக நாயகி!
நினைத்த வரம்தந்(து) அருள்வாய்! அம்மா! (நித்ய)

அநுபல்லவி

உத்தமீ! உம்பர்நாட் டொளிமிகும் கடவைவாழ்
உண்மை ஜகந்மோஹிநி உமைஅபி ராமித்தாயே! (நித்ய)

சரணம் — 1

ஆரபி மாநம்லைவத்து அருள்பவர் உன்னை அல்லால்
அடியனேன் *பஸசனாய்ப் பிறந்தால் எனக்கென்னவி
சாரங்காத்து ரக்ஷிப்ப தானதுனது பாரம்
ஸாம சாநப்ரியே! ஸதிஶிவ ஶங்கரீ! (நித்ய)

சரணம் — 2

பூர்ணசந்த் ரிகைவிலணிற் பொலிய அமாவாஸையில்
புனையும்தோ டினைஅபி ராமிபட்டர் பொருட்டெறி
பூர்ணீ! கருணைநந்த பைரவி! பூவில் உன்றன்
பூம்பதம் கண்டால் துயர் பூண்பதுண் டாபோ? தாயே!
(நித்ய)

சரணம் — 3

ஶங்கரா பரணாரமம் எங்கள் அமுதீஶரின்
மங்கள வதீ! ஶுக பாஷிணீ! மாதங்கி!
நங்கையே! பிந்து நாத நாமக்ரியா ஶக்தீ!
நாயகி! ஶுபவர தாயகி! அபிராமீ! (நித்ய)
[*பஶகன் - கொசுவைப் போன்றவன்]

# 31. ஸ்ரீ அபிராமிப் பட்டரைப் பற்றிய பாக்கள்

## (அ) அபிராமிப் பட்டர் அருட்புகழ்

(ஆசிரியர் : அருட்கவி தவத்திரு ஸாது ராம் ஸ்வாமிகள்)

373. அபிராமிப் பட்டர் துதி (கட்டளைக் கலித்துறை)

விளித்த கணத்தில்என் நெஞ்சுள் வருவன; மெய்அன்பினிற்
குளித்த பெருமைய; கும்பிட்டு யாரும் கை கூப்புவன;

களித்த தமிழ்நூல் அபிராமி அந்தாதி கட்டுரைத்தே
அளித்த கடவூர் அபிராமிப் பட்டர் அடிஇணையே.
[ விளித்த - (நினைத்து) அழைத்த.]

துதிப் பதிகம் (நேரிசை வெண்பா)

374

அபிராமி அம்மைபதி கங்கள்ஓர் மூன்(று) ஆய்பாட்(டு)
அபிராமி அந்தாதி ஆக - அபிராமப்
பாத்தமிழ்ஓர் நூற்றுமுப்பான் எட்டுமுந்நூ(று) ஆண்டுமுனர்
யாத்தநினை ஏத்தநா ஏது? (1)

[ ஓர் மூன்று - மூன்று என்னும் இச் சொல் இடைநிலைத் தீவகமாக நின்று, முன்பக்கம் சேர்ந்து மூன்று பதிகங்கள் என்றும், பின் பக்கம் சேர்ந்து மூன்று தனி உதிரிப் பாடல்கள் என்றும் பொருள் தரும். பா... எட்டு = 138 கவிகள். முந்நூறு ஆண்டு முன்னர்-300 வருஷங்கட்கு முன்பு. (ஸரபோஜி மன்னன் பட்டருக்குக் கள மாந்யம் அளித்ததைக் கூறும் பட்டயப் பாடல்படி அந்த வருஷம் சாலிவாஹந ஶகம் 1639-க்குச் சரியான கி. பி. 1711 ஆகின்றது.) யாத்த - பாடிய. ஏத்த - புகழ. ]

375

அமாவாஸை பௌர்ணமியா ஆமாறு செய்யும்;
உமாதேவி பேர்அருள்மிக்(கு) ஊட்டும்; — குமாரி
ஸுபிராமிப் பக்தர்ஸர போஜி துதிசெய்
அபிராமிப் பட்ட! நின்வாக்(கு) அன்பு. (2)
[ ஸு பிராமி - நல்ல ப்ராஹ்மி தேவி. ]

376

அமிர்தலிங் கையர் அருள்ஸுப்ர(ம்) மண்ய
அமிர் தமே! தென்கடவூர் அண்ணல்—அமிர்தகட
நாதன் அபிராம நாயகியோ(டு) எங்கள்முனர்ப்
போதருமா(று) ஆசி புகல்! (3)

[ அமிர்த லிங்கையர் - அபிராமிப் பட்டரின் தந்தையார் பெயர். ஸுப்ரம்மண்யன் - அபிராமிப் பட்டரின் இயற்பெயர். ]

377

இருட்டுநாள் ஒன்றைஒளி நாளா இயக்கில்
இருட்(டு)உளத்தில் எற்(கு)ஒளிஏற் றுதோ?—குருட்டுக்கும்
கண்பார்வை நல்கும் கடவூர் அபிராமி
ஒண்பாஅந் தாதியிற்பாட்(டு) ஒன்று. (4)

[இருட்டு நாள்-அமாவாஸைத் திநம். ஒளிநாள்-பௌர்ணமி.]

378

கலித்துறையிற் கள்ளக் கணேசுரர் பதிகம்
ஒலித்துரைசெய் கட்டளைப்பா ஓதில்—கலித்துறையைக்
கட்டளையா நீக்கிக் கவலைக் கடல்கலக்கி
விட்டளைய லாம்இன்பம் மேல். (5)

[ கலித்துறை...கட்டளை-கட்டளைக் கலித்துறை. கலி-துன்பம். துறை - வழி. கட்டளையா - கட்டாயமாக.]

379

காலஸங்கா ரக்கடவுள் காண்கடவு ரார்பதிகம்
சாலஇரண் டுக்(கு) இருபான் தண்கவிகள்—ஏல
இயற்கை வருணனைகள் ஏற்றி இயம்(பு)உன்
செயற்(கு)ஐய! ஒப்(பு)ஏது? செப்பு. (6)

380

காலஸங்கா ரக்கடவுள் வெண்பாச்சந் தக்கதம்பம்
போலவந்த பின்முடுகுப் பொற்பதிகம் – கோலஇயல்
நற்றமிழில் வாய்மலர்ந்த நாவலனே! பாவலனே!
குற்றம்உண்டோ? நின்கவிக்குக் கூறு. (7)

[ பின்முடுகு - காலஸங்கார மூர்த்திப் பின்முடுகுப் பதிகம்.]

381

கும்பிருட்டைப் பூரணையாக் காட்டிக் கொடுக்கஅன்(று)எம்
அம்பிகைதன் தண்கா(து) அணிதோட்டை — எம்பிரான்
உம்பொருட்டே வீசி எறிந்தாள் உயர்விசும்பில்;
எம்பொருட்(டு)அந் தாதி எழ. (8)

[விசும்பு - ஆகாயம்.]

382

தமிழ்மொழியில் நின்போல் ஜகதம்பா தானை
அமிழ்(து)அ(ன்)னவாக் காற்புகழ்ந்தார் ஆரே! — குமிழ்நாஸி
அம்மை அபிராமி அந்தாதி ஒன்றேசான்(று)
எம்மைஇவண் கேட்பின் இதற்கு. (9)
[குமிழ் - குமிழ மலர். நாஸி - மூக்கு ]

383

பட்டர்என்ற பேரும் பரம்பரைக்குப் 'பாரதியார்'ப்
பட்டமும்பெற்(று) அன்(று)உயர்ந்த பட்டனே! — சட்டக்
கவுஸிககோத் ரத்திற் கடவூரில் வந்த
அவுதஸிய மே! அமுதே! ஆள். (10)

[பட்டனே! - அந்தணனே!. சட்ட - நன்றாக. அவுதஸியம் - பால். அமுது - தேவாம்ருதம்.]

(அபிராமிப் பட்டர் அருட்புகழ் முற்றும்)

## 31. (ஆ) தனிப் பாடல்கள்

(ஆசிரியர் : பாலகவி முத்து. கோ. ராமனுர்)

(கட்டளைக் கலித்துறை)

384

துடிபோலும் மெல்லிடை யாள்அபி ராமி துணைஉளதேல்
முடியாப் பொருள்எதும் இல்லை எனஇந்த மூதுலகில்
அடியார் அபிராமிப் பட்டருக் காக அமைத்திதியை
ஓடியாத பூர்ணிமை ஆக்கினள் தோடெறிந்(து)
[ஓர்மின்களே! (1)

[ துடி-உடுக்கை. மூதுலகில் - பழைய உலகில். அமைத் திதி - அமாவாஸைத் திதி. ஓடியாத - குறைவுபடாத. ஓர்மின்கள் - ஆய்ந்து அறியுங்கள்.]

385

ஓவியத் தா(டு)எழு தொண்ணு உருவை உளத்(து) எழுதி
ஆவி உடல்பொருள் யாவும் அபிராமிக்(கு) அர்ப்பணித்தே
தேவி உபாஸனை சற்றும் மறவாதே தேன்தமிழிற்
பாவில் உரைஅபி ராமிப்பட் டர்பதம் பற்றுவமே. (2)

(அபிராமிப் பட்டரைப் பற்றிய பாக்கள் முற்றும்)

[திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு முற்றும்]

சுபம்

## திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு -

## பாடல் முதற் குறிப்பு அகராதி

(பாடல் முதற்குறிப்பு அகராதி முற்றும்)



# விற்பனைக்கு உரிய புஸ்தகங்கள்

| | | ரூபா. காசு |
|---|---|---|
| 1. | கட்டுரைக் கதம்பம் | 3 – 00 |
| 2. | சேயும் தாயும் (கந்தர் அலங்காரம் & அபிராமி அந்தாதி – மூலம் மட்டும்) | 1 – 00 |
| 3. | திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு | 10 – 00 |
| 4. | திருத்தணித் திருவிதிகை அருட்புகழ் | 3 – 50 |
| 5. | தேவியும் அருணகிரியாரும் | 6 – 00 |
| 6. | வேல் மாறல் படமும், புஸ்தகமும் (அந்ந தாநத்துக்கு ரூபாய் நான்கு சேர்த்து) | 8 – 00 |
| 7. | வேல் மாறல் புஸ்தகம் மட்டும் (தமிழ்) | 2 – 00 |
| 8. | வேல் மாறல் புஸ்தகம் மட்டும் (ஹிந்தி) | 1 – 00 |
| 9. | வைஷ்ணவி பிள்ளைத் தமிழ் (குறிப்புரையுடன்) | 5 – 00 |

கிடைக்கும் இடங்கள் :

1. ஸ்ரீமதி S. நீலா ஸுப்ரம்மண்யன்,
"ஸ்ரீ வைஷ்ணவி இல்லம்"
எண் – 4, 39 ஆம் தெரு.
நங்கை நல்லூர், சென்னை-600 061.

2. "பொங்கி மடாலயம்"
பொங்கி மடாலயம் தெரு. (ஏ. ஜீ'ஸ் காலனி அருகில்)
நங்கை நல்லூர், சென்னை 600 061

3. "ஸ்ரீ வைஷ்ணவி மாதர் திருப்புகழ் ஸபை."
D 2, டில்லிச் சாலை, வட்டம்-27,
நெய்வேலி – 3 (607803) (தெ. ஆ மா.)

4. "ஸ்ரீ பொங்கி மாதா திருப்புகழ் ஸங்கம்"
E-10. ராஜேந்த்ர ப்ரஸாத் சாலை,
வட்டம்-17, நெய்வேலி – 1 (607801) (தெ. ஆ. மா.)



புகைப்படம் : N. ராமக்ருஷ்ணை

குங்கிலியக் கலைய நாயனார்



புகைப்படம் : N. ராமக்ருஷ்ணு

திருக்கடவூர்க் கோயில் ராஜ கோபுரம்